# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

## தொகுதி 4


பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி
மா.ரா. அரசு





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

## தொகுதி 4


பதிப்பாசிரியர்

இ. சுந்தரமூர்த்தி

மா.ரா. அரசு






**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**International Institute of Tamil Studies**

இரண்டாவது முதன்மைச்சாலை

மையப் பல்தொழில் நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Indhiya Vidutalaikku Munthaiya Thamil Idhalgal, Part-IV |
| Editors | : | E. Sundaramoorthy<br>M.R. Arasu |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Tharamani, Chennai - 600 113<br>Ph:22542992 |
| Publication No | : | 519 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 2004 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 18.6 Kg Maplitho |
| Size of the Book | : | Demy 1/8 |
| Printing Types | : | 10 Points |
| No. of Pages | : | xiv+146 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.45/- (Rupees Forty five only) |
| Printing | : | Chennai Micro Print (P) Ltd<br>130, Nelson Manickam Road<br>Aminjikarai, Chennai - 600 029<br>Ph: 23740099 |
| Subject | : | Studies on Tamil Journalism |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

அரிய பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாகத் தொகுத்து வெளியிடுவது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தொடர் பணிகளில் ஒன்றாகும். அவ்வகையில் பல்வேறு நிலைகளில் இதுகாறும் சுமார் 1500 கருத்தரங்குகள் இந்நிறுவனத்தால் நடத்தப்பெற்றுள்ளன. 1999 ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டாக்டர் மா.இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையத்துடன் இணைந்து இதழியல் கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தியது. இக்கருத்தரங்கக் கட்டுரைகளில் நான்கு தொகுதிகள் வெளிவந்துள்ளன.

தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. புதிய இலக்கிய வகைகளையும், கவிஞர்களையும், எழுத்தாளர்களையும் அறிமுகப்படுத்துவதற்கு இதழ்களே வாயில்களாக அமைந்தன. தமிழகத்தில் அரசியல், சமுதாய, பொருளாதார மாற்றத்திற்கு இதழ்கள் குறிப்பிடத்தக்க பங்காற்றியிருக்கின்றன. இவ்வகையில் தமிழ் இதழ்கள் பற்றிய இக்கருத்தரங்கக் கட்டுரைகள் இலக்கிய வளர்ச்சிக்கு இதழ்கள் ஆற்றிய பங்கை மிக விரிவாக ஆராய்ந்துள்ளன.

இத்தொகுப்பு நூல் விவேகபோதினி, கலைமகள்(புதுவை), கலாநிலையம், பிரசன்ன விகடன், கலைமகள்(சென்னை), மணிக்கொடி ஆகிய இதழ்கள் பற்றிய அரிய செய்திகளை ஆய்வுநோக்கில் தருகின்றது. பெ.சு. மணி எழுதிய சுப்பிரமணிய சிவா என்ற கட்டுரையும், அ. கந்தசாமி எழுதிய இதழியல் சட்டங்கள் என்ற கட்டுரையும் இந்நூலுள் சேர்க்கப்பெற்றுள்ளன.

1835இல் அச்சகங்களைத் தொடங்கி நடத்தலாம் என ஆங்கில அரசு சட்டங்கள் இயற்றியதின் பயனாக விடுதலை உணர்வுகளை எதிரொலிக்கும் இதழ்கள் தோன்றின. அவ்வகையில் தோன்றிய இவ் ஆறு இதழ்களும் விடுதலை உணர்வைத் தூண்டுவதற்கும் மக்களை நல்வழிப்படுத்துவதற்கும் எவ்வகையிலெல்லாம் தம் பங்களிப்பைச் செய்தன என்பதை இக்கட்டுரைகள் தெளிவுபடுத்தியுள்ளன. இவ் இதழ்களைத் தொடர்ந்து சுப்பிரமணிய சிவா நடத்திய இதழ்கள் குறித்த ஆய்வுகள் பற்றிய கட்டுரையும், இதழியல் சட்டங்களை

முழுமையாகத் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற நோக்கில் ஒரு கட்டுரையும் தொகுதியின் இறுதியில் இடம்பெற்றிருப்பது மிகப் பொருத்தமாகும். 1908 தொடங்கி 1933 முடிய 25 ஆண்டுக்கால இதழியல் வரலாற்றைத் தெரிந்துகொள்ளும் ஓர் அரிய பெட்டகமாக இந்நூல் விளங்குகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் அனைத்து இதழ்களுமே குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்தாலும் மணிக்கொடி இதழ் பெரும் சிறப்புக்குரிய ஒன்றாக அமைந்தது என்பதை இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் பலரும் அறிவர்.

தமிழ் நாட்டில் சமூக அரசியல் வாழ்வில் மக்கள் உள்ளங்களில் விடுதலை எழுச்சியைத் தூண்டிவிடுதல், மக்களுக்கு இலக்கியச்சுவையை உணர்த்துதல் என்ற குறிக்கோளில் தொடங்கிய இயக்கம் என்று மணிக்கொடியைப் பற்றி பிஎஸ். இராமையா அவர்கள் கூறியதைப்போல அனைத்து இதழ்களுமே இத்தகைய தகுதிகளைப் பெற்றுள்ளன என்பதில் ஐயமில்லை.

தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் பற்றிய வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்கும் அவற்றிலும் குறிப்பாக விடுதலைக்கு முந்தைய காலக்கட்டத்தில் இலக்கிய இதழ்கள் பற்றி அறிந்துகொள்வதற்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

இந்நூல் இதழ்கள் பற்றிய ஒரு களஞ்சியம் எனினும் மிகையில்லை. 1999இல் நடைபெற்ற இவ்விதழியல் கருத்தரங்கக் கட்டுரைகளை இப்போது இந்நிறுவனம் பெரிதும் முனைந்து நூலாகக் கொண்டுவருகிறது. இதழியல் ஆய்வு வரிசையில் இந்நூல் 5ஆம் தொகுதியாக வெளிவருகிறது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிக வரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாடு - மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு. ஏ. இராமையா இ.ஆ.ப. அவர்களுக்கும் சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திரு சு. கண்ணனுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த சென்னை மைக்ரோ அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை
22-09-2004

இயக்குநர்

# பதிப்புரை

இந்தியர்களும் அச்சகங்களைத் தொடங்கி நடத்தலாம் என்று ஆங்கில அரசு 1835இல் சட்டம் இயற்றியது. இச் சட்டத்திற்குப் பிறகு இந்தியச் சமுதாயம், பண்பாடு, விடுதலை போன்றவற்றை எதிரொலிக்கும் பல்வேறு இதழ்கள் வெளிவரத் தொடங்கின. இவ்விதழ்களை அச்சிடுவதற்கான பல அச்சகங்களும் உருவாகத் தொடங்கின. தமிழகத்தில் தினவர்த்தமானி அச்சகம், விவேகவிளக்க அச்சுக்கூடம், இலக்கணக் களஞ்சிய அச்சுக்கூடம், கல்வி விலாச அச்சுக்கூடம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை போன்றவை பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தோன்றி வளர்ந்து தமிழ் வளர்ச்சிக்குத் துணைநின்றன.

இந்திய விடுதலைக்கு மக்களைத் தகுதியுடையவர்களாக மாற்றுவதற்கும் அவர்களுக்குப் போதிய விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்கும் விடுதலைக்கு முந்தைய இதழ்கள் பெருமளவில் தங்கள் பங்களிப்பைச் செய்தன. இப்பங்களிப்பு நேர்முக, மறைமுகத் தாக்கங்களை மக்களிடையே ஏற்படுத்தின. விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் இந்திய இதழியல் செல்நெறிகளில் தம் பங்களிப்பைப் பல்வேறு நிலைகளில் நிறைவேற்றின. 1855ஆம் ஆண்டில் 'தினவர்த்தமானி' என்னும் வார இதழ் வெளிவந்தது. இதைத் தொடர்ந்து சுதேசமித்திரன் (1882), விவேக சிந்தாமணி (1892), ஞானபோதினி (1897), விவேகபாநு (1900), விவேகபோதினி (1908) எனப் பல்வேறு இதழ்கள் பல்வேறு நோக்கங்களுடன் பல்வேறு தேவைகளை நிறைவு செய்ய வெளிவந்தன. இவ்விதழ்களின் உள்ளார்ந்த பொருள்களை அறிந்து கொள்ள 'இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்' என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக மொழித்துறையிலும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிலும் சென்னைக் காதிபவனிலும் சென்னை வானொலி நிலைய அரங்கத்திலும் நான்கு கருத்தரங்குகள் தொடர்ந்து நடத்தப்பெற்றன. இக்கருத்தரங்கக் கட்டுரைகளை நான்கு தொகுதிகளாக வெளியிடுவதெனத் திட்டமிடப் பெற்றது. இது வரையில் இரு தொகுதிகள் வெளிவந்துள்ளன. இப்பொழுது வரும் மூன்றாவது தொகுதியில் விவேகபோதினி, புதுவையிலிருந்து வெளிவந்த கலைமகள், கலாநிலையம், பிரசண்ட விகடன்,

சென்னையிலிருந்து வெளிவந்த கலைமகள், மணிக்கொடி, சுப்பிரமணிய சிவம் நடத்திய இதழ்கள் குறித்த ஆய்வுகள் அடங்கும். இவற்றோடு, இதழியல் சட்டங்கள் காலனிய அரசிலிருந்து மெல்ல மெல்லத் தற்காலம் வரையிலும் பெற்ற மாற்றங்களைத் தெரிந்து கொள்ள 'இதழியல் சட்டங்கள்' என்னும் கட்டுரையும் இறுதியாக வைக்கப்பட்டுள்ளது.

## விவேகபோதினி (1908)

பதிப்புத்துறையில் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடிய 'அல்லயன்ஸ்' நிறுவனத்தார் நடத்திய இதழ் 'விவேகபோதினி'யாகும். ". . . . கொலையும் கொள்ளையும் கலகக் குழப்பமும் ஒன்றன்பின் ஒன்றாய் உண்டாகும் இக்காலத்தில் தேச நண்பர்களுக்குத் தொண்டு புரியும் நல்லறிவுச் சுடராய் விளங்கக் கூடியதும் விவேகாமிருதத்தை அவரவர்களுக்கு ஊட்டி, வித்வான்கள் நிரம்பிய நற்சபையில் நடம் புரிந்திடத் துணைசெய்யக்கூடியதுமாகிய இதழ் ஒன்றைத் தொடங்க முன்வந்தோம்" என்று இவ்விதழின் குறிக்கோளை முதல் இதழில் ஆசிரியர் குப்புசாமி ஐயர் குறிப்பிடுகிறார். விவேகபோதினி, தன் இதழியல் போக்கையும் நோக்கையும் தனக்கு முந்தைய இதழாகிய விவேகசிந்தாமணியிலிருந்து பெற்றுக்கொண்டது.

ஆன்மிகமே இவ்விதழின் முதன்மையான நோக்கமாகும். இளம் வயதிலேயே வேதாந்தத்தில் மிகுந்த ஈடுபாடும் ஆழ்ந்த பயிற்சி கொண்டவரும் விவேகானந்தரின் பாராட்டைப் பெற்றவருமான பி.ஆர். இராஜம் ஐயரின் வாழ்க்கை வரலாறு விவேகபோதினியில் தொடராக வெளிவந்துள்ளது. இதுவே, இன்றுவரையில் பி.ஆர். இராஜம் ஐயரின் வரலாற்றை அறிய உதவும் அடிப்படை ஆவணமாகத் திகழ்கிறது.

'மாணவர் பக்கம்' என்னும் பகுதியில் ஆன்மிகக் கருத்துகளை - வாழ்வியல் நெறிகளை இளைய தலைமுறையினருக்கு அறிவுறுத்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது விவேகபோதினி.

## கலைமகள் – புதுவை (1913)

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புதுவையிலிருந்து கலைமகள் என்னும் மாத இதழ் வெளிவந்தது. பாரதிதாசனுக்கு ஆசிரியராக இருந்த சி. பங்காரு பத்தர் ஒரு குழுவினை ஏற்படுத்தி அதன் வழிகாட்டுதலுடன் இவ்விதழை நடத்தினார். அவர், "தமிழ் நூற்களை ஆராய்வதாலும் பிரசங்கங்கள் செய்வதனாலும் பத்திரிகை

முதலியன பிரசுரிப்பதனாலும் தமிழ்ப் பாஷையைச் சுயவிருத்தி செய்வதே முக்கிய நோக்கமாகும்" என்று தம் இதழ்க் கொள்கைகளை வெளிப்படுத்தியுள்ளார். வாசகர்களின் கடிதங்கள் இதழில் உள்ள செய்திகளைப் புரிந்து கொள்வதில் இடர்ப்பாடுகள் உள்ளன என்பதைத் தெரிவிக்கின்றன. என்றாலும் இதழாசிரியர் கலைமகளின் உயர்ந்த நோக்கத்தை, "வேடிக்கையான செய்திகளைச் சொல்லிப் பிறரைக் களிப்பித்தற்காக யாம் பத்திரிகை நடத்த வந்தோமில்லை . . ." என அழுத்தம் திருத்தமாக வெளியிடுகிறார். மாகறல் கார்த்திகேய முதலியார், வ.வே.சு. ஐயர் போன்ற அறிஞர்கள் பழந்தமிழ் இலக்கியங்கள், தமிழ் மொழி போன்றவற்றை மையப்படுத்தித் தமிழின் பெருமையை இவ்விதழ் மூலம் வெளிப்படுத்தினர். நீண்ட காலம் வெளிவராமல் போயினும் இவ்விதழ் தமிழுக்குத் தந்த கொடை அளப்பரியது.

### கலாநிலையம் (1928)

இலக்கியத்தை உயிர்நாடியாகக் கொண்டு எட்டாண்டுகள் மட்டுமே வெளிவந்து, சிறந்த சாதனைகள் பலவற்றைச் செய்த பிறிதொரு இதழ் 'கலாநிலையம்' ஆகும். இவ்விதழின் அடிப்படை நோக்கம் தமிழ் இலக்கியம், பண்பாடு ஆகியவற்றைத் தமிழருக்கு உணர்த்துவதாகும். தமிழைப் பயிற்றுவிக்க வேண்டிய இடத்துப் பயிற்றுவித்தும் இலக்கியங்களின்பால் சுவையை உண்டாக்கியும் அச்சுவை உடையோர்க்குக் கட்டுரைகளால் இன்பத்தை அளித்தும் பணி செய்வதையே தனது நோக்கமாகக் கலாநிலையம் கொண்டிருந்தது.

கலாநிலையத்தைத் தொடக்க காலம் முதல் நடத்தியவர் டி.என். சேசாசலம் ஆவார். எந்த நிலையிலும் இதழின் குறிக்கோளுக்குச் சிறிதும் ஊறு நேராதவாறு தலையங்கத்தில் இருந்து இதழின் இறுதிப் பக்கம் வரை தமிழின் பல்வகைக் கூறுகளை விளக்கி உரைப்பதில் ஆசிரியரின் பணி அளவிடற்கரியதாகும். பழந்தமிழ் இலக்கியத்தைப் புரியவைத்தல், மொழி ஆராய்ச்சி, பண்பாட்டு ஆராய்ச்சி, அரசியலார் எடுக்கும் முடிவுகளில் தமிழுக்கு ஊறு நேராதவாறு குரல் கொடுப்பது, மேலைநாட்டு இலக்கிய அறிஞர்கள் பற்றியும் அவர்தம் இலக்கியப் படைப்புகள் குறித்தும் எழுதுவது, மொழிபெயர்ப்பில் அக்கறை காட்டித் தக்கவர்வழி மொழிபெயர்ப்புகளைச் செய்வது எனப் பலநிலைகளில் கலாநிலையத்தின் தமிழ் இலக்கியப் பணிகள் விரிவடைகின்றன. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், ஈ.எஸ். தணிகாசல

முதலியார், இராமரத்நம் ஐயர், டி.ஏ. கனகசபாபதி முதலியார், டி.எம். கல்யாணராம ஐயர், ஆர். நரசிம்மன், எஸ். சோமசுந்தர தேசிகர், எம்.பி. குமாரநாயகம் போன்றோர் படைப்புகள் கலாநிலையத்தில் இடம்பெற்றன. இலக்கியங்களில் குறுந்தொகை, கலித்தொகை போன்றவற்றிற்குச் சிறப்பான உரைகள் தரப்பெற்றுள்ளன. இவற்றைப் போன்று காப்பியங்களுக்கும் உரை எழுதும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

### பிரசண்ட விகடன் (1932)

நாற்பதுகளில் தமிழில் உதயமான இலக்கிய இதழ் பிரசண்ட விகடன். 1915இல் இருந்து ஆனந்தபோதினி இதழை நடத்தி வந்த நா. முனுசாமி முதலியார் 1932இல் இவ் இதழையும் தொடங்கினார். நாரண துரைக்கண்ணன் ஆசிரியரான பிறகு புற அமைப்பிலும் அக அமைப்பிலும் பல மாறுதல்களோடு பிரசண்ட விகடன் வெளிவரத் தொடங்கியது. வர்ணாசிரமதர்ம ஒழிப்பு, தமிழ்வழிக் கல்வி, இந்தி மொழியின் மேலாண்மையை எதிர்த்தல், பெண் உரிமை போன்றவற்றில் நாரண துரைக்கண்ணன் கொண்டிருந்த முற்போக்கான கருத்துகளைத் தாங்கி இவ்விதழ் வெளிவந்தது. பிரசண்ட விகடனின் தலையங்கங்கள் பெரும்பாலும் தமிழ் - தமிழர் நலம் பேணும் முறையில் எழுதப்பெற்றன.

புதிய எழுத்தாளர்களை அறிமுகப்படுத்தும் சிறுகதைகள், கவிதைகள் இவற்றோடு தரமான கட்டுரைகள் பலவற்றையும் இவ்விதழில் காணமுடியும். பிரசண்ட விகடன் காலத்துத் தமிழகம் - இந்தியா - உலகம் பற்றிய பல செய்திகளைத் தரும் 'காலச்சக்கரம்' பகுதி குறிப்பிடத்தகுந்தது. விதவைகள் மறுமணச் சட்டம், ஹிட்லரின் அரசியல் நிலை, ஓட்டுரிமையைக் குடிமக்கள் பயன்படுத்த வேண்டியதன் அவசியம், தீரர் சத்தியமூர்த்தி சட்டசபை உறுப்பினர்களுக்கு ஊதியம் வேண்டும் எனக் குரல் கொடுத்தது போன்ற பல செய்திகளைக் 'காலச்சக்கரம்' பதிவு செய்துள்ளது.

### கலைமகள் - சென்னை (1932)

தமக்கு முன்னரேயே வெளிவந்துகொண்டிருக்கும் இலக்கிய இதழ்களில் இல்லாத புதிய செய்திகளைக் கூறுவதற்கு ஓர் இலக்கிய இதழ் தேவை என்பதை உணர்ந்து நாற்பதுகளில் சென்னையில் கலைமகள் தோற்றம்பெற்றது. இராமச்சந்திர ஐயர் என்பவர் ஆசிரியராக இருக்க, எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை, மு. இராகவையங்கார், டி.கே. சிதம்பரநாத முதலியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, கே. சுவாமிநாதன், க.அ. நீலகண்டசாஸ்திரி, கே.வி. கிருஷ்ணஸ்வாமி

ஐயர், எம். லட்சுமி அம்மாள், பெ.நா. அப்புசாமி ஐயர், தி. சிவராம சேதுப் பிள்ளை ஆகியோர் இதழ் நடத்தும் குழுவில் இடம் பெற்றனர். இங்ஙனம் ஒரு பெரிய இலக்கியக் குழுவினரின் மேற்பார்வையில் தொடங்கிய கலைமகள் பல நிலைகளில் வரலாறு படைத்த இதழாகும்.

“பிரபலமான தமிழ் வித்துவான்களும் ஆங்கில பாஷையிலும் தமிழிலும் தேர்ச்சியடைந்த பல கலைஞர்களும் இதற்கு விஷயதானம் செய்துவருவதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். நம் தாய்மொழியாகிய தமிழில் உள்ள பல நூல்களின் அருமை பெருமைகளை எடுத்துக்காட்டி . . . வேறு பாஷைகளிலும் வேறு தேசங்களிலும் உள்ள அரிய சாஸ்திர விஷயங்களையும். . . . சரித்திர ஆராய்ச்சி விஷயங்களையும். . . . இப்பத்திரிகை மூலமாய் வெளிப்படுத்தலா மென்று நினைக்கிறோம்” என்று தம் இதழின் நோக்கத்தை அதன் உரிமையாளர் நாராயணசாமி ஐயர் வெளிப்படுத்துகிறார். இதற்குத் தகுந்தாற் போலவே தொடக்க கால இதழ்களின் உள்ளடக்கச் செய்திகள் அமைந்துள்ளன. மேலும், அதுவரையிலும் தமிழுலகம் காணாத பழைய ஓலைச்சுவடிகளிலுள்ள தமிழ் நூல்கள் குறித்த பின்னிணைப்பும் தரப்பெற்றுள்ளது. உ.வே. சாமிநாதையரைக் கொண்டு, ‘தென்றல் விடு தூது’, ‘பழனி இரட்டை மணி மாலை’, ‘பாசவதைப் பரணி’, ‘திருவிலஞ்சி முருகன் உலா’ போன்ற பல நூல்கள் இவ்விதழில் குறிப்புரைகளோடு தொடர்ந்து வெளியிடப்பெற்றன.

நவீன இலக்கிய வடிவங்களைத் தமிழுக்குத் தந்த ந. பிச்சமூர்த்தி, பெ.கொ. சுந்தரராஜன், கு.ப.ரா. போன்றோர் மணிக்கொடியில் எழுதுவதற்கு முன்பாகவே கலைமகளில் எழுதியவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. நாட்டார் இலக்கியப் படைப்புகள் அழிந்து போகாமல், அவற்றைப் பாதுகாப்பதிலும் கலைமகள் அரிய பணியைச் செய்துள்ளது.

### மணிக்கொடி (1933)

தமிழ்ச் சிறுகதைகளின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் ஆவணப்படுத்தும் எவரும் மணிக்கொடி இதழை மறுக்க இயலாது. புதுமை இலக்கிய வரலாற்றில் பல்வேறு முயற்சிகளைச் செய்த இவ்விதழ் வெளிவந்த காலத்திலும் இன்றும் பெரும்புகழ்பெற்று விளங்குகின்றது. இவ்விதழை, “மணிக்கொடி வாரப் பதிப்பாகவும்

மாதமிரு கதைப்பதிப்பாகவும் வெளிவந்த வெறும் தமிழ்ப் பத்திரிகை மட்டுமல்ல. அது ஓர் இயக்கம். தமிழ் நாட்டில் சமூக, அரசியல் வாழ்வில் மக்கள் உள்ளங்களில் புதிய எழுச்சியைத் தூண்டிவிடுதல், மக்களின் இலக்கியச் சுவையை உயர்த்துதல் என்ற குறிக்கோளுடன் தொடங்கிய இயக்கம்" என பி.எஸ். இராமையா குறிப்பிடுவார்.

புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், ந. பிச்சமூர்த்தி, இதழாசிரியர் பி.எஸ். இராமையா, சி.சு. செல்லப்பா, வை.மு. கோதைநாயகி அம்மாள், சேது அம்மாள், மௌனி, க.நா. சுப்பிரமணியம், எம்.வி. வெங்கட்ராம் போன்ற பல எழுத்தாளர்கள் மணிக்கொடியில் சிறுகதைகள் எழுதித் தமிழ்ச் சிறுகதைக்கு வளம் சேர்த்தனர். இவற்றோடு தரமான பிறமொழிக் கதைகள் மொழிபெயர்க்கப்பட்டன. சிறுகதைக்கான உருவம், உள்ளடக்கம், உத்திகள், கதைப் பொருள்கள் போன்றவற்றைப் பதிவு செய்யும் பல கட்டுரைகள் இவ்விதழில் வெளியாயின. “பத்திரிகை என்றால் இதுதான் பத்திரிகை; இந்தத் தமிழ் வேறு யாரால் எழுத முடியும்” என்று கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி மணிக்கொடியைப் பாராட்டிக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

## இதழாளர் சுப்பிரமணிய சிவம்

விடுதலைப் போராட்ட வீரர் சுப்பிரமணிய சிவம் தம் சிறைவாசத்திற்குப் பிறகு சென்னையில் ‘ஞானபாநு’ என்னும் இதழைத் தொடங்கினார்.

சுப்பிரமணிய சிவம் இதழாசிரியர்களின் கடமையை, “வானமே இடிந்து விழுந்தாலும் அலட்சியம் செய்து நின்று எளியோர், அநியாயங்களுக்கு உட்படுத்தப்பட்டோர், அறிவீனர், பலவீனர் ஆகிய இவர்களை ஆதரித்து. . . .தர்மத்தையும் சத்தியத்தையும் சாந்தத்தையும் சமாதானத்தையும் ஸ்தாபிக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்” என்று கூறுகிறார்.

பாரதியார் புதுவையில் வாழ்ந்த காலத்தில் இவ்விதழில் தொடர்ந்து எழுதினார். ‘கண்ணன் என் தாய்’ பாடல் முதலில் இவ்விதழில்தான் வெளிவந்தது. வ.உ. சிதம்பரனார் பல கட்டுரைகளை ஞானபாநுவில் எழுதினார். வ.வே.சு. ஐயர், வ.ரா., எல்.எஸ். சுப்பராய ஐயர் போன்றோரும் இவ்விதழில் எழுதியிருக்கின்றனர். பெண் கல்வி, பிறமொழிச் சொற்களைத் தவிர்க்க வேண்டியதன் அவசியம்,

விவேகானந்தர் கொள்கைகள் முதலியன பற்றிய படைப்புகள் இவ்விதழில் இடம்பெற்றன. 'பிரபஞ்சமித்திரன்', 'தேசாந்திரி' ஆகிய இதழ்களும் சுப்பிரமணிய சிவத்தின் இதழியல் வாழ்க்கையில் தொடர்புடையனவாகும். அவற்றிலும் அவருடைய பங்களிப்பு நிறைவாக அமைந்துள்ளது.

## இதழியல் சட்டங்கள்

ஆங்கில ஆட்சிக் காலத்தில் நடைமுறையில் இருந்த இதழியல் சட்டங்களால் இந்திய இதழாசிரியர்களும் உரிமையாளர்களும் சந்திக்க நேர்ந்த அவலங்களும் இடர்ப்பாடுகளும் எண்ணற்றவை. அவர்களின் துயரம் நிறைந்த இதழியல் வாழ்க்கைக்குக் காரணமாக அமைந்தவை ஆங்கில ஆட்சியாளர்கள் திட்டமிட்டு உருவாக்கிய இதழியல் தொடர்பான சட்டங்கள் ஆகும். ஆங்கிலேயர் இயற்றிய இதழ்ச் சட்டங்கள் பற்றிய பல்வேறு தகவல்கள் இக்கட்டுரையில் தரப்பெற்றுள்ளன.

இராஜா ராம்மோகன் ராய் இதழியல் சட்டங்களில் உள்ள கட்டுப்பாடுகளை நீக்கப் போராடியது; மெட்காப் (Metcalf) இந்தியர்களுக்குச் சட்டங்களின் பிடியிலிருந்து இதழியல் விடுதலையைப் பெற்றுத்தந்தது போன்ற அரிய செய்திகள் இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ளன. 1867ஆம் ஆண்டு உருவாகித் தற்பொழுதும் தொடரும் 'புத்தகப் பதிவுச் சட்டம்', ஆங்கிலேய அரசுக்கு எதிராகக் கருத்துகளை எழுதி விடுதலை உணர்வைத் தூண்டிய பத்திரிகைகளின் வைப்புத் தொகையை இழக்கச் செய்யும் 'பத்திரிகைக் குற்றத்தூண்டல் தடுப்புச் சட்டம்' போன்ற பல்வேறு சட்டங்களின் விவரங்கள் இக்கட்டுரையில் வரலாற்று அணுகுமுறையோடு எழுதப்பெற்றுள்ளன. சட்ட ரீதியாக இதழியல் சுதந்திரம் காலந்தோறும் எவ்வாறு மாறி மாறி வந்துள்ளது என்பதையும் இக்கட்டுரை புலப்படுத்துகிறது.

'இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்' என்னும் பொருண்மையில் அமைந்த நான்காம் கருத்தரங்கு சென்னை வானொலி நிலைய பல்தட ஒலி அரங்கில் 29.7.1998 அன்று நடைபெற்றது. சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் சென்னை வானொலி நிலையமும் டாக்டர் மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மையமும் இணைந்து நடத்திய இக்கருத்தரங்கில்

அறிஞர் பலர் பங்கேற்று ஆய்வுரைகளை நிகழ்த்தினர். இத்தொகுதியில் அக்கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

இவ்வரிய கருத்தரங்கினைச் சிறப்புற நடத்துவதற்குச் சென்னை வானொலி நிலையம் பெரிதும் துணைபுரிந்தது. நிலைய இயக்குநர் திரு. பா.ரா. குமார் அவர்கள் அரிய உரையாற்றிக் கருத்தரங்கைத் தொடங்கிவைத்தார். அவர்கட்கு எங்கள் நன்றி. துணை இயக்குநர் திருமதி. கலாரவி, நிகழ்ச்சிப் பொறுப்பாளர்கள் முனைவர் சுந்தர ஆவுடையப்பன், முனைவர் பழ. அதியமான் ஆகியோர் இக்கருத்தரங்கு நிறைவுறப் பல்லாற்றானும் உதவினர். ஆய்வுரைகளைச் சென்னை வானொலி நிலையத்தார் ஒலிபரப்பி உதவினர். இவர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி.

நிறுவனச் சார்பில் நடைபெறும் இதழியல் கருத்தரங்குகளில் ஆய்வுரை, அமர்வுத் தலைமையுரை, கருத்துரை, சிறப்புரைகள் வழங்குவதற்கு உரிய அறிஞர்களைத் தேர்வு செய்யும் குழுவினர் முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இ. சுந்தரமூர்த்தி, திரு. மா.ரா. அரசு ஆகியோருக்கு நன்றி.

இவ்விதழியல் கருத்தரங்குகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தோடு இணைந்து நடத்த இசைவளித்ததோடு கருத்தரங்குகள் சிறப்புற நடைபெற ஒத்துழைப்பு நல்கிய இந் நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கு நன்றி.

இந்நூல் வெளியீட்டில் பெரிதும் ஈடுபாடும் ஆர்வமும் காட்டிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கு நன்றியைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

கருத்தரங்கில் ஆய்வுரைகள் நல்கிய ஆய்வாளர்களுக்கும் அமர்வுத் தலைமையுரை ஆற்றிய அறிஞர்களுக்கும் கருத்துரை வழங்கிய பெரியோர்களுக்கும் எங்கள் நன்றி.

இந்நூல் உருவாகும்போது அச்சுப்பணிகளில் பெரிதும் துணைநின்ற முனைவர் கி. ஜெயகுமார் அவர்களுக்கு நன்றி.

# பொருளடக்கம்

# கட்டுரையாளர்கள்

1. முனைவர் பழ. அதியமான்
   நிகழ்ச்சிப் பொறுப்பாளர்
   சென்னை வானொலி நிலையம்
   சென்னை - 600 004

2. முனைவர் பா. கந்தசாமி
   முதல்வர்
   பச்சையப்பன் ஆடவர் கல்லூரி
   காஞ்சிபுரம் - 631 501

3. முனைவர் இராம. குருநாதன்
   28, பங்காரு குடியிருப்பு
   கே.கே. நகர்
   சென்னை - 600 078

4. முனைவர் மு. செல்லன்
   தமிழ் இணைப் பேராசிரியர்
   கரந்தைக் கலைக் கல்லூரி
   தஞ்சாவூர் - 613 002

5. திருமதி அ. திரிபுரசுந்தரி
   முதுகலைத் தமிழாசிரியை
   அரசு மேனிலைப் பள்ளி
   சென்னை - 600 083

6. திரு பெ.சு. மணி
   11, இராமகிருஷ்ணாபுரம்
   இரண்டாவது தெரு
   மேற்கு மாம்பலம்
   சென்னை - 600 033

7. முனைவர் இராம. வேணுகோபால்
   தமிழ் இணைப் பேராசிரியர்
   பச்சையப்பன் கல்லூரி
   சென்னை - 600 030

# விவேகபோதினி

**1908** அ. திரிபுரசுந்தரி

ஓயாத உழைப்பு; சலியாத நம்பிக்கை; எவருக்கும் புன்சிரிப்பு; எப்போதும் அமைதி - குப்புசாமி ஐயரைப் பற்றிய தி.ஜ.ர.வின் படிப்பிடிப்பு இது. பிற்காலத்தில் 'அல்லயன்ஸ் குப்புசாமி ஐயர்' என்று பரவலாக அறியப்பட்ட வை. குப்புசாமி ஐயரின் பொதுவாழ்க்கை 1896இல் தொடங்கியது. இந்த ஆண்டில்தான், 'ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி' என்ற பெயரில் 'எழுதுபொருள்' கடை ஒன்றை இவர் சென்னை மயிலாப்பூரில் தொடங்கினார்.

வணிக வாழ்க்கையில் பெரும்பொருள் ஈட்டிய குப்புசாமி ஐயரின் மனம் அத்துடன் நிறைவடையவில்லை. ஆன்மிகத்திலும் தேசியத்திலும் தோய்ந்த இவர் மனம் சமுதாயப் பணிகளில் நாட்டம் கொண்டது; ஏதாவது ஒரு வகையில், தம்மால் இயன்ற நிலையில் தாம் வாழ்ந்த சமுதாயத்திற்குப் பயன்படவேண்டும் என விழைந்தது. இரு வழிகளைத் தேர்ந்தெடுத்தார். ஒன்று பதிப்பகம் தொடங்குவது; மற்றொன்று இதழ் நடத்துவது. இறையுணர்வும் நாட்டுணர்வும் இளைய தலைமுறையினரின் நெஞ்சங்களில் பதியவேண்டும் என்ற பெருநோக்கோடு ஆன்மிக - தேசியத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக - அவர்களுக்கு எளிதில் புரியும் நடையில் வெளியிட்டார். இவை குப்புசாமி ஐயரின் தொடக்ககாலப் பதிப்பு முயற்சிகளாகும்.

1901ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட அல்லயன்ஸ் பதிப்பகம், புகழ்பெற்ற பல எழுத்தாளர்களின் புதுமை இலக்கியங்களை வெளியிட்டு, மறுமலர்ச்சி இலக்கிய வரலாற்றில் தடம் பதித்து, நூற்றாண்டு நிறைவை நோக்கிப் பெருமையுடன் நடையிடுகிறது. பதிப்பு வரலாற்றில் நிரந்தரத் தன்மையோடு இடம்பெற்றுள்ள குப்புசாமி ஐயர், தமிழ் இதழியல் வரலாற்றிலும் உயர்ந்ததோர் இடத்தைப் பெற்றுச் சிறந்ததை இவர் நடத்திய 'விவேகபோதினி' திங்கள் இதழின்வழி அறிய முடிகின்றது.

## விவேகபோதினி பிறந்தது

இதழ் ஒன்றைத் தொடங்கி நடத்தத் தாம் ஏன் விரும்பினார் என்பதை விவேகபோதினியின் முதல் இதழில் 'நமது நோக்கம்' என்னும் அறிமுகப்பகுதியில் தெரிவித்துள்ளார் குப்புசாமி ஐயர்.

> எந்த விதத்திலும் நம் தமிழ்நாட்டு ஜனங்களுக்குப் பல பிரயோஜனங்கள் சித்திக்க வேண்டுமாறு கைங்கரியம் புரிய கங்கணங் கட்டியுள்ளவர்களில் யாமும் ஒருவரென நம் தேசவாசிகள் கருதும் பொருட்டே, யாம் இறங்கியிருக்கும் பற்பல துறைகளில் பத்திரிகைத் துறையையும் ஒன்றென மனமுவந்து மதித்து இதனைக் கையெடுத்தாளக் கருதினோம். பஞ்சமும், பிளேகும், கொலையும், கொள்ளையும், கலகக் குழப்பமும் ஒன்றன்பின் ஒன்றாய் உண்டாகும் இக்காலத்தில் தேச நண்பர்களுக்குத் தொண்டு புரியும் நல்லறிவுச் சுடராய் விளங்கக் கூடியதும், விவேகாமிருதத்தை அவரவர்களுக்கு ஊட்டி, வித்வான்கள் நிரம்பிய நற்சபையில் நடம்புரிந்திடத் துணை செய்யக் கூடியதுமாகிய இதழ் ஒன்றைத் தொடங்க முன்வந்தோம்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் தோன்றியதும் "ஐரோப்பாவில் எந்தவொரு முதல்தர பத்திரிகையோடும் ஒப்பிடத்தக்க அளவிற்குத் தரம் வாய்ந்தது" என்று மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையால் பாராட்டப் பெற்றதுமான சி.வி. சாமிநாதையரின் விவேகசிந்தாமணியை முன்மாதிரியாகக் கொண்டு 1908இல் தொடங்கப்பட்ட இதழான விவேகபோதினி, 1908 முதல் 1931 வரையில் இருபத்துமூன்றாண்டுகள் தொடர்ந்து வெளிவந்து வரலாறு படைத்தது.

"நாவலுக்கும், சிறுகதைக்கும், அறிவியல் கட்டுரைக்கும் வழிகாட்டிய விவேகசிந்தாமணியின் அடிச்சுவட்டில் தோன்றியது விவேகபோதினி" என்னும் சிட்டி, சிவபாத சுந்தரத்தின் கருத்தும், "விவேக சிந்தாமணிக்கு அடுத்தபடியாகப் பிரசித்திபெற்ற விவேகபோதினி" என்னும் கல்கியின் கூற்றும், "இப்போதுள்ள ஊக்கத்துடன் உழைக்கும் சிற்சில பத்திரிகைகளினால் உண்டாகும்

பலனை இப்பத்திரிகையினாலும் அணுவளவாயினும் நம் சகோதரர்கள் அடையட்டுமென்று எண்ணியும் 'விவேகபோதினி' என்னும் பெயர் பூண்ட இப்பத்திரிகையை முன்கொண்டுவரத் துணிந்தோம்" என்னும் குப்புசாமி ஐயரின் அறிவிப்பும் விவேகபோதினி, விவேகசிந்தாமணியை அடியொற்றி அமைந்தது என்ற உண்மையைப் புலப்படுத்தும்.

## இதழின் நோக்கமும் அமைப்பும்

விவேகபோதினியின் முன்னோடி இதழான விவேகசிந்தாமணி, 'கிராமப்புறக் கல்வியை மேம்படுத்துதல்' என்பதை முதன்மை நோக்கமாகக் கொண்டு செயல்பட்டது. விவேகபோதினியோ, 'ஆன்மிக உணர்வை மேம்படுத்துதல்' என்பதையே முதன்மை நோக்கமாகக் கொண்டு நடையிட்டது. அளவிலும் அமைப்பிலும் பேரளவு விவேகசிந்தாமணியைப் பின்பற்றிய விவேகபோதினி, அடிப்படை நோக்கத்தில் வேறுபட்டு நின்று தன்னுடைய தனித்தன்மையைப் புலப்படுத்தியது.

இதழ் நெடுக, உரிமையாளரும் ஆசிரியருமான குப்புசாமி ஐயரின் ஆன்மிக ஈடுபாட்டைப் பல்வேறு நிலைகளில் காண முடிகிறது.

மத விஷய ஆராய்ச்சியின் அவசியம், மத விஷயங்களின் ஸ்வரூபம், ஹிந்து மதத்தின் விரிவு, பக்தி மார்க்கம், ஞான மார்க்கம், வேதங்கள் அனாதி, வேதங்களின் ஸ்வரூபம், வேதாந்தத் திரட்டு, கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம் முதலிய தலைப்புகளில் அமைந்த கட்டுரைகள், ஆன்மிகச் சிந்தனைகளைப் பரப்புவதையே விவேகபோதினி முதன்மையான நோக்கமாகக் கொண்டிருந்தது என்பதை விளக்கவல்லன.

இத்தகைய கட்டுரைகளே அல்லாமல் இவ்விதழ் வேறுவேறு நிலைகளிலும் ஆன்மிக ஆர்வத்தை வெளிப்படுத்தியது. போற்றுதற்குரிய ஆன்மிகவாதியும் 'பிரபுத்தபாரதா' என்னும் புகழ்பெற்ற ஆங்கில இதழின் ஆசிரியராக இருந்தவரும் தமிழில் முதல் நடப்பியல் நாவலாகக் கருதப்படும் கமலாம்பாள் சரித்திரத்தை எழுதியவருமான B.R. இராஜம் ஐயரின் வாழ்க்கை வரலாறு, தமிழில் முதன்முதலாக விவேகபோதினியில்தான் வெளிவந்தது. இராஜம் ஐயர் மறைந்த சில ஆண்டுகளுக்குப் பிறகு பிரபுத்தபாரதா இதழில் அவர்

எழுதியவற்றைத் தொகுத்து ஆங்கிலத்தில் RAMBLES IN VEDANTA என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டனர். அத்தொகுப்பை உருவாக்கியவர்களில் ஒருவரான அ.சீ. கஸ்தூரி ரங்கையரே தமிழில் இராஜம் ஐயரின் வரலாற்றை எழுதியவர். டிசம்பர் 1908இல் தொடங்கி ஏப்ரல் 1909இல் முடிந்த அந்தத் தொடர் இராஜம் ஐயரை அறிந்துகொள்ளப் பெரிதும் பயன்படக் கூடிய ஒன்றாகும்.

இராஜம் ஐயரின் எழுத்து வாழ்க்கை - ஆன்மிக சிந்தனைகளின் வெளிப்பாடு அவர் 1895இல் எழுதிய ஆங்கிலக் கட்டுரையுடன் தொடங்கியது. அந்நாளில் புகழ்பெற்று விளங்கிய வேதாந்த இதழாகிய 'பிரம்மவாதின்' என்ற ஆங்கில இதழில் வெளிவந்த அந்தக் கட்டுரையின் தலைப்பு, Man - His Littleness and His Greatness என்பதாகும். இராஜம் ஐயரின் வாழ்க்கையில் மகத்தான திருப்பத்தை ஏற்படுத்திய அந்தக் கட்டுரை, 'மனிதன் - அவன் தாழ்வும் ஏற்றமும்' என்ற தலைப்பில் மொழிபெயர்க்கப்பெற்று 1909 செப்டம்பர் இதழில், 'நமது சந்தாதாரர்கள் நன்மைக்காக இந்த வியாசத்தை மொழிபெயர்த்து இங்கு எழுதலானோம்' என்ற குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ளது. இதுவும் அ.சீ. கஸ்தூரிரங்கையரின் முயற்சியாகும். பல உயர்ந்த கருத்துகளை உள்ளடக்கியதாக அமைந்துள்ள இக்கட்டுரை படித்தறிய வேண்டிய ஒன்றாகும்.

தம் இதழில் ஒல்லும் வகையெல்லாம் ஆன்மிகச் சிந்தனைகளை விதைப்பதையே நோக்கமாகக் கொண்டு செயல்பட்டவர் குப்புசாமி ஐயர். 'சிறுவர் பக்கம்' அல்லது 'மாணவர் பக்கம்' என்பது அந்நாளைய இதழ்கள் அனைத்திலும் இடம்பெற்ற பொதுவான ஒரு பகுதியாகும். இப்பகுதியில் கர்ணபரம்பரையான நீதிக் கதைகள், புராண, இதிகாசங்களின் அடிப்படையிலான கதைகள், பழமொழிகளை மையமாகக்கொண்டு அமைந்த கதைகள் போன்றவை இடம்பெற்றிருக்கும். பொதுவான இவ்வழக்கத்திற்கு மாறாக, விவேகபோதினியில் ஆன்மிக அடிப்படையிலான செய்திகள் சிறுவர் பக்கங்களில் இடம்பெற்றுள்ளன. 'மனம் மாற ஜகம் மாறும்', 'பரபக்தி அல்லது ஞானம்', 'அகங்காரம்', 'சிருஷ்டியின் சொரூபம்', 'சித்திகள்', 'மனதை ஜயித்தவனே வீரன்', 'உண்மையும் தோற்றமும்', 'சகித்தல்' போன்ற பல தலைப்புகளில் ஆன்மிகம் பரவலாகப் பேசப்பட்டுள்ளது. இவற்றில் பெரும்பாலானவை, இராஜம் ஐயரின் கமலாம்பாள் சரித்திரத்திலிருந்தும், 'வேதாந்தச் சிதறல்கள்' என்னும்

அவருடைய ஆங்கிலக் கட்டுரைகளின் தொகுப்பிலிருந்தும் எடுத்தாளப் பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு கட்டுரையோ, கவிதையோ, செய்தியோ முடிந்த பிறகு எஞ்சும் வெற்றிடத்தில் ஏதாவது ஒரு துணுக்குச் செய்தியை - பெரும்பாலும் நகைச்சுவைக் குறிப்பை வெளியிடுவது இதழ்களின் பொதுவான வழக்கம். விவேகபோதினி அந்த வெற்றிடத்தையும் வாழ்வியல் கருத்துகளை வெளியிடவே பெரிதும் பயன்படுத்தியது.

'தந்திரத்தின் கொடுமை', 'மகான்களும் சித்திகளும்', 'மூடநம்பிக்கைகள்', 'இளமையில் மனத்தை ஈசன்பால் செலுத்துக', 'தர்க்கிப்பதை ஒழித்தல்', 'ஒருவரையும் அதிகமாய் நம்பாதே', 'மரியாதையுடன் மறுத்துரை', 'படிக்கத் தகுந்த புத்தகங்கள்' முதலாய தலைப்புகளில் அமைந்த செய்திகள், துணுக்குப் பகுதிகளை அணி செய்தன.

தன்னுடைய சமகால இதழ்களைப் போலவே மொழிபெயர்ப்பு, படைப்பிலக்கியம், அறிவியல் கட்டுரைகள், விவசாயம், நலவாழ்வு, பெண்களின் பிரச்சினைகள், வாழ்க்கை வரலாற்றிலக்கியம் போன்ற பல்வேறு துறைசார்ந்த கட்டுரைகளும் செய்திகளும் விவேகபோதினியில் இடம்பெற்றுள்ளன. என்றாலும் ஒட்டுமொத்தமாக நோக்கும்போது, இவ்விதழின் சிந்தனை முழுவதும் ஆன்மிக மயமாகவே இருந்ததை உணர முடிகின்றது. அலைபாயும் மனித மனம், முயன்று முயன்று குழப்பங்களிலிருந்தும் தடுமாற்றங்களிலிருந்தும் தவிப்புகளிலிருந்தும் விடுபட்டால் - ஆன்மிகத் தெளிவு பெற்றால் வாழ்க்கை வசப்படும்; வளம் பெறும்; மேன்மை அடையும் என்பதை வற்புறுத்துவதையே தலையாய நோக்கமாகக் கொண்டு செயல்பட்ட இதழ் என்பதால், இங்கு விவேகபோதினி இதழின் ஆன்மிகம் சார்ந்த படைப்புகள் மட்டுமே முதன்மைப்படுத்தப் பட்டுள்ளன.

# கலைமகள் (புதுவை)

**1913** பழ. அதியமான்

கலைமகள் என்றதும் நமக்கு உடனே நினைவுக்கு வருவது இப்போது சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கும் கலைமகள் பத்திரிகைதான். ஆனால், இந்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே புதுவையிலிருந்து ஒரு கலைமகள் வெளிவந்தது. 1913ஆம் வருடத்தில் தொடங்கி இன்று பார்வைக்குக் கிடைக்கும் வரையில் பார்த்தால் 1919 வரை இது வெளிவந்திருக்கிறது. சரியாகச் சொன்னால் 1919 ஏப்ரல் முடிய, மாதம் ஒரு இதழாக வெளிவந்த இப்பத்திரிகைக்கு ஆசிரியர் தமிழ்ப் புலவர் கி. பங்காரு பத்தர். இவர் பாரதிதாசனுக்கு ஆசிரியராக இருந்தவர்.

இன்றைக்கு 85 வருடங்களுக்கு முன்னால், 'கலைமகள்' என்னும் பெயரிய இப்பத்திரிகை கல்வி, அறிவு, ஒழுக்கம், இலக்கியம், இலக்கணம், தர்க்கம், பக்தி, ஞானம் முதலிய பல இன்றியமையாத விசயங்கள் தக்கவர்களாலெழுதப்பெற்று மாதந்தோறும் வெளிவரும் என்னும் அறிவிப்புடன் 1913ஆம் ஆண்டு ஜனவரி முதல் வெளிவந்தது.

'சைவப் பயிர் தழைக்க வந்த தமிழ் மழை' என்று இப்பத்திரிகையைக் குறிக்கலாம். தமிழ், சைவம் தொடர்பான செய்திகளுக்கே முக்கியத்துவம் அளித்து வெளியிட்ட இப்பத்திரிகைக்குப் பொருளுதவி அளித்தவர்களாவும் விஷயதானம் செய்தவர்களாகவும் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளும் கோயிலூர் வீர. சுப்பையா சுவாமிகளும் விளங்கியிருக்கிறார்கள்.

பத்திரிகையின் விற்பனை, இன்றைக்கு நோக்கும்போது வருத்தத்தை அளிப்பதாக இருக்கிறது. பத்திராதிபதிக்கு எழுதி வி.பி.பி. மூலம் பத்திரிகையைப் பெற்றுக் கொள்ளலாம். முன்பணம் அனுப்புவோர்க்குத் தபால் மூலமாகப் பத்திரிகையை அனுப்புவார்கள். பத்திரிகை முகவர்கள் என்ற முறை 1930களில்தான் ஏற்படுகிறது. அதற்கு முன்னர் இந்த விபிபி. தபால் மூலமாகத்தான் பத்திரிகையின் விற்பனை நடைபெற்றது.

கலைமகள் என்னும் மாதப் பத்திரிகை வெளியீடு என்பது ஆசிரியர் பங்காரு பத்தரின் முக்கிய நோக்கமன்று. அவர்கள் குழுவாக நடத்தி வந்த 'புதுவைக் கலைமகள் கழகம்' என்னும் கழகத்தின் செயல்பாடுகளுள் ஒன்றுதான் இப்பத்திரிகை வெளியீடு.

"தமிழ் நூற்களை ஆராய்வதாலும் பிரசங்கங்கள் செய்வதனாலும் பத்திரிகை முதலியன பிரசுரிப்பதனாலும் தமிழ்ப் பாஷையை சுயவிருத்தி செய்வதே இக்கழகத்தின் முக்கிய நோக்கமாகும்" என்று இக்கழகத்தின் ஆண்டு அறிக்கைப் பத்திரத்தில் அவர்கள் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள் (1916 ஜனவரி). கழகத்தின் நிர்வாக சபையில் தலைவர், துணைத் தலைவர், செயலர், உதவிச் செயலர், பொருளாளர் (தனரக்ஷகர்), கணக்குத் தணிக்கையாளர், செயற்குழு உறுப்பினர்கள் (பரிபாலன பிரதிநிதிகள்), நூலகர் (புத்தக சாலைக்கதிபர்), உறுப்பினர்கள், கௌரவ தலைவர் (கௌரவ சபாநாயகர் - ஞானியார் சுவாமிகள்) எனக் குறிப்பிடப் படுபவர் இருந்து சபையை நடத்தியுள்ளனர்.

புத்தக நிலையத்தின் வளர்ச்சியும் கலைமகள் பத்திரிகையின் சந்தாதாரர் வளர்ச்சியும் கழகத்தின் ஆண்டு வரவு செலவு கணக்கும் ஆண்டு விழாவிற்கு உதவியோர்க்கு நன்றியும் ஒவ்வொரு ஆண்டு விழாவிலும் சரியாகக் காட்டப்பட்டிருக்கின்றன. மொத்தம் ஆறு ஆண்டுவிழா அறிக்கைகள் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது.

"பத்திரிகையின் நோக்கமாக, கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலான விஷயங்கள் பிரஸ்தாபிக்கப்படும்" என்று கூறிய கலைமகள், பிரசுரிக்க விரும்பாத விஷயங்கள் எனச் சிலவற்றைக் குறிப்பிடுகிறது.

"இராஜ தந்திரம், மத தூஷணம் முதலிய விஷயங்களையும், நிந்தைக்குரிய மற்றெந்த விஷயங்களையும் நமது கலைமகள் தனதங்கத்தில் அணியச் சிறிதும் விரும்பாள்" என்று குறிப்பிடுகிறது. அரசியலையும் மதத்தையும் விலக்கிய ஓரிதழ் எப்படி மக்களைச் சென்றடைய முடியும்? மதத்தின் பெருமையைச் சுட்டி, மதம் மூலமாக, அரசியல் விடுதலைக்கான எழுச்சியைத் தட்டியெழுப்ப எத்தனித்த நாட்டுச் சூழலில், இத்தகைய 'சற்றே விலகியிரும் பிள்ளாய்' என்ற மனோபாவம் பத்திரிகையைப் பெரும்பான்மையான பொது மக்களிடமிருந்து விலக்கியே வைத்திருந்தது. ஐந்தாம் ஆண்டு அறிக்கைப்படி கலைமகளின் மொத்த சந்தாக்காரர்களின் எண்ணிக்கை 274 மட்டுமே.

'புதுவையும் கலைமகளும்' என்னும் தலைப்பில் கலைமகளில் வெளிவந்துள்ள கட்டுரையொன்றில் பத்திரிகையின் எதிர்காலம் பற்றிய கவலையையும் அதன்மேல் எழுந்த ஆதங்கத்தையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

> புதுவை என்னும் நகரமானது, இந்தியாவிலுள்ள பிரெஞ்சுக்காரருடைய பிரதானப் பட்டினம். இதில், முன் பல தமிழ்ப் பத்திரிகைகள் தோன்றி மறைந்தமை வெளிப்படை. காரணம், அவைகள் பொலித்திக்ஸ் எனப்படும் ராஜதந்திரமொன்றனையே தம் கருத்தாகக் கொண்டிருந்தமையே யாகும்.

நீண்ட காலம் பத்திரிகை நடத்திட விரும்பிய கலைமகள் கழகத்தினர் இப்பழைய படிப்பினையை வைத்தே அரசியலை விலக்க முடிவு செய்துள்ளனர். இதிலிருந்து அரசாங்கத்தின் பாதுகாப்பு கிடைக்கிறதோ இல்லையோ பகைமை கிடைக்காமல் இருக்கும் என அந்தத் தமிழ்ப் புலவர்கள் நினைத்திருக்கக் கூடும். அதை நம்மால் புரிந்து கொள்ள முடியும். மேலும், அதே சமயத்தில் அரசியலைத் தவிர்த்துவந்த சில இதழ்களும் நின்றுபோனதைக் குறிப்பிடும் இவர்கள் மக்களின் ஆதரவின்மையே அதற்குக் காரணம் என்று கருதினர். வாசக சாலைகளை (ரீடிங் ரூம்) நாடெங்கும் ஏற்படுத்துவதே பத்திரிகை வளர்ச்சிக்கு வழிவகுக்கும் என்று இவர்கள் முடிவுக்கு வருகின்றனர். படிக்கும் பழக்கம் தொடங்கிய காலத்தில் இத்தகைய யோசனைகள் தந்த இதழைப் பற்றி, வாசிக்கும் பழக்கம் வளர்ந்து, பின் தேய்ந்து இப்போது, 'பார்க்கும் பழக்கம்' எனும் புதிய பழக்கம் தொடங்கியிருக்கும் இக்காலத்தில் பேசுகிறோம்.

முதலாண்டு இறுதி இதழில் வெளிவந்துள்ள கட்டுரைகள் பற்றிய உள்ளடக்கக் குறிப்பை, இப்பத்திரிகையின் உள்ளடக்கத்திற்குச் சான்றாகக் காட்டலாம். இதில் இலௌகிகம், இலக்கியம், இலக்கணம், சாத்திரம் என நான்கு பெரும் பிரிவுகள் இருந்தன.

பத்திராதிபர், பிரசங்கம் எப்படியிருக்க வேண்டும் என்று கட்டுரை எழுதியிருக்கிறார். குழந்தை வளர்ப்பு எப்படியிருக்க வேண்டும் என்று அம்மணியம்மாள் என்னும் பெண்மணி கட்டுரை எழுதியிருக்கிறார். சு.சு. சுப்பராயப் பிள்ளை 'ரமணி' என்ற பெயரில்

நாவல் தொடர் எழுதி வருகிறார். 'கள்ளை விற்று, முக்கால் பணம் சம்பாதிப்பதிலும் கஸ்தூரி விற்று, கால் பணம் சம்பாதிப்பது மேல்' என்று பெயர் சொல்ல விரும்பாத இதோபதேசி மொழிகிறார். ஆசிரியர் பங்காரு பத்தர் மணிமேகலை பற்றிக் கட்டுரை எழுதுகிறார். தொல்காப்பியம் பற்றி இலக்கணக் குட்டி என்பாரும் நியாயமாலா பற்றி அநந்தபத்மநாப சுவாமிகளும் எழுதுகிறார்கள். வீர. சுப்பையா சுவாமிகள் 'மங்கலம்' என்னும் கட்டுரையை அருளியிருக்கிறார்கள். 'கப்பற்காரன் பேச்சு, காற்றடித்தால் போச்சு' என்ற இதோபதேசியின் கட்டுரையோடு மௌனகுரு ருத்திர ஆசாரியாரின் வைத்தியக் குறிப்புகளும் 'சமாசாரம்' என்ற பெயரில் செய்திகளும் இதில் உள்ளன.

புதுவைக் கலைமகள் இதழில் எழுதியவர்களுள் குறிப்பிடத் தக்கவர்களாகச் சிலரைச் சொல்லலாம். சி. பங்காரு பத்தர், பு.அ. பெரியசாமி பிள்ளை, மாகரல் கார்த்திகேய முதலியார், திருவண்ணாமலை K.V. இராமச்சந்திர ஐயர், காஞ்சிபுரம் சுப்பிரமணிய தேசிகர், புதுவை சு.சு. சுப்பராயப் பிள்ளை, தம்பி, புருஷோத்தமன், அவர் மகள் அம்மணியம்மாள், புதுவையில் அக்காலம் வாசம் செய்த வ.வே.சு. அய்யர், சென்னை பண்டிட் ந.ந. ஜனார்த்தனம் ஆகியோரை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

ஞானியார் சுவாமிகளும் கோவிலூர் வேதாந்த பாஸ்கர் வீர. சுப்பையா சுவாமிகளும் தொடக்கக் காலத்தில் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள்.

"கலைமகளில் காணப்பெறும் கட்டுரைகள், விஷயங்கள் கடினமாயிருக்கின்றன. எளிய நடையில் இல்லை. உலக அறிவை ஓங்கச் செய்யும் செய்திகள் இல்லை. கல்லாதவர்களுக்குக் கலைமகள் பயன் தரவில்லை" என்பன போன்ற விமர்சனங்கள் எழுந்ததை ஒட்டி 1916 ஜூலை மாதக் கலைமகளில் அதன் ஆசிரியர் நீண்ட பதிலை எழுதுகிறார்.

> பத்திரிகை பலசரக்குக் கடைபோன்றது. பலசரக்குக் கடையில் பலவகைப் பொருள்களிருக்கும். ஒருவர்க்கு ஒரு பொருள் வேண்டியதிருக்கும். மற்றொருவர்க்கு வேறொரு பொருள் வேண்டியதிருக்கும். இப்படியே அவரவர்களும் தங்களுக்கு வேண்டிய பொருளைப்

பெற்றுக் கொள்வார்கள். அது போலவே பத்திரிகையிலும் பலவகைப் பொருள்கள் காணப்படுகின்றன .... இப்படி பயன்தருதலைக் கருதியே இலௌகிகம், இலக்கியம், இலக்கணம், சாத்திரம் என்னும் நான்கு பகுதிகளைப் பெற்று நிலவுகின்றாள் கலைமகளென்க. இலக்கியம், இலக்கணம், சாத்திரம் இவற்றின் அறிவு பெறுபவர் உலகிற் சிறுபான்மையராக உலக அறிவு பெறுபவர் பெரும்பான்மையராதல் பற்றியே, பத்திரிகையின் அளவுக்கேற்ப மற்றைய பகுதிகள் சிறியனவாகவும் இலௌகிகப் பகுதி பெரியதாகவும் அமைக்கப்படுகின்றன.

வேடிக்கையான செய்திகளைச் சொல்லிப் பிறரைக் களிப்பித்தற்காக யாம் பத்திரிகை நடத்த வந்தோமில்லை. தமிழ் வளர்ச்சி பெறவேண்டுமென்பதும் தமிழ் மக்கள் தமிழறிவு பெற்றுத் தழைக்க வேண்டுமென்பதும் இப்போது நிலைகுலைந்து நிற்கும் தமிழணங்கு முன்போல் தலையெடுக்க வேண்டுமென்பதுமே கலைமகளின் முக்கிய கருத்தாகும்.

கலைமகள் ஆசிரியரின் இக்கட்டுரையிலிருந்து சில எண்ணங்களை நம்மால் பெற முடிகிறது. சாதாரண மக்களை இப்பத்திரிகை சென்றடையவில்லை. ஓரளவு கற்றாரை விடவும் இலக்கிய, இலக்கண, சாஸ்திரப் பயிற்சியுடையாரையே இப்பத்திரிகை அடைந்திருக்கிறது. அதோடு உலக அறிவை ஓங்கச் செய்யும் விடயங்களை, இப்பத்திரிகையால் மிகுதியாகத் தர இயலவில்லை. அதற்குக் காரணம், இப்பத்திரிகையில் பணிபுரிந்தோர் அதற்குப் பயிற்சியில்லாமல் இருந்ததும் பத்திரிகைக்குச் செய்திகளைத் தரும் செய்தி ஸ்தாபனங்கள் தோன்றி வளர்ச்சியுறாமையுமே யாகும். எனினும் இத்தகைய உலகியல் சூழல்களைக் கணக்கில் எடுக்காமல் தமிழ் வளர்ச்சி ஒன்றே தம் நோக்கம் என்று சொல்லப்புகுந்தது, ஒரு வகை தற்காப்பு முயற்சியாக இருக்கலாம்.

நான்கர்ண்டுகள் மிகச் சிறப்பாக நடந்து வந்த பத்திரிகை நான்காம் ஆண்டின் பிற்பகுதியிலேயே (1916 ஜூலை) சிரம திசையில் பயணப்பட்டது. ஐந்தாவது ஆண்டில் சிரமம் அதிகமானது.

“மேல்நாட்டில் நடைபெறும் பெரும் போர் காரணமாகக் காகிதம் முதலியன ஒன்றுக்கு நான்காக விலையேறிவிட்டது. அதுமட்டுமன்றி, அவை எளிதில் கிடைப்பதும் அருமையாய் விட்டன. அதனாலேயே மேல்நாட்டிலும் கீழ்நாட்டிலும் சில பத்திரிகைகள் நடைபெறாமல் நின்றுவிட்டன. சில பத்திரிகைகள் பக்கங்கள் குறைக்கப்பெற்றன; விலையேற்றப் பெற்றன; சில ஆதரவற்றுத் தவிக்கின்றன.”

“ஆனால் கலைமகளை விலையேற்றவுமில்லை. பக்கங்களைக் குறைக்கவும் இல்லை. நீங்கள் ஒவ்வொருவரும் கலைமகளுக்கு, சந்தா நேயர்களாயிருப்பதுமன்றி, கூடிய வரையில் புதிய சந்தா நேயர்களைச் சேர்த்தும் தரல் வேண்டும்” என்று கேட்டுக் கொள்கிறார் கலைமகள் ஆசிரியர்.

சந்தா நேயர்கள் சேர்ந்த மாதிரி தெரியவில்லை. பத்திரிகை 1917ஆம் ஆண்டில் 12 இதழ்கள் வரவேண்டியது 10 இதழ்கள் வெளிவந்தன. 1918ஆம் ஆண்டில் 12 இதழ்களும் வெளிவந்ததாகத் தெரிகிறது. 1919 ஏப்ரல் இதழ்வரையில் கிடைக்கிறது. அதன் பிறகு கலைமகள் கிடைக்கப் பெற்றிலள்.

ஓரிதழ் விலை அணா 2; வருடசந்தா 1 ரூபாய்; தபாற்கூலி 4 அணா.

## இதழின் சிறப்புகள்

தமிழ் இலக்கிய, இலக்கணப் பரவலை மேலாகச் செய்ததைக் குறிப்பிடலாம். தமிழ் இலக்கியத்தில் பழந்தமிழ் இலக்கியங்களான மணிமேகலை, யசோதர காவியம், சீவக சிந்தாமணி முதலியவற்றுக்கு ஆராய்ச்சிகள் எழுதியது குறிப்பிடத்தக்கது. அதுபோல, புதுத்தமிழ் இலக்கியமான நாவலைத் தொடராக வெளியிட்டதும் சிறப்புக்குரிய செய்தி. கலைமகளில் ரமணி, சற்புத்திரன், சஞ்சலம், தருணீமணி, கண்மணி கமலா ஆகிய நாவல்கள் வெளிவந்துள்ளன. இவையனைத்து நாவல்களும் புதுவைப் பெருமக்களால் எழுதப் பெற்றவையே.

வ.வே.சு. அய்யர் எழுதிய தொடரான பிரயோக இலக்கணம் 1916 ஆகஸ்டு - செப்டம்பர் இதழ் தொடங்கி டிசம்பர் வரை வெளியாகியுள்ளது.

இவ்விதழ் வெளிவந்த காலத்தில் புதுவையில் வசித்த பாரதியின் படைப்புகள் ஏதும் வெளிவராததும் அரசியலில் தீவிர ஈடுபாடுள்ள வ.வே.சு. அய்யரின் அரசியல் சார்பற்ற சமஸ்கிருத, தமிழ் மொழிச்சார்பான சொற்களின் பொருள் விளக்கத்தைத் தரும் பிரயோக இலக்கணம் என்னும் இலக்கணம், இலக்கியம் சார்ந்த கட்டுரைகள் வெளிவந்ததும் குறிப்பிடத்தக்கது. அரசியலின் காற்றுகூடப் பட்டுவிடக்கூடாது என்பதில் இதழாசிரியர் கொண்டிருந்த கவனம் நன்கு புலனாகிறது.

1916ஆம் ஆண்டின் பிற்பகுதியில் புதுவையில் அடித்த பெருங்காற்றினால் ஏற்பட்ட சேதத்திற்கு உதவி செய்ய வ.வே.சு. அய்யர் முன்னின்று பொருள் திரட்டியதும் அது எவ்வாறு செலவிடப் பட்டது என்பது பற்றியும் விவரமாக வ.வே.சு. அய்யரின் அறிக்கையாகவே இவ்விதழில் காணப்படுகிறது (1916 டிசம்பர் இதழ்). அக்குறிப்பில் பண உதவி செய்தவர் பட்டியலில் சுப்பிரமணிய பாரதியார் பெயர் 1 ரூபாய் உதவி அளித்தவர் பட்டியலில் உள்ளது.

வித்தை விரும்பு, கேள்வி முயல், வீடு பெறல் என்னும் ஆத்திசூடி வாக்கியங்களைத் தலைப்பாகக் கொண்டு விளங்கிய கலைமகள் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் சைவப் பயிர் தழைக்க பெய்த நல் மழையாகச் சிலகாலம் பெய்தது. அந்த மழையின் நீட்சியாகவே, தமிழ்ப் பொழில், செந்தமிழ்ச் செல்வி ஆகிய இதழ்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் நம்மால் உணர முடிகிறது.

# கலாநிலையம்

**1928** **இராம. குருநாதன்**

முப்பதுகளில் இலக்கியத்திற்குச் சிறப்பிடம் தந்த இதழ்களில் குறிப்பிடத்தக்கது 'கலாநிலையம்'. பண்டை இலக்கியத்தைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்தியதோடு, அதில் ஆர்வத்தை வளர்க்கத் தூண்டிய மிகச்சில இதழ்களில், தலைமை இடத்தைப் பெற்றது இதுவே எனத் துணியுமாறு கலாநிலையத்தின் செயற்பாடு விளங்கியிருந்தது. அதில் இடம்பெற்றிருக்கும் ஒவ்வொரு படைப்புமே அதற்குச் சான்றாகும்.

## இலக்கியத்திற்கான இதழ்

'கலாநிலையம்' 3 ஜனவரி 1928 முதல் 1 ஆகஸ்டு 1935 வரை வெளிவந்த இலக்கிய வார இதழாகும். இலக்கியத்திற்கு மட்டுமே முதலிடம் தந்து பெருமைபடைத்த இவ்விதழ், தமிழொடு ஆங்கிலமும் மறந்தறியாத திரு டி.என். சேசாசலம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த சிறப்பினையுடையது.

இப்பத்திரிகையின் உயிர்நாடி இலக்கியமே! இலக்கியக் கலையை மக்களிடையே வளர்ப்பதால், மக்களின் வாழ்வு செம்மையடையும்; ஆன்மா தூய்மையுறும்; அறிவு தழைக்கும்; உலகளாவிய சிந்தனை உயரும்; மனித நேயம் பெருகும் என்ற அடிப்படைகளை மையப்படுத்துகிறது கலாநிலையம். இலக்கியப் பயிற்சியைத் தமிழரிடையே வளர்ப்பது இதன் தலையாய கடமையும் நோக்கமுமாக இருந்துள்ளது.

> *இலக்கியக் கல்வியில் அருஞ்சுவைப் பயிற்சியை யாவரும் எய்தும்படியான சாதனமாமாறு முயல்வதே நம் கலாநிலையம் கைக்கொண்ட கருமமாயிற்று (1:10 - ப. 132)*

> *இலக்கிய உணர்ச்சியும் பயிற்சியும் எய்துவிப்பதே நல்வாழ்க்கைக்கு ஆதாயமாய நெறி என்னும் கொள்கை பூண்டுள்ளது (1:21 - ப. 314)*

என வரும் கருத்துகள் கலாநிலையத்தின் குறிக்கோளைப் புலப்படுத்திக்காட்டும். இவ்விதழின் இலக்கியப் பணிகளை மூவகைப்படுத்தலாம்.

1. பண்டைத் தமிழிலக்கியப் பணி
2. மொழிபெயர்ப்புப் பணி
3. படைப்பிலக்கியப் பணி

விடுதலைக்கு முன் வெளிவந்த இதழ்கள் சில, இந்த மூன்று தளங்களில் இயங்கிவந்தாலும் இவ் அனைத்துத் தளங்களிலும் முத்திரையை ஆழமாகப் பதித்தது கலாநிலையமே. கலாநிலையம் இம்மூன்று பணிகளையும் சிரமேற்கொண்டமை அன்றைய காலக்கட்டத்தில் வெளிவந்த ஏனைய இதழ்களிலிருந்து தனியே இதனை வேறுபடுத்திக் காட்டவல்லது.

திரு. டிஎன். சேசாசலம் இதழின் நோக்கத்தைப் பெரிதாய் எண்ணியிருந்தவர்; கலை, இலக்கியம் பற்றிய பேருள்ளத் திளைப்பில் ஆழ்ந்திருந்தவர். இதழின் வடிவம் குறித்த சிந்தனையைக் காட்டிலும், கட்டமைந்த உள்ளடக்க நேர்த்திக்கே சிறப்பிடம் தந்து இதழினை வெளிக்கொணர்ந்தார். இவர் கொண்ட கடின உழைப்பும், தணியாத் தாகமும் இதழில் வெளிப்படுகிறது. பொழுதுபோக்கு நிலையிலிருந்து சற்றே வேறுபட்டு விளங்கிய இவ்விதழ், இலக்கியம் கற்றலும் அறிதலுமே பயனுள்ள பொழுதுபோக்கு என்பதை நிலைநாட்டியுள்ளது.

> மாந்தர் தம் காலத்தையும் கருத்தையும் பயனில்லாத் துறைகளில் கழிக்காதவாறு காக்கக் கூடுமாயின் அதற்கேற்றன சொல்லவேண்டியது கலாநிலையத்தின் கடமை (1:52 ப. 1022)

என்பதைத் தெரிவிக்கிறது. பயனுள்ள இலக்கியத்தைப் படிப்போர்க்கு இறுதிவரை வழங்கிவந்துள்ளமை, கலாநிலைய இதழ் வரலாற்றில் குறிக்கத்தக்கது.

**தமிழின் தகவறிய . . . .**

இலக்கியத்தின்பால் ஆராக்காதல் கொண்ட ஆசிரியரின் ஒவ்வொரு முயற்சியும் பாராட்டத்தக்கது. தமிழ் இலக்கியத்தைத்

தமிழர்க்கு உணர்த்தியதோடு அமையாது, இலக்கியம் பயில ஓர் உந்து சக்தியாகவும் கலாநிலையம் விளங்கியது.

ஆசிரியரின் தமிழுணர்வு அளப்பரியது; அவரது இலக்கியப் புலமை கடலனையது. தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களிடம் இலக்கிய ஈடுபாடு இல்லையே என அவர் வருந்திய வருத்தம் எக்காலத்திற்கும் உரியதாக நிலைத்துவிட்டது.

> வீட்டில் பேசுகின்ற பாஷை தமிழாயிருந்தும் அப்பாஷையிலுள்ள இலக்கிய வாசனை என்பது ஆங்காங்கே இரண்டொருவரைத் தவிர பொதுவாய்த் தமிழர்க்கு இல்லை (1:10 ப. 182)

என உணர்த்தியிருப்பது நிலைத்த உண்மை ஆகும்.

பண்டைத் தமிழ் இலக்கியத்தைத் திறந்தவெளிப் பல்கலைக் கழக உயர்படிப்புக்குரிய சிறப்புப் பாடங்கள் போலவே அளித்துவந்தார் எனலாம். இதனோடு இலக்கியம் வளர்ப்பதை நிறுத்திவிடாமல், ஆசிரியர் 'கலாநிலையக் கல்விக் கழகம்' என்ற பெயரில் தமிழ் இலக்கிய வகுப்புகளைச் சென்னையிலும், தமிழகத்தின் சிற்சில இடங்களிலும் நடத்திவந்தார்.

> செல்வத்திலே செல்வம் சீவகாருண்யம். இன்பத்திலே இன்பம் இயற்றமிழின்பம். எல்லோர்க்கும் எங்கும் இன்னவித செல்வமும் இன்பமும் கைகூடுவதற்கு யாம் இந்நாள் தொடங்கிய இக்கருமம் இடையூறின்றி நடைபெறுமாறு அருட்பெருங் கடவுளை - நண்பர்கள், எம்மோடு சேர்ந்து வேண்டுமின் (1:1 ப. 2)

என்று கூறிய ஆசிரியர், இலக்கிய இன்பம் ஓர் அரிய செல்வம் என்பதை உணர்த்தியுள்ளார். இந்தச் செல்வத்தைத் தமிழர் பாதுகாக்க வேண்டியது மட்டுமல்லாமல் படித்தறிய வேண்டியது கடமையுமாகும் என்பதை வலியுறுத்துகிறார்.

நம் மொழியில் எழுந்த நூலைப் படிக்கின்ற பழக்கம் வளர வேண்டும் என்பதை வற்புறுத்தும் ஆசிரியர்,

> கம்பர் பிறந்த நாடாக இது இருந்தது போதும்; கம்பரைப் படிக்கும் நாடாக இது மாறவேண்டும்.

> திருக்குறளை அயல் பாஷைகளில் மொழிபெயர்த்திருக்கிறார்கள். நமக்கு எய்திய பெருமை போதும். அந்நூலைத் தமிழில் நாம் படிக்கின்ற திறமையும் பயனும் வேண்டும் *(2:24 ப. 464)*

என்று கருத்துத் தெரிவித்திருப்பது எல்லாக் காலங்களுக்கும் பொருந்தும்.

இயற்றமிழ் கற்பிக்கும் பணியைக் கலாநிலையம் இறுதிவரையிலும் போற்றிவந்தது. கலை எனில் இலக்கியக் கலையே என்பது ஆசிரியர் கொள்கையாதலால்,

> கலைபொருளை அறிமுகம் செய்விப்பதன்றி நம் கலாநிலையத்திற்கு வேறோர் தொழிலில்லை *(6:1 ப. 2)*

என்பதை உரத்த சிந்தனையால் வெளிப்படுத்தியுள்ளார். இலக்கியமே ஆன்மாவைத் தூய்மைப்படுத்தவல்லது; நல்வழிப்படுத்த வல்லது. ஆன்றோர் உய்யும் நெறிக்குப் புகலிடமாக இலக்கியம் இருப்பதோடு, மக்கள் வாழ்க்கையைச் சீராக்குதற்கும் செம்மையுறச் செய்தற்கும் தக்க துணையாகவும் விளங்குவது அதுவே என்பது அவரது கருத்தாக இருந்துள்ளது.

இலக்கியக் கலையின் மேன்மையை எடுத்துக்காட்டுதற்குக் கலாநிலையம் வாயிலாக இருந்துவந்துள்ளது. பண்டைத் தமிழின் பெருமையைப் பறைசாற்றுவதான கலாநிலையம், வாரந்தோறும் தமிழ்ப் பாடத்தைத் தொடர்ச்சியாக அளித்து அதனைக் கவனத்தோடு படித்து வருவதை வற்புறுத்தியது.

தமிழின்பால் கொண்ட ஈடுபாடு காரணமாக, தமிழைப் புறக்கணிப்போரை இதழாசிரியர் புறக்கணிக்கிறார். தமிழின் பெயரால் தமிழ்ப் பண்பாட்டிற்கு ஊறு இழைப்போரை,

> தண்ணளி தழைக்கும் தமிழின் பெயரால் புண்சில செய்வார் புந்தியை என்சொல *(6:15 ப. 226)*

எனக் கவின்மிகு நடையால் உரைநடையையும் கவிநடையாக்கி வீறுணர்ச்சியோடு கூறுகிறார் ஆசிரியர்.

“இயற்றமிழ் இன்பம் இடையூறின்றி நடைபெறுவதை நோக்கமாக்கிய இவ்விதழ், அன்றைய காலத்தில் தமிழ் இலக்கிய

இலக்கணத்திற்கு வளம் சேர்த்தது" என்பதனை மறுப்பாருமில்லை; மறப்பாருமில்லை.

## சீமை இலக்கியச் சீர்வரிசை

தமிழ் இலக்கியக் கல்வியோடு ஆங்கில இலக்கியத்தைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்துவதில் சிறந்து நின்றது கலாநிலையம். ஆங்கில இலக்கியத்தின்மீதுள்ள ஆராக்காதலும், தீராத்தாகமும் ஆசிரியரிடத்து, மிகுதி.

ஆங்கிலக் கல்வியை எதிர்ப்போரை இவர் எதிர்த்துள்ளார். 'ஆங்கிலம் படித்துச் சிறுவர் சக்தி குன்றி வாடிப்போகின்றனர்', என்று கருத்துத் தெரிவிப்போரைக் கண்டிப்பதோடு, ஆங்கிலவழிக் கல்வியை எதிர்ப்போரையும் எதிர்க்கிறார். இதுபற்றி,

> ஆங்கிலப் பயிற்சி கெட்டுத் தமிழிலும் ஒன்றும் தேராது
> எஞ்சுவதற்கே இயன்ற ஈடுபாடு இது *(1:10 ப. 182)*

என்று சுட்டுவதிலிருந்து இலக்கியப் பொதுமையை மொழி வேறுபாடின்றிப் போற்றியுரைப்பதாகக் கருதத் தோன்றுகிறது.

கலாநிலையத்தில் வெளிவந்துள்ள பயனுள்ள மொழி பெயர்ப்புகள் குறித்து ஆசிரியர் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

> நல்லவற்றை மொழிபெயர்த்துத் தருகிறது கலாநிலையம். அவலைத் தின்போர் தின்னட்டும்; அவியை உண்ண விழைவோர்தம் உறவினை வேண்டிநிற்கிறது கலாநிலையம் *(6:31 ப. 580)*

இலக்கியம் எம்மொழியிலிருந்தாலும் அதனைப் பயன்பாடு கருதி, உறவுடையதாக்கிக் கொள்ளவேண்டும் என்ற வேட்கையை மேலே கூறிய கூற்றால் வெளிப்படுத்துகிறார் ஆசிரியர்.

இலக்கிய உணர்ச்சியில் மிகுந்த கண்ணோட்டம் செலுத்திப் பிறரை அதன்வழி ஈர்க்கச் செய்வதைத் தனக்குரிய கடமையாகக் கருதிய கலாநிலையம், தமிழர்க்கு அவர்தம் மொழியின்கண் அமைந்த இலக்கண இலக்கியங்களையும், மேனாட்டு இலக்கிய உணர்வையும், வெளியிட்டு வெற்றிநடை போட்டது. ஆழமான இலக்கிய உணர்ச்சியின் துடிப்பால் ஆட்கொள்ளப்பட்ட ஆசிரியரின் இருமொழிப் புலமை அளவிடற்பாலது. வலிமையான இத்தகு

பின்னணியே கலாநிலையத்தை ஒரு பண்பட்ட இதழாகக் கொண்டுவந்துள்ளது.

## கலாநிலையத்தின் இதயம்

டி.என். சேசாசலம் அவர்களின் இலக்கியப் பயிற்சியும் அணுகுமுறையும் இதழின் வெற்றிக்குக் காரணமாக இருந்தன. அதற்காக அவர் எடுத்துக்கொண்ட விடாமுயற்சியும் தன்னம்பிக்கையும் தளராதவை. அவருடைய கடினமான உழைப்பு ஒவ்வோர் இதழிலும் வெளிப்பட்டுள்ளது. இலக்கியமே அவரது பெரும்பகுதி காலத்தை எடுத்துக்கொண்டது என்பது அறியப்படுகிறது; இலக்கியங் கற்றலில் பெரிதும் விருப்புடையவராக இருந்து, காலங்கழித்துள்ளார் என்பதற்கு அவர் படைத்தளித்தவையே சான்றுகளாகும்,

கலாநிலையத்தின் தலையங்கம் வாயிலாக அவரது விருப்பு வெறுப்புகளை அறியமுடிகிறது. அவர் இலக்கியமும் சமூக அக்கறையும் கொண்டவராகத் திகழ்ந்துள்ளார். கலாநிலையத்தை நடத்தி வருவதில் உள்ள இடையூறுகளைத் தெரிவித்திருப்பதோடு, தொடர்ந்து, அது வெளிவருதற்கான செயற்பாடுகளிலும் காலத்தைச் செலவிட்டுள்ளார். இதனை அவர் அவ்வப்போது தலையங்கத்தில் எழுதிவந்துள்ளார்.

கலையார்வம் மிக்கவரான ஆசிரியர் (டி.என்.எஸ்.) இதழின் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டுள்ளார். தமிழில் ஷெல்டனின் 'பிஸாரோ' நாடகத்தை மேடையேற்றி, அதில் கிடைத்த வருவாயை இதழின் வளர்ச்சிக்குச் செலவிடலானார்; கலாநிலைய வளர்ச்சி நிதிக்காக அந்நாடகம் சென்னை, காஞ்சி, காரைக்குடி, வலம்புரி, குடந்தை முதலிய ஊர்களில் நடத்தப்பெற்றது. 'பிஸாரோ'வாக ஆசிரியர் நடித்தார். 'எல்விரா' பாத்திரத்தில் அனந்தநாராயண அய்யரும், 'அலான்சோ' பாத்திரத்தில் வேலு நாயரும் நடித்தார்கள். இதழின் வளர்ச்சி நிதிக்காக இவ்விருவரும் ஊதியம் இல்லாமல் நடித்தனர்.

நாடகம் தவிர, திரைப்பட முயற்சியிலும் ஆசிரியர் ஈடுபட்டிருந்தார். தெலுங்குப் பட முயற்சியில் இறங்கினார். சத்திய சித்ரேவின் குருவான தேவகிபோஸ் என்பவரை அழைத்துவந்து, திரைப்படம் எடுக்கும் வாய்ப்பையும் பெற்றிருந்தார். தாம் எழுதிய

ஏமாங்கத்திளவரசன் என்ற நாவலை 'இராஜதந்திரம்' என்ற பெயரில் திரைப்படமாக்க எண்ணினார். அதற்கான திரைக்கதையை அமைத்திருந்தார் (டி.என்.எஸ். பற்றி அவருடைய மகனும் பத்திரிகையாளரும் எழுத்தாளருமான திரு. பரணிதரன் தந்த தகவல்).

இலக்கியத்தோடு மட்டுமன்றி, அதோடு தொடர்புடைய கலையிலும் ஈடுபாடு காட்டியுள்ளதை இவ்வகையில் அறியமுடிகிறது. மேலும் கலாநிலையம் வெளிவருவதற்கான அனைத்து முயற்சியிலும் இறுதிவரை இயங்கிவந்ததை ஆசிரியரிடத்துக் காண்கிறோம்.

## தலையங்க இலக்கியம்

கலாநிலையத்தின் தலையங்கம் ஒவ்வொன்றும் ஆழமான கருத்துடையது. தனித்தன்மை வாய்ந்தது. இதழின் முதற்பக்கத்தில் பொருளடக்கம் அமைந்த பகுதியின்கீழ்த் தலையங்கம் இடம்பெற்றுள்ளது. இரண்டு அல்லது மூன்று பக்கங்களில் தலையங்கம் எழுதப்பட்டுள்ளது. தலையங்கச் செய்திகள் பெரும்பான்மையும் இலக்கியம் மற்றும் பண்பாடு பற்றியன. சமுதாயம், தனிமனித ஒழுக்கம், கல்விநிலை, கலை, மனித மேன்மை, அழகியல் முதலிய சிந்தனைகளின் வெளிப்பாடுகளைத் தாங்கிய வண்ணம் தலையங்கச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவற்றை விளக்க, மேனாட்டறிஞரின் கருத்துரைகளை அப்படியே ஆங்கிலத்திலும், சில சமயம் மொழிபெயர்த்தும் வெளியிட்டுள்ளது. தாமஸ் கார்லைல், மாத்யூ ஆர்னால்ட், ஹெச்.ஜி. வெல்ஸ், ரஸ்கின், ஹெக்கல், டே ஹார்ட், எமர்சன், மேட்டர்லிங்க், செஸ்டர்பீல்ட், வால்ட் விட்மன், சி.இ.எம். ஜோட், பிளாட்டோ, சாக்ரடீஸ், ஸ்பினோஸா போன்ற மேனாட்டு அறிஞர்கள் மற்றும் தத்துவஞானிகள் கருத்துகள் இடம்பெற்றுள்ளன. காந்தி, அரவிந்தர், தாகூர் ஆகிய இந்தியப் பெருமக்களின் கருத்துரைகளும் உள்ளன.

தலையங்கத்தின் நோக்கத்தைப் புலப்படுத்திக் காட்டும் வகையில் ஒரு கருத்துப் பின்வருமாறு:

> 'கல்சரின்' பயனை ஒரு புறமும், மற்றவைகளின் பயனின்மையையும் பொல்லாங்கையும் மறுபுறமும் எடுத்தெடுத்து விளக்குவதே இக்காலத்திற்குரிய கடன். எம் தலையங்கங்களின் நோக்கமும் அதுவே (7:8 ப. 113).

பண்பாட்டின் மேன்மையைக் கூறி அதனைக் கைக்கொள்ளச் சொல்லியும், பண்பாடு, கீழ்மை அடைந்து வருவதை எடுத்துக்காட்டி மேலும் சீரழியாது அதனைக் காக்கவேண்டியதன் அருமையைப் போற்றியும் தொடர்ச்சியாகத் தலையங்கங்கள் இடம்பெற்றுள்ளன. பண்பாடு குறித்துத் தொடராக வெளியிடப்பெற்றுள்ள தலையங்கத்தில் ஆசிரியரின் சமூக அக்கறை நன்கு தெரிகிறது.

தலையங்கத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் புதியனவல்லவாயினும், அவற்றை ஆராயும் முறை சிலர்க்குப் புதியதாயிருக்கலாம் என்ற கருத்தை வெளிப்படுத்தும் ஆசிரியர், தலையங்கத்தில் இடம்பெறும் செய்திகளையோ, நடைத்திறத்தையோ, சொல்லும் வன்மையையோ யாருக்காகவும் மாற்றிக் கொண்டதில்லை.

> கலாநிலையம் தான் சொல்வதை வெளிப்படையாகவும் பக்ஷபாதமின்றியும் சொல்லி வருகின்றது. அச்சத்தாலேனும் ஆசையாலேனும் பழிக்கத்தக்கவற்றைப் புகழ்வதில்லை; புகழத்தக்கனவற்றைப் பழிப்பதுமில்லை. பழிப்பாரோடு பழித்துக் கொண்டும், புகழ்வாரோடு புகழ்ந்து கொண்டும் அவ்வக்காலத்தில் இவ்வுலகின் செவி எதனைக் கேட்டுப் பழகியிருக்கின்றதோ அதனையே மீண்டும் மீண்டும் இயம்பி யாவரையும் எளிதில் நன்று எனச் சிரசமைக்கும்படி செய்தல் வெகுசுலபம் (1:52, ப. 1022)

என முதலாண்டு நிறைவின்போது வெளியிட்டுள்ள தலையங்கச் செய்தி கவனத்திற்குரியது.

செய்திகளைப் பண்டிதநடையில் எழுதிவருவதால் கடுமையாக இருக்கிறது என்பதை ஆசிரியர்க்கு வாசகர் ஒருவர் தெரிவிக்கவும், அதற்கு ஆசிரியர் தம் நடையைத் தொடர்ந்து படித்துவந்தால் அது கடுநடையாகத் தோன்றாது என்றும் வாசகர் அதனைக் கற்பதால் இயல்பும் எளிமையும் கூடும் என்றும் எழுதியுள்ளமை எண்ணிப்பார்க்கத் தக்கது. தடைவிடைகளினாலான தருக்க நடையும், செறிவுடன் கூடிய தக்க உவமையும் கருத்துப் புலப்பாடும் தலையங்கச் செய்திகளுக்கு அணி சேர்த்துள்ளன. கல்வியும் அறிவும் பற்றிய கருத்தோட்டத்தைத் தெரிவிக்கும் தலையங்கம் ஒன்றை இதற்கு எடுத்துக்காட்டலாம். அது பின்வருமாறு:

> மண்ணால் செய்த குடம் என்னும் வழக்கில் முதற்கருவியாக மண்ணே குடமாவது போலக் கல்வியே அறிவாக ஆகின்றது, என்று எண்ண ஒண்ணாது. உளியால் செய்த பெட்டி என்று எண்ணுங்கால் உளியே பெட்டியாக மாறாமல் பெட்டியைச் செய்தற்கு உளி துணைக் கருவியாகி நிற்கின்றதே போல் அறிவு விளைவதற்குக் கல்வி ஒரு துணைக் கருவியாய்த் தனித்து நிற்கும் சாதனம் என்பது மறக்காதிருப்போமாயின் கல்வி அறிவை மூன்றன் தொகை என்று உரைப்பதால் தவறு நேராது (1:1 ப. 27)

என வருமிடத்து இலக்கிய விளக்கத்துடன் கூடிய தடைவிடைகளினாலான தருக்க நடை, கருத்துப் புலப்பாட்டை உணர்த்தக் காணலாம். இது அன்றைய காலத்துப் பண்டித நடை ஆகும் என்றாலும் செய்தித் தெளிவை விட்டு விலகாமல் நிற்கிறது.

'புலமைக்குரிய பொய்' என்ற தலையங்கப் பகுதியின் தொடக்கத்தே வருணனைப் பாங்குடைய கவிதை நடையில் காட்டுவதும் அத்தகையதே.

> காமநோயுற்றார்க்கு அந்தியும் தென்றலும் பிள்ளைப் பிறையும் அன்றிலும் முழுமதியும் இரவும் இருளும் சந்தனக் குழம்பும் நறுமணக் கமழ்ச்சியும் யாவும் துன்புறுத்துந் தன்மையைப் பலபட நுவல்கின்ற பாகங்கள் எந்நூலிலும் அழகின் சிறப்பெல்லாம் அடங்கப்பெற்றிருக்கின்ற தென்பது ஒருதலை (2:7 ப. 122).

இது இலக்கிய நீர்மையோடு கூடிய வருணனை நடையாகத் திகழ்கிறது.

ஒன்றனைச் செய்தி நடையாக எழுதும்போதும் இலக்கியச் செறிவு அவர் எண்ணத்தில் இயல்பாக வெளிவருவதை உணரலாம். இலக்கிய இதழானாலும், கலை, அரசியல், சமூக, பொருளாதார, வரலாறு, பண்பாட்டுச் சூழ்நிலைகளை ஆராயுமிடத்து விரிவும் விளக்கமும் பொருந்திய நிலைகளில் கருத்துரைப்பதைத் தலையங்கத்தில் காணமுடிகிறது.

கடுநடையாயினும், இலகு நடையாயினும் இவை இரண்டையுமே கைவரப்பெற்றவர் ஆசிரியர். சொல்வன்மையோடு கூடிய இலகு நடையை ஓர் எடுத்துக்காட்டு மூலம் காட்டலாம்.

'இருப்பன அமையாவோ' என்ற தலையங்கப் பகுதி இந்திய ஆட்சி மொழி பற்றிச் சுட்டிக்காட்டுகிறது. அதில்,

> சட்டசபைகளும் மற்ற அரசாங்கக் காரியங்களும் சரிவர நடைபெறுவதற்கு முன்சாக்கிரதையாக நாம் இப்பொழுது இந்தி பாஷையைக் கற்று வைத்துக் கொள்ளவேண்டும் என்பது, உயிர்நிலையாய் நிரந்தரமாய் இருக்கின்ற பொருள்களை விட்டு விட்டு வாய்ப்பேச்சால் வாழ்விற்கு வழி செய்து வைக்கின்ற காரியமாகும். கழனிக்கு நீர் பாய்ச்சாமல் புறம்போக்கைச் செப்பனிடப் போவானேன் (1:51 ப. 1002)

என்ற கருத்தை வெளியிட்டிருப்பது புரியக்கூடிய நடையில் அமைந்துள்ளது.

கலாநிலையத்தின் தலையங்கங்கள் இரு நோக்குடையவை. ஒரு நோக்கு இலக்கியக் கலையின் மேன்மை; மற்றொரு நோக்கு, பண்பாட்டின் அருமை. இவை இரண்டையும் ஆன்ம சிந்தனையோடும் ஆன்மிக உணர்வோடும் இதயசுத்தியோடும் போற்றிப் பாதுகாப்பதோடு, மனிதர் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய நெறியாகவும் அவை அமைவன என்பதைப் பல்வேறு தளங்களில் தலையங்கங்கள் உணர்த்திச் செல்கின்றன.

"அரசியல் முறைகளின் குணாதி குணங்களைப் பற்றி வாதிக்க இப்பத்திரிகை நினைத்ததில்லை" (1:1 ப. 1) எனக் கூறினாலும், இன்றியமையாமை கருதி, கலாநிலையம் சில சமயங்களில் அரசியல் பற்றிய தலையங்கங்கள் சில தீட்டியபோது, "பத்திரிகையுலகில் இது ஒரு சிறிது புதுமையாய் இருக்கலாம்" (2:25 ப. 490) என்று தன்னைக் கருதிக் கொண்டது.

கலையின் மேன்மை பல்வேறு தலைப்புகளின்கீழ் இடம் பெற்றுள்ளது. 'செய்யும் கருமமும் செயல் வகையும், முயலாது இயலாது சொல்வோரிற் கேட்பவர் அருமை' (1), 'புலமைக்குரிய செயல்' (2), 'அரைக் கோழியும் முழுப்பிள்ளையும்' (6), 'பிறவாதார்

பிழைக்கமாட்டார்' முதலிய தலையங்கத் தலைப்புகள் கலையுணர்வின் சிறப்பினை வெளியிட்டுள்ளன. போலிக் கல்வியின் புன்மையும், இலாப வேட்டையாடும் சுயநலவாதிகளின் சூழ்ச்சித் தந்திரமும், 'முயலுக்கு முயல வேண்டா;' 'சகுனி மரபு சாய்வதில்லையோ மல்வோலியாவின் மரபு மாய்ந்ததில்லையோ' (3) ஆகிய தலையங்கங்களில் அலசப்பட்டுள்ளன.

கலையுணர்விற்கு அடுத்த நிலையில் ஆன்ம உணர்வோடு கூடிய இறைநிலையின் மேன்மை பல தலையங்கங்களில் சுட்டப்பெறுகிறது. 'புதுப்பிறவி' (1), 'சிறுமையும் பெருமையும்' (4), 'சர்க்கரையும் சந்திரனும்' (7), 'கடவுட் சித்தம்' (8) முதலிய தலைப்புகள் உள்ளுணர்வைக் கடைந்து அதனில் விரவி நிற்கும் உண்மை நிலைகளை இறையருளாகக் காட்டுகின்றன.

கல்விநிலையின் சிறப்பும் அது சிலரால் வணிகமயமாக ஆக்கப்படுவது பற்றியும் தலையங்கங்கள் இடம்பெற்றுள்ளன. 'பேயச்சில் பிழைகளா' (3) 'பொழுதெல்லாம் பொய்யோ' (3) முதலியன இத்தகையன.

> கள்ளுக்கடையையும் வேசையர் வீதியையும் அடைக்க முயலுமுன். . . பாடசாலைகளை இடித்துத் தகர்க்கும் வழியைத் தேடவேண்டுமென யாம் இவ்வளவு வற்புறுத்துகின்றோம். . . வயிறு வளர்த்தலே இக்காலப் பாடசாலைகளின் நோக்கம் என்பதை மறுப்பவர் மெய்யை உணராரோ!. . . அல்ப ஆசை, அல்ப நோக்கம், இவை நிறைவேறுதற்குரிய அல்பக் கருவிகள் ஆகியவைகளைப் பெறுதற்கே இப்பாடசாலைகள் திகழ்கின்றன (3:38 ப. 742)

என்ற கூற்று கல்விச்சாலையில் சீர்திருத்தம் வேண்டாதாரை வன்மையாகச் சாடுகிறது.

சமூக அக்கறையை வற்புறுத்துவனவாய்ச் சில தலையங்கங்கள் அமைந்துள்ளன. 'முப்பிழை' (1), 'விலகவோ! விலக்கவோ!' (1) ஆகியன முறையே சாதி பற்றிய வேற்றுமைகள், தீண்டாமை முதலிய சமூகக் குற்றங்கள் களையப்பட வேண்டும் என்பதை உணர்த்துவன. மானிட இயற்கைக்கு மாறான பண்புகள்

'சொன்னால் விரோதம்' (6), 'புன்மையின் மேன்மை' (6) முதலிய தலையங்கங்களால் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன.

கலாநிலையத்தின் தலையங்கம் ஒவ்வொன்றும் நீண்டவை; அதன் கருத்துகள் ஆழமானவை. எவ்வகைச் செய்திகளை எப்படிக் கூறினாலும் அதன் மூச்சு இலக்கியமே. எத்தகைய சிந்தனைகளையும் இலக்கியக் கலையின் உள்வட்டத்துக்குள் அடக்கிவிடுகிறது.

தலையங்கத்தின் புற அமைப்பு இயல்புகளைக் கீழ்க்காணுமாறு எடுத்துக்காட்டலாம்.

(1) முதல் பக்கத்தில் தலையங்கம் அமைதல்.

(2) தலைப்புங்கூட இலக்கியமாக - கவித்துவமான தலைப்பில் அமைதல் ('அவிவேறு; அவல் வேறு' 6:31).

(3) மேனாட்டாரின் சிந்தனைகளை வாய்ப்பாக எடுத்துக்காட்டும்பொழுது நேரடியாகவும், மொழி பெயர்ப்பாகவும் தருதல்.

(4) தொடர்ச்சியாக ஒரே தலைப்பை அமைத்துச் செல்லுதல் ('செய்யும் கருமமும் செயல் வகையும் கடவுட் சித்தம்' போன்றவை).

(5) ஒரு தலைப்பின் அடிப்படையில் பல வகைப்பாடுகளை அடுத்தடுத்துத் தலையங்கங்களில் காட்டுதல் (தொடர்பான தலையங்கங்கள்).

(6) தலையங்கம் ஒரே இதழில் முடிவுறாமல் அடுத்த இதழில் தொடர்தல்.

(7) தலையங்கங்கள் சில சிறு மாற்றங்களோடு பின்னும் இடம் பெறுதல்.

இவ்வாறு புறவயமான இயல்புகளைத் தலையங்க உத்தியாகக் கருதியுள்ளது கலாநிலையம். தலையங்கமே இலக்கியமாகும் உணர்வினை இதன்கண் காணலாம். இதில் கூறப்பட்டுள்ள செய்திகள் கூர்மையான சிந்தனையின் வெளிப்பாடுகளாக உள்ளன. பெரும் ஆராய்ச்சி செய்தற்குரியவையாக இதன் தலையங்கங்கள் அமைந்திருப்பதைக் கற்றோர் உணர்வர்.

## பண்டைய இலக்கியம்

தமிழில் உள்ள பண்டைய இலக்கியத்தைத் தமிழர் அறிந்திருக்க வேண்டும் என்பது கலாநிலைய ஆசிரியரின் பேரவா. தமிழ்ச்சுவை அறிந்த தகவினராகத் தமிழர் விளங்கவேண்டும் என்பதைக் கலாநிலையத்தில் ஆங்காங்கே பதிவு செய்துள்ளார் அதன் ஆசிரியர்.

> தமிழ் மொழியிலுள்ள இலக்கியங்களைப் போதிக்க வல்லவர் ஊர்தோறும் ஒரு சிலரேனும் இலராகார். இன்னவர் தங்கள் ஊரிலுள்ளவர்களைத் தங்களால் இயன்ற வரையில் தம்மோடு சேர்த்துக்கொண்டு தமிழ்ச்சுவை அவர்களுக்கு வாய்க்கும்படி ஆவன செய்து ஒழிந்த நேரங்களில் உதவி வருவார்களாயின், மிகவிரைவில் பண்பும் பயனும் உடைய வாழ்க்கை எங்கும் பரவத் தலைப்படும் என்பதில் ஐயமில்லை (7:6 ப. 83)

என்ற கூற்று, தமிழ் இலக்கியத்தின்வழித் தமிழரின் வாழ்வு சிறக்கும் என்ற உள்ளக்கிடக்கையைக் காட்டும்.

கம்பராமாயணம், நளவெண்பா, சூளாமணி ஆகியவற்றிற்கு விளக்கம் தந்து ஆசிரியர் வெளிப்படுத்தியிருக்கும் கருத்துகள் வியக்கற்பாலன. அவை ஆழ்ந்திருக்கும் கவியுள்ளத்தைக் காணவும் காட்டவும் வல்லன. டி.என்.எஸ். அவர்களிடம் இருந்த ஆழமானதும் அகன்று விரிந்ததுமான இலக்கியப் பயிற்சி அளவிடற்கரியது; அவர் வரைந்துள்ள உரைநுட்பங்களும், இலக்கிய நயங்களும் சுவை தருவன; பொருள் நுட்பம் தோன்றச் சொற்களை இயைபுபடுத்திக் காட்டுவன.

கம்பரில் தோய்ந்த அவரது உள்ளம் ஆழங்காண முடியாதது. விரிவான ஆராய்ச்சிக்கு இடந்தருவன அவரது நயவுரைகள். உணர்ச்சி ஊற்றெடுத்துப் பொங்கிப் பெருகும் போக்கில் அமைவன. கம்பனைப் பற்றிய அவரது கவிதை நெஞ்சம், காவியச் சுவையில் கம்பனை மிஞ்சியோர் இல்லை என்று எண்ணுமளவிற்குக் கம்பரில் ஆழங்காற்பட்டது. ஆசிரியர் நெஞ்சில் கம்பரும், கம்பரது நெஞ்சில் ஆசிரியரும் புகுந்து புறப்பட்டு வருவது போன்ற நிலைகளைக் கம்பராமாயண உரை மூலம் காணலாம். ஆசிரியரின் உரைத் திறனுக்குச் சான்றுகள் சில!

சிவன் போல வெண்மேகம் காட்சி அளிக்கிறது; அது கடல் நீரை உண்ட பின் திருமாலை நினைவூட்டுகிறது. பால காண்டத்தில் கம்பர் தரும் இக்காட்சியினை இக்கால நோக்கிற்கேற்ப விளக்கம் கூறியுள்ளார்.

> அரனும் அரியும் தொழிலிற்கேற்ற உருக்கொண்டு அவ்வப்போது நடிப்பவரல்லாது தன்மையிற் சிறிது வேறுபட்டுத் தனித்திருப்பவரல்லர் எனும் தத்துவம் எளிதில் விளங்கும். எடுத்துக் கொண்டது விட்டுணுவின் அவதாரக் கதையானாலும் இங்கு மதப் பிணக்குற்று என் தெய்வம் உன் தெய்வம் என்று எதிர் வழக்கிடுவோர்க்குச் சிறிதும் முகங்கொடேன் என்று கம்பர் முதலே சொல்லிவிடுவார் போல இதனால் தோன்றுகிறது (1:2 ப. 9).

இவ்வாறு விளக்கங் கூறுவதோடமையாமல், உவமைத்திறமும் அணிநயமும் புலப்படுமாறு இதனை நயப்படுத்துகிறார்.

> வரையிலாது கொடுக்கும் வள்ளல்களுக்கு மேகத்தை உவமையாகக் கூறுவது வழக்கம். இதை மாற்றி நம் கவி இங்கு வள்ளல்களை உவமானமாயும் மேகத்தை உவமேயமாகவும் கொள்கின்றார். இவ்விதம் காட்டுவது விபரீத உவமையணி. இவ்வணியைக் கையாள்வதில் கம்பருக்கு உள்ள திறம் யாவரும் பெற்றதில்லை (1:2 ப. 9)

இவ்வாறு ஆசிரியரின் புலமை விரிந்து பரவுமாறு உணரக்கிடக்கிறது. அணியிலக்கணங் கூறுவதிலும் சொற்பொருள் இன்பம் காட்டுவதிலும் அவரது திறன் வெளிப்படக் காணலாம். 'குருவின் வாசகங்கொண்டு' எனத் தொடங்கும் பாடலில் 'திருவின் கேள்வனைக் கொணர்மின்' என வருமிடத்து,

> தயரதன் இத்தொடரைச் செல்வன் அழகன் என்ற கருத்தில் வழங்கினானெனினும், பின்னால் இச்செய்கையால் இராமன் இலக்குமிக்கு மீண்டும் நாயகன் ஆகப் போவதை உணர்ந்த நாம் மன்னனின் இவ்வாய்ச் சொல் கேட்டு வியக்கிறோம் (1:31 ப. 616)

என்று கூறியுள்ளதோடு இத்தொடர் ஓராதுரைத்தலணி (Dramatic Irony) எனப்படும் எனவும் சுட்டுகிறார்.

'தாவரும் இருவினை' எனத் தொடங்கும் பாடலில் இடம்பெறும் 'பாவையர் மனமும் போல் பசையுமற்றதே' என்ற தொடர்க்கு விளக்கங் கூறுகையில்,

> முத்தர்களையும் வேசியர்களையும் ஒரே வரிசையில் வைத்து விளக்குதல் கம்பரது கூற்றிலே நகைச்சுவையன்றி உண்மைப் பொருளும் அடங்கியிருக்கிறது. இருவரும் வேண்டுதல் வேண்டாமை அற்றவர்களாதலால் ஓரிரதத்தில் உலா வருதற்கொத்தவர்களே (1:34 ப. 656)

என்று நுட்பமாகப் பொருள் கண்டுரைப்பர்.

சொற்பொருளைப் பிரித்துச் சுவையும் இயைபும் தோன்றச் செய்துள்ள திறம் ஏற்கக்கூடியதாயுள்ளது. 'ஆடவர், பெண்மையை அவாவும் தோளினாய்' எனச் சீதை வருணிக்கப்படுமிடத்து, ஆடவர் என்ற சொல்லை, ஆள் + தவர் எனப்பிரித்துத் தவத்தை ஆள்கின்ற முனிவர்களும் நின்னைக் கண்டால், பெண்களாகித் தழுவ விரும்புவர் எனக் கூறிக் கம்பரே கம்பரை வெல்லக் காணலாம் (1:34 ப. 65) என்று கருத்துரைப்பது சுவை பயப்பதாகும்.

கம்பர் பற்று மிக்கோங்கிய ஆசிரியர் பொற்பின் நின்றன (1:8), பரிதிவான் அவனிலம் (1:34), புவியினுக்கணி (1:47), துன்னரும் கொடுமனக்கூனி (3:24), நவ்வி வீழ்ந்தென (3:38), தயா முதலறத்தழுவி (4:49), பண்டை நாள் இராகவன் பாணிவில் (3:37) முதலிய தொடர்களைச் சொற்பொருள் இன்பமும் கவிநயமும் பயப்பனவாய் எடுத்துக்காட்டியுள்ளார்.

நளவெண்பாவிற்கு உரைகாணும்போது அறிமுகம், பதப்பொருள், பதப்பிரிப்பு, அன்வயம், கருத்து, விரிவுரை, விளக்கம், நயவுரை, இலக்கண விளக்கம் என்று பல்வேறு வகைகளில் அமைத்துக்கொண்டு எழுதிச் செல்கின்றார். இலக்கண விளக்கத்தோடு அணிநுட்பமும் அவற்றில் காட்டப்பெற்றுள்ளது.

> கொடாதார் அகம்போல் குறுகிற்றே மெய்ம்மை
> விடாதான் திருமேனி வெந்து

என வரும் வெண்பா அடிகளில் இடம்பெற்றுள்ள 'அகம் குறுகும்' என்பதைச் சிலேடையாக்கிக் கூறுவர். வறியார்க்கு ஒன்றும் கொடுக்காத உலோபிகளது அகம் (மனம்) குறுகும்; அகம் (மனையும்) கெடும் என இரு பொருள் காண்பர்.

'முந்தை வினை குறுக' என வரும் நளவெண்பா அடிகளுக்குக் கீழ்க்காணும் சிறப்புப் பொருள் தருகிறார் ஆசிரியர்.

> நளனையும் தமயந்தியையும் விதி பிரித்துவைத்திருந்த தீவினை தேய்ந்து அகன்றபடியால் அத்தேர் கடுகிச் சென்றது என்பது பொருள். மற்ற அர்த்தத்தின்படி நளனும் தமயந்தியும் மறுபடி சேர்வதாகின்ற நல்வினை நெருங்கியதாகையால் அத்தேர் கடுகிச்சென்றது என்பது பொருள். தீவினையாலும் நல்வினையாலும் இரண்டும் முந்தைய வினைகளே (6:12 ப. 235).

வினையை இவ்வாறு விளக்கும் நுட்பம் அருமையானது. நெடுவானில் மஞ்சு ஓட (1:13), மனைக்குரியாரன்றே (1:33), போவாய் வருவாய் (6:2) முதலியவற்றில் நயந்தோன்ற நளவெண்பாக் காட்சிகளை விவரித்துரைப்பர்.

தமிழ்க்காப்பியங்களில் ஒன்றான சூளாமணிக்கு உரை செய்துள்ளார் ஆசிரியர். இவரே இதற்கு முதன்முதலாக உரை வகுத்துள்ளார் (4:1, ப. 2) எனத் தெரிகிறது. பன்மொழிப் புலவராக விளங்கிய தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் சூளாமணியின் பிற்பகுதிக்குரிய உரையினைத் தொடர்ந்து எழுதிவந்துள்ளார். டி.என்.எஸ்., கம்பராமாயணம், நளவெண்பா, நைடதம் போன்றவற்றிற்கு எழுதிய விரிவான உரை போன்றில்லாதது கருதுதற்குரியது. எனினும், சூளாமணியில் சொற்பொருள் இன்பமும் சிலேடை நயமும் விளங்குமாறு உள்ள பகுதிகள் குறிப்பிடத்தக்கன. அந்நூல் முழுதிற்குமாக இவர் உரை எழுதாமை ஒருவகையில் இலக்கிய ஆர்வலர்க்கு இழப்பே!

மேற்கூறிய இலக்கிய நூல்களின் உரைகள் தவிர, வில்லி பாரதம், ஆழ்வார் பிரபந்தங்கள் முதலானவற்றிற்குரிய உரைகள் இடம்பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் குறுந்தொகை, கலித்தொகை ஆகியனவும் உரை கண்டுள்ளன. இவற்றிற்கு ஏனையோரால் உரை எழுதப்பட்டுள்ளன. நம்மாழ்வார் வைபவத்திற்கு சே. இராஜ கோபாலாச்சாரியாரும், குறுந்தொகைக்கு இராமரத்நம் ஐயரும், கலித்தொகைக்கு டி.ஏ. கனகசபாபதி முதலியாரும் உரை எழுதியுள்ளனர். குறுந்தொகைக்கு முழுதுமாக உரை எழுதப்பட்டுள்ளது.

குறுந்தொகைக்கு இராமரத்நம் ஐயர் எழுதியுள்ள உரை சுருக்கமானது; தெளிவானது; நுட்பமானது; உள்ளுறை, இறைச்சி காட்டப்பட்டுள்ளது; இலக்கிய நயம் நிறைந்தது. சான்றுக்கு ஒன்றனைக் கூறலாம். 'யாருமில்லை தானே கள்வன்' என்ற குறுந்தொகைப் பாடலில் வரும் 'குருகும் உண்டோ' என்ற தொடருக்கு ஒரு புதுமையான விளக்கத்தைச் சுட்டுகிறார் ஆசிரியர்.

> ஆரல்மீன் உண்ணும் கருத்தோடு இயைந்தமையின் இதனை ஒருகால் அறியாதிருத்தல் கூடும். அறியாதிருப்பினும் தீங்கு இழைப்பதையே தொழிலாகக் கொண்ட அது, பரிந்து சாட்சி கூற முன் வராதிருத்தல் கூடும் என்பது கருதிக் 'குருகும் உண்டோ' என்றார் (3:5 ப. 309).

தலைவன் தன்னை மணந்ததற்குச் சாட்சியமாக எவையேனும் உள்ளனவா என ஆவலாகச் சுற்றும் முற்றும் பார்த்த நிலையில், மீனைக் கவர்தற்குக் குருகு நின்றிருந்த காட்சி தலைவியின் கண்கள் முன் விரிகின்றது. மீனைப் பிடிப்பதிலேயே அதற்குக் கவனம்! அந்நிலையில் அது சாட்சி கூற வருமா என்ற தவிப்பு அவளுக்கு! அவ்வாறு குருகிற்குத் தீங்கு இழைப்பது நோக்கமாக இருக்க, நன்மைக்குத் (தலைவன் தன்னை மணந்தமைக்குச் சாட்சி கூற) துணை வருமா என்பதில் அவளுக்கு ஐயமும் பரிதவிப்பும்! இவ்விதமாகத் தலைவி மனநிலைக்கு உரையாசிரியர் பொருள் கண்டிருப்பது நுட்பமானது. துய்ப்புணர்ச்சி நல்குவதாகும்.

கலாநிலையத்தில் இடம்பெற்றிருக்கும் இலக்கியக் கட்டுரைகள் தனித்து எண்ணத்தக்கன. ஆழமான பார்வையில் விரிந்து பல்குவன; ஆராய்ச்சிப் போக்கின. ஒரு கட்டுரையின் பொருள் என எடுத்துக்கொண்டால், அதில் பல்வேறு பரிமாணங்களையும் எவ்வகையில் பொருத்திக் காட்டுவது என்பதற்குக் கலாநிலையம் சிறந்த முன்னோடியாக இருக்கக் கூடும். ஒவ்வொரு கட்டுரையும் மிக்க கவனமுடன் எழுதப்பட்டிருப்பது, கட்டுரையாசிரியர்களின் ஈடுபாட்டையும், தேர்ந்த புலமையையும் உணர்த்தி நிற்பதாகும்.

கலாநிலையக் கட்டுரையாளர்களில் தெ.பொ. மீனாட்சி சுந்தரம், டி.ஏ. சபாபதி முதலியார், டி.ஆர். இராசகோபால், ஆர். முத்தையா, ஈ.டி. சொக்கம்மாள், கே. இராசகோபாலன், வி. நாராயண ஐயர்,

டி.வி. இராசகோபால பிள்ளை, ஈ.எஸ். தணிகாசல முதலியார், டி.எம். கல்யாணராமய்யர், அ. ஸ்ரீநிவாசராகவன், ஈ.டி. சொக்கலிங்கம், கே. நாராயணசாமி ரெட்டிகாரு, திம்மப்பா ஐயர், டி.எஸ். நடராச பிள்ளை, எம்.பி. குமார நாயகம், வி.வி. சீனிவாசாச்சாரியார், ஆர்.டி. விஜயராகவாச்சாரியார், ஈ.டி. இராஜேஸ்வரி அம்மாள், ஆர். நரசிம்மன், எஸ். சோமசுந்தர தேசிகர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இவர்களில் பலர் கட்டுரைகளைத் தொடராக அளித்து வந்தவர்களாவர்.

'சேக்கிழாரும் திருக்கண்ணப்பரும்' என்ற தெ.பொ.மீ.யின் கட்டுரைத் தொடர் விரிவானது. வடமொழி, தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், மெய்ப்பொருள் முதலிய விரிந்த பின்னணியில் எழுதப்பட்டுள்ளது. சேக்கிழாருக்கு முன்னும் பின்னும் நிலவிய, நிலவிவந்துள்ள கண்ணப்பர் பற்றிய இலக்கியக் குறிப்புகளை ஆழ்ந்த ஈடுபாட்டோடு ஆராய்ச்சி நோக்கில் வெளிப்படுத்தியுள்ளார் தெ.பொ.மீ.

'இலக்கிய ஏற்ற ஆராய்ச்சி' என்ற பொருளில் ஈ.டி. சொக்கம்மாள் எழுதியுள்ள கட்டுரை, மேனாட்டு இலக்கியக் கொள்கைகளையும், தமிழ் இலக்கியக் கொள்கைகளையும் எடுத்துக்காட்டி விளக்குகிறது. நன்னூல் பாயிரச் செய்யுட்கள் இலக்கியக் கொள்கையின் அடிப்படையில் இதில் நோக்கப் பெற்றுள்ளது.

'தேவாரமும் ஐந்திணையும்' என்ற கட்டுரை ஈ.என். தணிகாசல முதலியாரால் எழுதப்பெற்றது. தமிழர் கண்ட நிலவியல் குறித்த சிந்தனைகளைத் தேவாரத்தோடு பொருத்தியுரைக்கும் கட்டுரைத் தொடரான இதில் ஓரிடத்தே காட்டப்பெறும் செய்தியின் செறிவு கீழ்க்காணுமாறு:

> அடவி என்பது காட்டைக் குறிக்க, நாவுக்கரசர் தேவாரத்தில், 'திருக்கோயில் இல்லாத திருவிலூரும்' என்ற பாடலை விளக்கி, இங்குக் காடு என்பது பாலைவனம். குறிஞ்சி, அல்லது முல்லையிற் காணப்படும் காடெனில் அவை தெய்வமுளவாய் ஒருவிதக் கட்டுத்திட்டத்திற்கு அடங்கியவாகையால் அடவி காடென்னும் பட்டம் பொருந்தாது, மேற்கண்ட

> பாசுரத்தில் குறித்த வூர்கள் முறை தவறினமையால் அவை எத்திணையில் இருப்பினும் பாலைத்திணை எனக் கொள்கவென்றார் அப்பர் (1:3 ப. 653)

என இவ்வாறு வரும் பகுதி விரிவும் விளக்கமும் சார்ந்த ஆராய்ச்சிப் பாங்கினதாகும். தணிகாசல முதலியார் எழுதிய அப்பர் குறித்த ஆராய்ச்சித் தொடரும் சிறப்புற அமைந்துள்ளது. அக்கட்டுரைத் தொடர், 'அப்பரும் அறுபத்து நான்கு கலைகளும்' என்ற தலைப்பில் பலகாலம் வந்துள்ளது. கலாநிலையத்தில் வெளிவந்த மிக விரிவான கட்டுரைத் தொடர்களில் இதுவும் ஒன்று. கட்டுரையாசிரியரின் பல்துறை அறிவை நன்கு புரிந்துகொள்ள இத்தொடர் இடந்தருகிறது.

'கம்பர் சிருஷ்டியில் பிறந்த கற்பினள்' என்னும் கட்டுரைத் தொடர் கே. நாராயண ரெட்டிகாரு எழுதியதாகும். ஆறு வாரங்களாக வெளிவந்த இந்தத் தொடரில் அகலிகையைத் தெய்வக் கற்பினள் எனக் காட்டியுள்ளார். 'தையலாள் நயனவேலும்' என்ற கம்பராமாயணப் பாடல் சூழ்நிலையைத் திருக்குறள் கருத்தோடு பொருந்தக்காட்டி விளக்குந்திறம் நுட்பமானது (8:14 பக். 218-219). இக்கட்டுரைத் தொடரின் இறுதியில் இடம்பெறும் 'அகலிகையும் அம்மி மிதித்தலும்' என்ற சிறுபகுதி சுவையான ஆராய்ச்சி. அம்மி மிதித்தலுக்கு அகலிகையைப் பற்றிப் பேசப்படும் கதை தவறு என உணர்த்தியுள்ளார். மேலும் அவளைத் தூய கற்பினளாக நிலைநாட்டுகிறார் ஆசிரியர் (8:19 ப. 285-287).

இலக்கியக் கட்டுரைகளில் வாலிவதை, ஆண்டாள், சேக்கிழார் திறனும் திருத்தொண்டர் புராண எழுச்சியும், அகத்திய முனிவர், நாலடி நானூறின் திறம், கந்தபுராணமும் சங்க நூலும் மாதவி மாதவம் முதலியன குறிப்பிடத்தக்கன. சிந்தனைக் கட்டுரைகள், தன் முன்னேற்றக் கட்டுரைகள் ஆகியனவும் அவ்வப்போது இடம் பெற்றுள்ளன.

எஸ். சோமசுந்தர தேசிகரின் 'தமிழ் மொழியைக் குறித்த பழைய குறிப்புகள்' என்னும் கட்டுரைத் தொடர் திராவிட மொழி ஒப்பிலக்கணத்தில் கால்டுவெல் கூறிய கருத்துகளின் வன்மை மென்மைகளைப் பற்றியதாகும் (8:24, 25, 26, 27).

இலக்கணக் கட்டுரைகளில் அகப்பொருள் வரலாறு, யாப்பிலக்கணம், அணியிலக்கணம் முதலியவை சிறப்பானதாகக்

கூறத்தக்கன. கட்டுரைகளாக இல்லாமல் நூலை நன்கு அறிமுகப்படுத்தும் நோக்கில் பாடம் போன்று அமைந்தவையாகும். இலக்கணப் புணர்ச்சி பற்றிய பாடம் மிகவும் விளக்கமுற அமைந்த பகுதியாகும். தினகர வெண்பா, பொதிகை நிகண்டு முதலியவற்றை ச. வையாபுரிப் பிள்ளை இவ்விதழில் தொடர்ச்சியாக அறிமுகப்படுத்தியுள்ளார். யாப்பிலக்கணத்திற்கு மே.வீ. வேணுகோபாலன் விளக்கமளித்துள்ளார். அணியிலக்கணத்தை இதழாசிரியர் விரித்துரைக்கின்றார்.

உளவியலுக்கும் அறிவியலுக்கும் இடம் தரும் வகையில் அமைந்த கட்டுரைத் தொடர்களில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியவை தெ.பொ.மீ. எழுதிவந்த 'மானத சாத்திரம்' என்னும் கட்டுரையும், ஈ.டி. இராஜேஸ்வரி அம்மாள் எழுதிவந்த 'சூரியன்' என்னும் கட்டுரையும் ஆகும். உளவியல் தொடர்பாக, தமிழில் ஒரு சிறந்த பாடநூல் என்று கூறத்தக்க அளவிற்கு அமைந்தது 'மானத சாத்திரம்'. இதேபோன்று 'சூரியன்' என்பதும் சிறந்த அறிவியல் கட்டுரைத் தொடராகும். பல வாரங்கள் வெளியிடப்பெற்ற கட்டுரைகளான இவை இரண்டும், எடுத்துக்கொண்ட பொருளை அரிதின் முயன்று எழுதப்பெற்றுள்ளன. பல நிலைகளில் பயன் தருவனவாய் விளங்குவன. 'வான சாஸ்திரம்' என்னும் கட்டுரைத் தொடரும் அவ்வாறே!

மேனாட்டுத் தத்துவ ஞானிகள், கவிஞர்கள், அவர்களின் படைப்புகள் பற்றிய கட்டுரைகள் கலாநிலையத்தில் வெளிவந்துள்ளன. அரிஸ்டாட்டில், பிளாட்டோ, ஜுனோன், நீட்ஸே முதலான தத்துவ ஞானிகள் பற்றிய கட்டுரைகளை டி.ஆர். இராசகோபால் எழுதியுள்ளார். டி.ஜி. ஜெயவேலு, ஷெல்லி, வேட்ஸ்வொர்த் போன்ற புனைவியல் கவிஞர்களையும் அவர்தம் படைப்புகளையும் தந்துள்ளார். மேற்கின் இசைகள் என்ற அ. சீனிவாசராகவனின் கட்டுரைகளும் இது தொடர்பாகச் சுட்டத் தக்கன.

கலாநிலையத்தின் கட்டுரைகள் சிலவற்றின் மீதெழுந்த ஐயங்களும், அதற்கான தீர்வுகளுமான பார்வைகள் ஆராய்ச்சிப் போக்கினவாய் உள்ளன. இராமனுக்கு இளையோர் இருமூவர் (2/4), காதலாலோ கார்முகத்தை இறுத்தான் (2/3, 2/6), சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சில ஐயங்கள் (2:7 பக். 132-133); அதற்குரிய மறுப்பும் விளக்கமும் (2:11; 2:15; 2:17), வாலிவதை (6:11, 12, 13, 18, 19), இறையனார் அகப்பொருள் சில ஐயங்கள் (5:33) முதலிய கட்டுரைகள் இத்தகையன.

இலக்கியம் எனில் கருத்து வேறுபாடுகளுக்கு இடந்தருவது இயல்பு. அறிவின் முதிர்ச்சிக்கும் செழுமைக்கும் அஃதோர் அடையாளம். இலக்கியக் கட்டுரைகளில் வன்மை மென்மைக்கு இடந்தந்து ஆய்வுமுடிபு காண வாய்ப்பு அளித்துள்ளது கலாநிலையம். மேலே காட்டியுள்ள கட்டுரைகளின் போக்கில் தடைவிடைகள் நன்கு சிந்திக்கப்பட்டுள்ளன. அவற்றில் கடிதோச்சி மெல்ல அணுகியுள்ள பாங்கையும், ஒருபால் கோடாமையாகிய பான்மையையும் காணலாம்.

திருக்கோவையார் மணிவாசகரால் இயற்றப்பெறவில்லை என்ற ச. வையாபுரியாரின் கூற்றிற்கு மறுப்பு, கைகேயி பற்றிய நாவலர் சோமசுந்தர பாரதியாரின் கருத்துகளுக்கு மறுப்பு, வாலிவதை பற்றிய ஐயங்களுக்குத் தீர்வு ஆகியன இதழாசிரியரால் ஆழ்ந்து நோக்கப் பட்டுள்ளன. அவற்றில் தருக்கமுறையில் தடைவிடைகள் தந்து கூறப்பெற்றுள்ளமை ஆராய்ச்சி அறிஞர்களுக்கு விருந்தாகும்.

## மதிப்புரையின் மதிப்பு

கலாநிலைய நூல் மதிப்புரையிலும் இந்தப் போக்கினைக் காணலாம். செகவீர பாண்டியனாரின் 'திருக்குறட் குமரேச வெண்பா' இரு வாரங்களாக மதிப்புரையில் இடம்பெற்றுள்ளது (1:37 பக். 732-737 & 1:38 பக். 754-756). பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர், மேற்பிறந்தாராயினும், ஐந்தவித்தான் ஆகிய குறள்களுக்குச் செகவீரபாண்டியனார் தந்துள்ள காட்சி விளக்கங்கள்மீது கண்ணோட்டம் செலுத்துகிறார் டிஎன்.எஸ்.

> 'பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர்' - இங்கு நஞ்சுண்ணல் என்னும் செய்தி தவிர சிவபிரான் செயலிற்கும் இக்குறளின் கருத்திற்கும் வேறு தொடர்பு இருப்பதாகத் தோன்றவில்லை (1:37 ப. 737)

என்கிறார் இதழ் ஆசிரியர்.

> ஏத்துகின்ற மன்னரினும் ஏற்றமுற்றார் கற்றஒட்டக்
> கூத்தனார் என்னே குமரேசா - ஏத்துகின்ற
> மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
> கற்றாரோ டேனை யவர்

என வரும் குமரேச வெண்பாச் செய்யுளுக்கு டிஎன்.எஸ். விளக்கம் தரும்போது,

இங்கு உதாரணம் பொருந்துதற்குக் குலோத்துங்கனைக் கல்லாதவன் ஆக்கவேண்டும். அவன் கல்லாதவன் அல்லன்; கற்றவனாக இருந்ததால்தான் ஒட்டக்கூத்தனை நன்கு மதித்துப் பாராட்டினான். கற்றாரைக் கற்றாரே காமுறுதற்கு ஆகுமேயல்லாது, உயர்குலத்திற் பிறந்தும் கல்லாதிருப்பாரேல் அவர், கீழ்ப்பிறந்தும் கற்றவர்க்கு நிகராகார் என்பதுவே வள்ளுவரது கருத்தாயிருக்க, நமது ஆசிரியர் காட்டும் உதாரணம், கீழ்ப்பிறந்து கற்றவன் மேற்பிறந்து கற்றவனுக்கும் மேலான பெருமையை உடையவன் என்ற குறிப்பையல்லவோ கொண்டிருக்கிறது. கல்லாமைக்குத் தாழ்மை கூறினாரேயன்றி வள்ளுவர் உயர்குலத்திலே பிறந்ததற்கே எப்படியும் இழிவுண்டு என்று இயம்பினரல்லர். கல்வியோடு குலமும் சேர்ந்தால் அக்கல்வியால் அடையும் பெருமை ஒருபடி தாழ்ந்துவிடும் என்று எண்ணும் இவ்வுதாரணம் இத்திருக்குறளினை மயங்கச் செய்கிறது *(1:38 ப. 754)*

என இவ்வாறு சுட்டிக்காட்டுவது அரிய திறனாய்வுக் கலைக்கு அடையாளமாகும். இதுபோன்றே 'ஐந்தவித்தான்', 'குணமென்னும் குன்றேறி நின்றார்' ஆகிய குறள்களுக்குப் பரிமேலழகர், மணக்குடவர் முதலியோர் உரைகளில் உள்ள மயக்கங்களைத் தெளிவுபடுத்திக் கூறும் டி.என்.எஸ்.ஸின் ஆராய்ச்சி நிறைந்த மதிநுட்பம் எண்ணத் தக்கதாகும்.

*கலாநிலையத்தின்* மதிப்புரை மதிப்புவாய்ந்ததாகக் கருதப்பட்டிருக்கிறது. ஒன்றுக்கு மேலான இதழ்களில் மதிப்புரை வெளிவந்த பத்திரிகைகளில் இதுவே முன்னோடியாகலாம். 'கலாநிலையத்திற்கு நூல் அனுப்புவோர், மதிப்புரைக்கு எனத் தனியே கட்டணம் செலுத்தவேண்டும்' என்ற செய்தியை இதழ்வழி அறியும்போது, இதில் வந்த மதிப்புரையும் மதிப்பு வாய்ந்ததாகக் கருதப்பட்டது எனலாம்.

**சிலப்பதிகார விளக்கம் (ரா.பி. சேதுப்பிள்ளை), மங்கையர்க்கரசியின் காதல் அல்லது குளத்தங்கரை அரசமரம் (வ.வெ.சு.), சண்முகநாதன் அல்லது தனவசிய ஷைனர் (பனையப்ப செட்டியார்), சந்திரமதி அல்லது தற்காலத்துத் தமிழ்மகள் (ரத்நம்**

ஐயர்), சுகுணவதி அல்லது மனம்போல் மாங்கல்யம் (மாந்தை கிருஷ்ணய்யர்), கோம்பி விருத்தம் (வெ. சுப்பிரமணிய முதலியார்), முருகன் ஓர் உழவன் (கே.எஸ். வேங்கடரமணி), சுப்பிரமணிய பாரதியார் அல்லது தமிழ்நாட்டின் தேசியகவி (சுத்தானந்த பாரதியார்) முதலான நூல்கள் மதிப்புரையில் இடம்பெற்றுள்ளன.

ரா.பி. சேதுப்பிள்ளையின் சிலப்பதிகார ஆராய்ச்சிக்கு மதிப்புரை கீழ்க்காணுமாறு வெளிவந்தது.

> நாம் விரும்பியதற்கு இயன்ற அளவு சிறப்பினை எட்டிற்றில்லை. சிலப்பதிகாரத்திற்கோர் நிறைந்த அட்டவணையாக அதனைக் கருதலாமேயல்லாது அந்நூலின் நயங்களை விளக்குகின்ற பாக்கள் இப்புத்தகத்தில் காண்பதரிது (1:26 ப. 420)

என்று எழுதியிருப்பது நோக்குதற்குரியது.

வெறும் மதிப்புரை என்று இல்லாமல் திறனாய்வுப் பார்வையில் அமைந்திருப்பதோடு இதில் இடம்பெற்ற மதிப்புரைகள் தனித்தன்மை வாய்ந்தவை எனக் கருதமுடிகிறது.

ஒரு பக்கத்திலும் அரைப்பக்கத்திலும் 'மலர்வனம்', 'பழமுதிர்ச்சோலை' என்னும் பகுதிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் இலக்கியக் காட்சிகளே எடுத்துக்காட்டப் பெறுகின்றன. ஆசிரியரே மதுகரம், சபரி போன்ற பெயர்களில் இப்பகுதியை எழுதி வந்துள்ளார். இலக்கியச் சுவை நிரம்பிய நல்லதொரு விருந்தாக இவை விளங்குகின்றன.

## பெயர்ப்பில் தெரியும் பெருமை

கலாநிலையத்தின் மொழிபெயர்ப்புப் பணி குறிப்பிடத்தக்கது. அன்றைய காலகட்டத்தில் பயிற்றுமொழியாக ஆங்கிலம் தலைமை வகித்ததால், ஆங்கில ஈடுபாடு ஓங்கியிருந்தது. ஆங்கிலக் கல்வியின் பயனாகப் புதிய திசை நோக்கி அறிவுலகம் செல்வதாயிற்று. மேனாட்டு அறிவியல், தத்துவம், வரலாறு போன்றவற்றை இதழ்கள் அக்காலக்கட்டத்தே வெளியிட்டுவந்தன. இலக்கியத்தையும் அறிமுகப்படுத்தின. கலாநிலையம் ஆங்கில இலக்கியத்தில் ஆர்வம் கொண்டிருந்ததோடு தமிழர் அவற்றை அறிந்திருக்கவேண்டும் என்று எண்ணிச் செயல்பட்டது.

> ஆங்கிலப் பயிற்சி இல்லாதவர் அம்மொழியில் எழுதியுள்ள பெரும்புலவர்களது திறமையும் அறிவும் அவர்கண்ட வாய்மையும் உணர்ந்துகொள்ள இயலாதவராயிருக்கின்றனர். இந்தக் குறையை ஒரு சிறிது தவிர்ப்பதற்கு எண்ணி ஆங்கிலப் பேராசிரியர்களின் நூல்களின் நயமான பாகங்களைத் தெரிந்தெடுத்து மொழிபெயர்த்து விளக்கியும் இப்பத்திரிகையில் எழுதிவருவோம் (1:1 ப. 2)

என்று சுட்டியிருப்பது கலாநிலையத்தின் நோக்கங்களில் ஒன்று எனத் தெரிகிறது.

கலாநிலையத்தின் மூன்று தலையாய பணிகளில் ஒன்றான மொழிபெயர்ப்புப் பணி பலரும் பாராட்டும் வகையில் மேனாட்டு இலக்கியங்களைத் தமிழுக்கு வழங்கிற்று. கட்டுரை, கவிதை, நாடகம் ஆகியன அவ்வப்போது வெளிவந்துள்ளன. தாமஸ் கார்லைல் எழுதிய சுகம் (Happy), எமர்சனின் இராஜ்ய சுதந்திரம் (Politics), இரஸ்கினின் அரசியின் மலர்வன மல்லிகை (Lilies of Queen's Garden), செஸ்டர்டனின் வெற்றி என்னும் குதர்க்கம் (The Fallacy of Sucess), ஷோபன்ஹரின் பெண்பாலார் (On Women), தாமஸ் பிரௌனின் தெய்வச் செயல் (Providens), ஜோசப் அடிசனின் விசிறி (Fan) முதலியவை அவ்வப்போது வெளிவந்த கட்டுரைகளாகும்.

ஆஸ்கார் ஒயில்டின் கலைத்திறன் நுனிக்கும் கலைஞன் (The Critic as artist) என்னும் திறனாய்வுக் கட்டுரை குறிப்பிடத்தக்கது. வேர்ட்ஸ்வொர்த் எழுதிய Ode to Skylark, Ode to Duty - ஆகிய பாடல்கள் உரைநடை ஆக்கமாகப் பெயர்க்கப்பெற்றுள்ளன. சி.எம். இராமச்சந்திரன் மொழிபெயர்த்துள்ள தாமஸ் கிரேயின் இரங்கற்பாவும், கோல்டு ஸ்மித்தின் 'ஓர் இரவின் வருணனை'யும் குறிக்கத்தக்கன. பி.சி. ஜெயவேலு ஷெல்லியின், 'கடல்', 'மேகம்' ஆகிய இரு கவிதைகளையும் உரைநடைப்பாங்கில் தந்துள்ளார். டென்னிசனின், 'ஓனோன்' (Oenone) என்ற கவிதையும் அவ்வாறே இடம்பெற்றது. டால்ஸ்டாயின் சில கதைகள் - குறிப்பாக, King Assarhachlen, A Coffee house in sunset, Crime and Punishment முதலிய கதைகளும், இராபர்ட் பேர்க் எழுதிய குட்டிக் கதையான 'வயல் எலிக்கு உரைத்த வார்த்தை' என்ற கதையும் சுவையோடு மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன.

இதழாசிரியர் மொழிபெயர்த்திருக்கும் ஆலிவர் கோல்டு ஸ்மித்தின் 'இரவொன்றில் பல பிழைகள்' என்னும் நாடகத் தொடர் குறிப்பிடத்தக்கது. வெல்வதற்கு வணங்குகிறாள் அல்லது இரவொன்றிற் பல பிழைகள் (She stoops to conquer or the mistakes of a night) என்னும் இந்நாடகம் நல்ல நகைச்சுவை நிறைந்தது. இந்நாடக மொழிபெயர்ப்பு இயல்பை ஆசிரியர்,

> முதனூலிற் கண்டபடியே பாத்திரங்களின் பெயரைத் தமிழ்ப் பெயர்களாக மாற்றாமல் நிறுத்திக் கொண்டிருக்கின்றோம். முற்றிலும் தமிழிற்கு அடங்காததும் அவசியமற்றதுமான மிகச்சில வாக்கியங்களை ஆங்காங்கு விட்டுவிடவும் சிறிது மாற்றவும் நேர்ந்திருக்கலாமாயினும், இம்மொழிபெயர்ப்பு முதனூலை உண்மை பிறழாமல் தழுவி எழுதப் பெற்றிருக்கின்றது (7:18 ப. 203)

என இவ்வாறு குறிப்பிடப்பட்டிருப்பது மொழிபெயர்ப்புக் கலையின் அருமையை உணர்த்தியிருக்கிறது. ஷெல்டனின் பிஸாரோ நாடகத்தையும் இயல்பான தமிழில் மொழிபெயர்த்துள்ளார் டி.என்.எஸ்.

சேக்ஸ்பியர் நாடக மொழிபெயர்ப்பு 'சேக்ஸ்பியர் நாடகக் காட்சித் திரட்டு' என்கிற பெயரில் டி.என். நடராச பிள்ளையால் கதைப் பகுதியாகத் தரப்பட்டுள்ளது. இவர் பெயர்த்த ஜான் அரசன் (King John) அவ்வாறு வெளிவந்தது. ஆர். முத்தையா வடமொழியிலிருந்து பெயர்த்த 'ஆசாரிய சூடாமணி' நாடகம் கவிதையிலும் உரைநடையிலுமாக இயன்றது.

டி.என்.எஸ்.இன் சேக்ஸ்பியர் நாடக மொழிபெயர்ப்புகள் மொழிபெயர்ப்பு இலக்கிய வரலாற்றில் தனித்த ஓர் இடம்பெற்றவை. ஜூலியஸ் சீஸர், புயல், ஒத்தெல்லோ ஆகிய நாடகங்களை அழகுற மொழிபெயர்த்துள்ளார். தமிழில் சேக்ஸ்பியர் நாடகங்களைச் சிலர் அருமையாக மொழிபெயர்த்துள்ளனர். அச்சிலருள் டி.என்.எஸ். குறிப்பிடத்தக்கவராவார். கம்பனில் அவருக்கிருந்த ஆர்வமும் ஈடுபாடும் சற்றும் பிறக்கிடாத வகையில் சேக்ஸ்பியரிலும் இருந்துள்ளது. 'சேக்ஸ்பியர் பெருமை' என்னும் தலையங்கத்தில் கீழ்க்காணுமாறு விளக்குகிறார்.

> ஆங்கிலத்திலேயே சேக்ஸ்பியருக்கு உரைகாணக் கல்வியும் முயற்சியும் பெரிதும் வேண்டும். அமைப்பிலும் ஆற்றலிலும் ஆங்கிலமும் தமிழும் வேறுவேறு திறத்தன. ஒன்றிலிருந்து ஒன்றிற்கு மொழிபெயர்க்கும்போது மொழியினின்று பிரிக்கலாற்றாமல், அதனுடனேயே பிறந்து அதனுடனேயே வளர்ந்து அதனுடனேயே திகழ்கின்ற பொருள் நயமும் சொல்நயமும் ஒவ்வோரளவு இடையே சிந்திவிட, வேண்டுமென்பது விளையும். இவ்விடையூறு போக, சேக்ஸ்பியரின் நாடகத்தைத் தமிழிலேயுங் கற்றுப் பயனடையக்கூடிய பாகங்கள் உளதென்பதை மறத்தலாகாது *(4:48 ப. 942)*

என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளமை சேக்ஸ்பியரில் அவர் கொண்டிருந்த பேரவாவைக் காட்டும். கலாநிலையத்தின் சிறப்புக்கு அதில் வெளிவந்த சேக்ஸ்பியர் மொழிபெயர்ப்பு நாடகங்களும் காரணமாகவுள்ளன எனலாம்.

## ஒப்பிலக்கிய ஒளிக்கீற்றுகள்

இலக்கியத்தில் ஒப்புமை காண்பது என்பது அகன்ற இலக்கியப் பயிற்சியின் வெளிப்பாடு; புலமைத் திறத்தின் பொங்குணர்ச்சியால் இருமொழி இலக்கிய இன்பத்தில் தோய்தல் பரந்த நிலையில் கற்றவருக்கே வாய்க்கும். காப்பியக் காட்சிகளை ஒப்பநோக்கி உள்ளம் திளைத்தல் டிஎன்.எஸ். இன் இயல்பு. ஆங்கில இலக்கியத்தைத் தமிழில் இலக்கியச் சூழலுக்கு ஏற்ப ஆங்காங்கே பொருத்தமுறக் காட்டியிருப்பது சுவையூட்டி மகிழ்விக்கிறது.

நளவெண்பாவில், அன்னத்திற்கும் நளனுக்கும் இடையே நடக்கும் உரையாடலை ரோமியோ - ஜுலியட் சூழ்நிலையில் வைத்து விளக்குகிறார் ஆசிரியர்.

> நளனுக்குத்தான் ஜுலியட்டின் நிறம் இல்லாமற் போயிற்று. கேட்பதை நேராகக் கேட்கவும் கருமத்தை நேராகச் செய்யவும் கூடிய பெண் ஜுலியட். ஆதலால் செவிலி வந்ததும் அவளை ரோமியோ, என்ன சொல்னாள்? என்று கேட்டான். நளனோ, அன்னத்தின்

> முகம் பார்த்து அருள் நோக்கிச் செய்தியைக் கேட்காமல் கேட்டு யாசித்தான் (1:14 ப. 291)

என வேறுபாடு காட்டி ஒப்புநோக்கிய திறம் அறியற்பாலது.

கம்பராமாயணத்தில், மந்தரை, 'பதினான்கு ஆண்டு எல்லையும்' என்று சொல்லிய சூழ்ச்சியை 'ஷைலக்கின்' கொடிய சூழ்ச்சியோடு இணைத்துக் காட்டல் (3:37 பக். 754-755), பிறிதோரிடத்தே கைகேயியையும் ஷைலக்கையும் ஒப்பிட்டு, கைகேயியைப் பெண் ஷைலக் எனச் சுட்டுதல் (4:25 ப. 496); தான் நினைத்தவாறே வஞ்சம் தீர்த்துக்கொண்ட சூர்ப்பனகையின் மனத்தை 'இயாகோ'வின் Work on. My medicine work! Thus credulous fools are caught என்ற சொற்களோடும் அவனது மனநிலையோடும் ஒப்பிடல் (6:12 ப. 232) என்பன போன்று வருமிடங்கள் அகன்ற புலமைக்கான அடையாளத்தைக் காட்டுவன. ஒப்பிடும் காட்சிகளோடு நின்றுவிடாமல், ஆசிரியர் தம் கருத்துரைகளையும் அத்தகு சூழ்நிலைகளில் வெளிப்படுத்துவதுண்டு.

> களித்தவ ரெய்தி நின்ற
> கதியொன்று கண்ட துண்டோ

எனக் கூறும் சுக்கிரவன் மொழிகளை விளக்கிச் செல்லும் ஆசிரியர்,

> எரிநெருப்பை நெய்யினால் அவிக்கின்ற பேதைமை மீண்டும் இங்கும் பலபடி பேசப்பட்டிருக்கிறது... At my beloved fill the cup that clears. To-day of past Regrets and future Fears - என்று பாரசீகப் புலவர் உமர்க்கய்யாம் புலம்பியது போன்று, உற்றுநின்ற துயரத்தினின்று தப்புவதற்குரியவோர் உபாயமாக மதுவின் உதவியை அழைப்பதன் அறிவீனத்தைப் பேசும் வாசகங்கள் இவை சாலவும் அருமை வாய்ந்தன. உள்ளுறை துன்பத்தைக் கள்ளென்னும் அறியாமையுள் முழுக்க முயல்வார் மேலும் நைவார் (8:20 ப. 311)

எனக் கூறிக் கட்குடியை வெறுத்தொதுக்குங் கருத்துரைப்பர்.

செய்யுட்களுக்கு ஒப்பீடாகச் செய்யுள், நாடகம் இவற்றிலிருந்து சான்றுகளைப் பொருத்தும் ஆசிரியர்

நாவல்களிலிருந்தும் ஒப்பீடு காட்டுவது பரந்த கல்விப் பயிற்சியை உணர்த்தும். பிறர்மேல் நோக்கிய காதற் பார்வையைத் தனக்கென்று எண்ணும் இருது மன்னன் (நளவெண்பா) மன உணர்வை ஜியார்ஜ் எலியட் நாவலில் இடம்பெற்றுள்ள வரிகளால் விளக்கம் தருதலும் (3:29 ப. 55), வெஞ்சமர்க் கடவுள் எனத் தொடங்கும் கம்பராமாயணப் பாடலுக்குத் தாமஸ் கார்லைல் தம் நாவலில் எழுதிய செவ்விய சீற்றத்தின் தூய தன்மையைப் பொருத்திக் காட்டலும் (8:40 ப. 739) இத்தகையன. 'அயாவுயிர்த் தழுகணீர் அருவி' என வரும் கம்பராமாயணப் பாடலில் இடம்பெறும் 'தயா முதலறத்தினைத் தழீஇய' என்ற தொடருக்கு 'And earthy power doth then show likest Gods, when mercy seasons Justice' - என்ற சேக்ஸ்பியரின் உவமைச் சூழலைப் பொருந்தக் காட்டுகிறார் (4:49 ப. 975).

## படைப்புக் கலையின் பாங்கு

கலாநிலையம், படைப்பிலக்கியப் பணிக்குத் தன்னாலான கணிசமான பங்கினை ஆற்றியுள்ளது. நாவல், சிறுகதை, நாடகம், கவிதை ஆகியனவற்றைக் கலாநிலையம் வெளியிட்டு வந்துள்ளது.

டி.என்.எஸ். 'ஏமாங்கத்திளவரசன்', 'காந்திமதி அல்லது காந்தார நாட்டுக் கட்டழகி' ஆகிய இரு நாவல்களையும் தொடர்ந்து வெளியிட்டுள்ளார். இவற்றில் வருணனைத் திறமும் கதைமாந்தர் பண்பும் ஓங்கியுள்ளன. டி.எஸ். நடராச பிள்ளையின் தொடர் நாவலான இலஞ்சிப்பாவை (ஸ்காட்டின் Lady of the Lake - தழுவல்) கடின நடையாக இருப்பதால் கதைக்குக் கீழ் அருஞ்சொற்பொருளும் இடம் பெற்றுள்ளது. இது ஒரு வரலாற்று நாவல். டாக்டர் எஸ். அருணாசலம் பிள்ளை எழுதிய சிதம்பர தேவ சரிதமும் ஒரு வரலாற்று நாவலே. என்.ஆர். சேசாத்திரி 'கைவை - வைகை' என்னும் நாவலையும், டபிள்யூ. வி. கோவிந்தசாமி ராஜு 'குன்றுடையானும் மக்களும்' என்னும் நாவலையும் தொடராக இதில் எழுதிவந்துள்ளனர். மற்றும் கே. இராசகோபாலன் எழுதிய தேவகி என்ற நாவலும் தொடராக வெளிவந்தது.

சிறுகதைகள் சிலவே இடம்பெற்றுள்ளன. வண்மையின் வரம்பு (வி.டி. சுந்தரலிங்கம்), விதியில்லா மதிபாலன் (திம்மப்பா ஐயர்), மாரிமுத்துவின் மனைவி, உருபு மயக்கம் (முத்துராமலிங்கம்) முதலிய சிறுகதைகள் குறிப்பிடத்தக்கன.

நாடகங்களில் நவராத்திரி (கே.என். சுந்தரேசன்), அரவரசி கதை (சி.எம். இராமசந்திரன் செட்டியார்), எல்லாம் வீணோ? (ஜி.எஸ். இரகுராமன்) முதலியன சுட்டிக்காட்டத்தக்கன. 'நாட்டு அன்பு' மொழிபெயர்ப்பிலமைந்த செய்யுள் நாடகமாகும். இச்செய்யுள் நாடகம் நெப்போலியனைக் கொலை செய்யக் கருதிய ஜெர்மன் நாட்டுக் குடியானவன் ஸ்டெப்ஸ்ஸின் நாட்டுப்பற்றை விளக்குகிறது.

கவிதைகளில் ஒன்றிரண்டு தவிர, பெரும்பான்மையும் துதிப்பாடல்களே இடம்பெற்றுள்ளன. வை. சூரியநாராயண சாஸ்திரி, ஊ.சா. வேங்கடராமய்யர், ராமராவ் போன்றோர் எழுதிய கவிதைகள் குறிப்பிடத் தகுந்தன. முல்லை என்ற தலைப்பில் அமைந்த சாஸ்திரியார் கவிதை பொருள் நயம் வாய்ந்தது.

நவாலியூர் சோமசுந்தரம் பிள்ளை, கலைமகள், முருகன் குறித்து எழுதிய பாடல்கள் பல. கலைமகள் பற்றிய சிற்றிலக்கியம் (துதி, அந்தாதி, அம்மானை, குயில்பத்து, தசாங்கம் முதலிய இலக்கிய வகைகள்) பாடியுள்ளார். முருகனைப் பற்றியும் சில பாடல்களைப் பாடியுள்ளார். தமிழைப் போற்றிச் செந்தமிழ்ப் பிராட்டி வருகைப் பத்து இயற்றியுள்ளார்.

'கதிரைக்காதல்' என்ற நீண்ட கவிதை சு. வேலுப்பிள்ளை என்பவரால் எழுதப்பெற்றுள்ளது. 'காலை விளி', 'மாலை விளி' என்ற தலைப்புகளில் சி.எம். இராமசந்திரன் செட்டியாரின் சிறுகவிதைகள் இடம்பெற்றுள்ளன. கி. வெங்கடசாமி ரெட்டியார் இயற்றிய 'வைகுந்தர் பிள்ளைத் தமிழ்' குறிப்பிடத்தக்கதாகும்.

## நடந்த நடப்புகள்

கலாநிலையத்தில் 'வர்த்தமானம்' என்ற பகுதியுண்டு. அதில் உலக நடப்புகளும் சுவையான செய்திகளும் இடம்பெற்றிருக்கின்றன. ஒரு பெரிய பத்தி அல்லது சிறு சிறு பத்திகளில் அரிய நிகழ்ச்சிகளை வெளியிட்டு வந்துள்ளது. இது ஒரு வகையில் தகவல் களஞ்சியமாக விளங்கிற்றெனலாம். சான்றுகளாகச் சிலவற்றைக் காட்டலாம். சுபாஷ் சந்திரபோஸ் ஸ்டேட்ஸ்மேன் பத்திரிகைமீது தொடுத்த மானநஷ்ட வழக்கு (1:5), சென்னையில் மர்க்காரா என்ற கப்பல் எரிந்தது (1:15), பாரதி நூல்கள் பறிமுதல் செய்யப்பட்டது (1:39), உப்புச்சட்ட மறுப்பு (3:17), காந்திஜியின் இறுதி மடல் (3:12) முதலிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. சுவையான செய்திகள் பல இடம்பெற்றிருப்பதை

அறியலாம். மனிதனைத் தின்னும் மரங்கள் (5:40), திருட்டுத் தொழிலுக்காகத் திருடர்களால் இலண்டனில் நடத்தப்பட்ட இதழ் (8:18), மூன்று நான்கு மொழிகள் பேசுவதோடு, யுனானி முறையில் இவ்வகையில் நோய்க்கு மருந்து கூறும் அதிசயக் கிளி (8:20) முதலியன குறிக்கத்தக்கன. மனித உடல் பற்றிய சுவையான செய்தி ஓரிதழில் இடம் பெற்றிருப்பது சுட்டத்தக்கது.

> நல்ல வயதுடையவன் சரீரத்திலிருந்து கொழுப்பைக் கொண்டு 14 சோப்புக்கட்டிகள் செய்யலாம்; தேகத்திலுள்ள இரும்புச் சத்தைக் கொண்டு ஒரு பெரிய ஆணியைச் செய்யலாம். சக்கரைச் சத்தைக் கொண்டு ஒரு கரண்டி சக்கரை செய்யலாம். சுண்ணாம்புச் சத்தைக் கொண்டு ஒரு கோழிக் குஞ்சுக்கு வெள்ளையடித்துவிடலாம். பாஸ்பரஸைக் கொண்டு 55 தீப்பெட்டிகள் செய்யலாம். மாக்னிஸியத்தைக் கொண்டு 1 அவுன்ஸ் மக்னிஷியம் எடுக்கலாம். கந்தகத்தைக் கொண்டு ஒரு நாயின் உண்ணியைப் போக்கலாம். மனித உடலில் 59 காலன் ஜலம் கூயம் இருக்கிறது (6:3 ப. 59)

என்று நியோகி என்றும் அறிஞர் கூறிய கருத்தைத் தந்திருப்பது சுவை பயப்பதாகும்.

**கடலும் சுருங்குமோ!**

திருக்குறள் சிலரால் மிகச்சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. ஒரே அடியில் திருக்குறளைச் சுருக்கி இன்றும் சில நூல்கள் வெளிவந்துள்ளன. இதற்கு முன்னோடியாகக் கலாநிலையத்தில் 'திருக்குறள் நீதி' என்னும் தலைப்பில் குறள் முழுவதிலும் 'குட்டிக்குறள்' எழுதப்பெற்றுள்ளது. எதுகை மோனையோடு ஓரளவு கவித்துவமான நடையில் இதனை எழுதியவர் ஏ. இராமலிங்கம் என்பவராவர். சான்றிற்குச் சில.

> 'தலைவனை வணங்காத் தலை பயனிலதே'
> 'பிறவியை அகற்ற பரமனடி பரவுக'
> 'ஆயம் பிடித்தவன் தேய மிழப்பான்'
> 'அரவொடு வாழினும் கரவொடு வாழற்க'

'மயக்கியென நிற்பாள் மாதோ மயில் அணங்கோ'

'உண்டார்க்கினிது கள்; கண்டார்க்கு இனிது மையல்'

என ஒரு வரியில் குறட்பாக்கள் இடம்பெற்றுள்ளன. சில சமயம் குறிப்பாகக் காமத்துப்பாலில் அடிகளை மடக்கியியற்றப்பட்ட நீண்ட குறட்பாக் கருத்துகளையும் காணலாம்.

## சுவடிகளின் சுவடுகள்

முதன்முதலாகப் பதிப்பிக்கப் பெற்ற இலக்கிய இலக்கணப் பதிப்புகள் தொடர்ந்து கலாநிலையத்தில் வெளியிடப்பெற்றுள்ளன. 'அண்ட புராணம்' என்னும் சுவடி (?) தொடர்ந்து வெளிவந்தது. அதில் அடங்கியுள்ள செய்திகள் கேலிக் காப்பியம் (Mock Epic) போன்று விளங்குவன. அதன் உட்பிரிவுகளாக, காபி சிறப்புப் படலம், தேயிலை சிறப்புப் படலம், புகையிலைச் சிறப்புப் படலம், வெங்காயச் சிறப்புப் படலம், கலியுக மாந்தர் சிறப்புப் படலம் முதலியனவாக அமைந்துள்ளன. இதனை இதழில் வெளியிட்டவர் டி. சுப்பராய செட்டியாராவார்.

நரவாகன தத்தசரிதம் என்ற அரிய நூலின் ஒரு பகுதியைக் கலாநிலையம் வெளியிட்டுள்ளது. உதயணனின் மகன் நரவாகனன் ஆவான். இவனைப் பற்றிய கதை சுருக்கமாகவே ஏனைய நூல்களில் இடம் பெற்றிருக்கிறது. நேபாள மகாத்மியம் என்ற நூலின் ஒரு பாகம் பிரகத்கதா சுலோக சங்கிரகம் என்று பெயர். புதஸ்வாமின் என்பவரால் எழுதப்பட்ட இந்நூலில் நரவாகன தத்தன் கதை விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. மனைவியர் இருபதின்மரை மணந்து கொண்டவனின் வரலாற்றில், மனைவியர் அறுவரை மணந்த கதையே கிடைத்துள்ளது. இந்த நூலின் சுருக்கம் கதை வடிவில் கூறப் பெற்றுள்ளது. எஸ். சோமசுந்தர தேசிகர் கதை வடிவமாக்கித் தந்துள்ளார்.

பெருங்கதையில் இடம்பெற்றுள்ள உதயணன் கதைக்கும் திரிபிடகத்தில் வரும் உயதணன் கதைக்கும் பெரிதும் மாறுபாடு காணப்படவும், திரிபிடகத்தில் கூறப்படும் உதயணன் வரலாற்றை எஸ். சோமசுந்தர தேசிகர் 'உதயண சரிதம்' என்ற தலைப்பில் தந்துள்ளார்.

மதுரைக் கோவை, தினகர வெண்பா, மாறன் பாப்பாவினம், களவியல் காரிகை, பொதிகை நிகண்டு முதலியன முதன்முதலாகக் கலாநிலையத்தில் தம் சுவடுகளைப் பதித்துள்ளன.

## கலை இலக்கியக் கோட்பாடு

இலக்கியக் கலை உணர்ச்சியில் கண்ணோட்டமிக்க கலாநிலைய ஆசிரியர், அவ்வுணர்ச்சியின்வழி யாரையும் ஈர்க்கச் செய்தவராவார். இலக்கியத்தை மக்களுக்கு அறிவுறுத்துவதையும் அதன்வழி மாந்தருக்கு நல்ல நெறி உணர்த்துவதையும் நோக்கமாகக் கொண்டது கலாநிலையம்,

> மாந்தர் நலம்பெறும் வண்ணம் கலையுணர்வின் பெருக்கத்தையே கருத்தில் வைத்து நடக்கின்றது. கலாநிலையம், கலை பொழியும் நூல்களைக் கற்பதற்கு இசைந்த கல்வியையும் அஃதில்லார்க்குக் கற்றுத் தருகிறது *(6:33 ப. 614)*

என இவ்வாறு கூறியிருப்பதனை ஆழ்ந்து காண, இலக்கியக் கல்வியே கலாநிலையத்தின் இலக்கு என்பதறியலாம்.

கலை வாழ்க்கை எனில் இலக்கிய வாழ்க்கை எனவும், கலை எனில் இலக்கியக் கலை எனவும் உரத்த சிந்தனையின் வெளிப்பாட்டில் இலக்கியமும் வாழ்வும் பற்றிப் பல்வேறு கோணங்களில் கருத்துரைத்துள்ளார் ஆசிரியர்.

> துன்பம் நீங்கிய மெய்வாழ்க்கை வாழ்கின்ற
> மேன்மக்க ளாதற்குக் கலைகளே கதி *(2:13 ப. 242)*

எனக் கூறும் ஆசிரியர், இலக்கியமே மனிதரை மேன்மைப்படுத்தும் என்பர்.

செல்வத்தைப் பகிர்ந்து தருவது அரிது. ஆனால் ஒருவர் கற்ற இலக்கியத்தையாவது ஏனையோருக்கு வழங்கக்கூடாதா? இந்த எண்ணத்தின் அடிப்படையில்,

> பண்டிதர்களுக்குப் பிறர் செய்யக்கிடக்கின்ற நன்றி, அவர்கள்பால் காவிய நூல்களைக் கற்று, அவர்களோடு கலைநலம் துய்த்து ஏனையோருக்கும் அவ்வின்பத்தை வாழையடி வாழையாய் அளிப்பது ஒன்றே *(2:7 ப. 323)*

எனச் சுட்டியிருப்பது கலைப்பெருக்கிற்குரிய வழியாகும். இலக்கிய இன்பம் எது என்பதை இங்குக் கூறாமல் கூறியிருப்பது புரியும். அந்த இனிய செல்வத்தையாவது மற்றவரோடு களித்துண்ணும் மகிழ்ச்சியான

வாழ்க்கை வேண்டும் என்பது அவரது எதிர்பார்ப்பு ஆகும். செல்வத்துப் பயனே ஈதல் என்பது போல, இலக்கியப் பயனே பகிர்தல் என்பது அவரது கருத்தாயுள்ளமை தெளிவு.

இலக்கியக் கலையின்மீது ஆழ்ந்த நம்பிக்கையும் பற்றும் கொண்ட டி.என்.எஸ். கலையில் தோய்ந்த வாழ்க்கை, கவலையற்ற வாழ்க்கை என்று அறிந்து கூறுகிறார். இதனால்தான் ஒருவன் கலைநலம் துய்க்கவேண்டும் என வற்புறுத்துகிறார் எனலாம். மாந்தர்க்குப் பெருமை சேர்ப்பது, கலையிடம் ஒருவர் கொள்ளும் உணர்வு என்பது அவரது கருத்து.

இக்கருத்தின் எதிரொலியை,

பயனில் வகையில் மாநுடம் பெருமைக்கு மாறாகி
உழல்கின்ற இல்வாழ்க்கையினின்று கரையேறுதற்கோர்
இன்றியமையாத தெப்பமாய் உதவவல்லது சீரிய கூரிய
கலையினது உணர்வே ஆகும் *(3:34 ப. 661)*

எனக் கூறிப் பதிவு செய்கிறார்.

கலை என்பதைப் பொறுத்தவரை இலக்கியமே என்பதை ஆணித்தரமாக உணர்த்தும் ஆசிரியர், அது தொடர்பான ஏனையவற்றை இலக்கியக் கலைகளோடு இயைத்துக் காண்கிறார். இயற்றமிழ் இன்பமே இன்பம் என்ற கருத்தாக்கம் தந்த டி.என்.எஸ்.

அழகென்னும் தத்துவத்தை இசையாலும்
அசைவாலும் மொழியாலும் உருவாலும்
அமைத்துக் காட்டுகின்றவைகளே கலைகள் *(5:37 ப. 592)*

என்றவாறு கலைக்கு இலக்கணம் கூறியிருப்பது, இலக்கியக் கலையின் சேர்க்கையில் ஒன்றிணைந்ததாகவே (Synthesis) - அதோடு தொடர்புடைய ஏனைய கலைகளைக் காணத் தூண்டுகிறது.

காவியத்திற்கே உயர்ந்த இடம்தருகிறார், டி.என்.எஸ். பெருமையும் சிறப்பும் மேதகு திறனும் காப்பியக் கவிஞர்களுக்கே உண்டு. காப்பியப் புலவனும் கவிஞன்தான். தன்னுணர்ச்சிப் பாடியவனும் கவிஞன்தான். எனினும், காப்பியப் புலவனுக்கே பேரும் புகழும் ஓங்கியுள்ளது. தலைசிறந்த கவிஞரென்று (Great Poet) காப்பியப் புலவரையே உலகம் அழைக்கக் காணலாம்.

காப்பியம் எழுதுவது எல்லோருக்கும் கைகூடுவதன்று. பேருள்ளம் வாய்க்கப் பெற்றவரே காப்பியப் புலவராயிருப்பர். டி.என்.எஸ். இந்த நோக்கில் தம் எண்ணத்தைக் கீழ்க்காணுமாறு தெரிவிப்பார்.

> *இன்பமயமாய உத்தம நிலையையடைந்த மாபெரும் மனத்தவர்களுக்கு இன்பத்துள் இன்பமாய் உத்தமத்திலுத்தமமாய்க் கருதவல்ல வேளைகளில் உதிக்கின்ற உண்மைகளே காவியங்களாகின்றன (2:35 ப. 682)*

எனக் காவியம் பிறப்பெடுக்கும் சூழலையும், எழுதுதற்குத் தகுதி பெறுவோரையும் ஒருசேர உணர்த்துகிறார்.

*கவிதைக்கலை பற்றிய கருத்தை ஆசிரியர்,*

> *கவிதையானது இவ்வுலகில் சிறப்பும் அழகும் உற்றுத் திகழ்வன யாவற்றையும் அவ்வுலகத்திற்குச் சிரஞ்சீவியாய்த் தருகின்றது. வந்து வந்து மறைகின்ற திவ்விய எண்ணங்களைப் பிடித்து நிறுத்தித் தம்முடைய கலைகளால் அவைகளை அலங்கரித்து மக்களிடையே நடமாடவிடுவது கவிதையாகையால், கடவுள் கருத்துத் தெரிவுறச் செய்யும் சக்தி அதனிற்கு உளதென்பது உணரல் வேண்டும். மாந்தர்பால் அவ்வப்போது உதிக்கின்ற தெய்விகவுணர்வு நசிக்காமல் காத்து வைப்பது கவிதை (2:35 ப. 682)*

எனச் சுட்டுகிறார். கவிதையை உயர்ந்த கலையாகப் போற்றுவ தோடன்றித் தெய்விக நிறையோடு இணைவதாகக் காட்டுகிறார் எனலாம். காவியமும் கவிதையும் மிகமிகச் சிறந்தவைகளாகத் தோன்றுவதோடு, தெய்வத்தின் வெளிப்பாட்டைப் புலப்படுத்துவ தாகவும் ஆசிரியர் சிந்தனை கொண்டிருப்பது எண்ணிப்பார்க்கத் தக்கது.

'கலைகளே கதி' என்னும் தலைப்பில் அமைந்த தலையங்கம், காப்பியம் போன்ற கலைகளே மானிட வாழ்விற்குப் பெருநலம் பயப்பவை என்று கூறியுள்ளது.

> வாழ்க்கைத் தத்துவங்களும் தத்தம் உண்மை கெடாமல் உணரப்பெற்று எவ்வெவர் மனத்தும் குடிகொள்ள வேண்டுமாயின் அப்பெருநலம் பயக்கவல்லவை கலைகளே (3:1 ப. 2).

காப்பியம் போன்ற கலைகளைக் கற்றதாய்க் கருதிக் கொள்வோர் நிலையைப் பின்வருமாறு உணர்த்துகிறார் ஆசிரியர்.

> மொழிப்பயிற்சி நாவின் பழக்கம்; கலைப் பயிற்சி சிந்தனையின் செறிவு. மொழியை உணர்ந்த அளவில் கலையும் கற்றதாய்க் கருதுகின்ற பொய்ம்மையாலன்றோ பெருங்காவியங்களினின்று பெறுதற்கு உரிய பலனை மாந்தர் பெற்றிடாது மொழிகின்றனர் (3:1 ப. 3).

காப்பியம் முதலிய கலைகளிலிருந்து பெறக்கூடிய பயன்கள் என்று அவர் கருதியிருப்பதை இதன்வழி உய்த்துணரலாம். மொழியோடமைந்த கலைப்பயிற்சி, காப்பியக் கலை போன்றவற்றை நுகர்வதற்குச் சுவை ஊக்கியாக இருத்தல், வாழ்நெறிக்கு வழிகாட்டியாகவிருந்து மேம்பட்ட நிலைக்கு மாந்தரை உயர்த்தல் ஆகிய இரு பயன்களைப் பெறவேண்டும் என்பதில் கலாநிலையம் கண்ணும் கருத்துமாக இருந்து வந்துள்ளது எனலாம்.

இயற்றமிழ் இன்பத்தையும், இசையின் மேன்மையையும், நாடக நலத்தையும் போற்றும் டி.என்.எஸ்., கலை உணர்வின் இன்றியமையாமையைச் சுட்டிக்காட்டியிருப்பதோடு இலக்கியத் தொடர்புடைய நாடகக் கலையை எண்ணிப்பார்த்து,

> பெருங்காவியங்களாய் இருப்பவையே நடிப்பதற்கு உரியனவாம். . . . ஒருவனுக்குக் கலை உணர்வு இல்லையெனில் அவன் வேறு சில உடையவனாயினும் ஒன்றும் இல்லாதவன் என்னும்படி வாழ்வு சிதறி மனித இன்பத்தினின்றும் தாழ்ந்துவிடுகிறான். ஒருவன் இவ்வாறு தாழ்ந்தால் அவனைச் சுற்றி ஒன்பது பேருக்குத் துன்பம் கூடவே தோன்றும். ஆதலின் அவரவரால் இயன்றளவு பிறர் இவ்வகை இழிவுறா வண்ணம் காக்கவேண்டியது யாவருக்கும் கடமை ஆகின்றது. இக்கடமையை ஆற்றுதற்கு ஏற்றவிடம்

நாடகமேடை என்று ஆழ்ந்த அறிவுடைய பலர் கூறக் கேட்டிருக்கிறோம் (1:38 ப. 741)

என இவ்வாறு கூறியிருப்பது நாடகஞ் சார்ந்த கலையிலும் அவருக்கு நாட்டம் இருந்ததைக் காட்டுகிறது. நாடகத்திற்கு உகந்தவையாகக் காப்பியங்கள் இருப்பதையும் இங்கு உணர்த்த ஆசிரியர் தவறவில்லை.

இலக்கியத்தில் சொல்லும் பொருளும் எங்ஙனம் அமைந்திருக்க வேண்டும் என்பது பற்றிச் சிந்தித்துள்ள ஆசிரியர், அவற்றைச் சுவைக்கும்படியான நிலையை,

ஒரு கவிதையினது முழுக்கருத்தையும் அதன் பயனோடு பெறவேண்டுமாயின் அதனில் பயின்றுள்ள சொற்களை அவ்வுருவத்திலேயே, அவ்வமைப்பிலேயே பருகுதல் வேண்டும். உப்பு, புளி, மிளகாய் முதலியன சேர்ந்து ஆவது ரஸம். ஆனாலும் இத்துணை உப்பு, இத்துணைப் புளி, இத்துணை மிளகாய் என்று தனித் தனி எடுத்துத் தின்று வெந்நீரை உட்கொள்வதால் இரசத்தைப் பருகியவர்களாக மாட்டோம் (2:33 ப. 642)

என இவ்வாறு தெரிவிப்பர்.

இலக்கியம், சொற்பொருள் காட்டுவதை இயற்கையாகத் தரவேண்டுமே யொழியச் செயற்கையாய் நின்று பயனிலதாய் ஆகிவிடக்கூடாது என்ற கருத்தின் அடிப்படையில் சிலேடை அணி முதலானவற்றின்மீது பார்வை செலுத்துகிறார் ஆசிரியர். சிலேடை பற்றிக் கருத்துத் தெரிவிக்கையில்,

சிலேடையை இனிமையும் நயமும் படக் கையாள்வது சுலபமன்று; கலை என்னும் நலத்தினால் முதிர்ந்த சான்றோர் உலகப்பொருள்களிடையே தோன்றுகின்ற வேற்றுமையை விலக்கி அவைகளைத் தம் அகன்ற இருதயத்திலே ஒரு தன்மையனவாய் அமைத்துக் கொள்வதற்கு முயல்கின்ற முயற்சியே சிலேடை பாடுவதின் திறம்... தேங்காய் ஓட்டிற்கும் சிவபிரானிற்கும் சிலேடை பாடுவாருமுளர். இது சொல்லின் திறத்தால் மாத்திரம் சேர்வதன்றி மனதில் இணைந்து உடன்

> நடக்கும் சுவை இல்லாமல் அமைகின்ற சிலேடை (1:47 ப. 930)

எனக் கூறியிருப்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியது. வெவ்வேறு பொருள்களை - வாக்கியத்தில் இரண்டனை ஒன்றாகக் காட்டிச் சிலேடை எனக்கூறுவதில் அவருக்குச் சற்று உடன்பாடில்லை என்றே தோன்றுகிறது. அப்படிப்பட்ட சிலேடை, 'செய்பவர் மனதில் தங்கியிருப்பதும், ஓதுவார் மனதில் தோன்றி எழுவதும் வேற்றுமை நினைவேயன்றி ஒற்றுமை அழகோ ஒரு போதும் ஆகாது', என்பது ஆசிரியரது கருத்து. ஆயின் கவிதை உணர்ச்சியில் பொருள் இயைபுடன் கூடிய அணிகள், சிலேடைகள் ஆகியவற்றை உவகையோடு அறிந்து சுவைக்கவேண்டும் என்றும் உரைப்பர். அப்படிச் சுவையறியாதாரைச் சாடவும் தவறவில்லை.

> கவிகளோடு இவ்வுவகையை உடனிருந்து அனுபவிக்க இயலாதார் அவிந்த கண்ணினர்; குறுகிய கருத்தினர்; இப்பிரபஞ்சத்தின் கூட்டுறவு வாழ்க்கையிலிருந்து தம்மை விலக்கிக் கொண்டவராவர் (1:13 ப. 254)

என்று கூறியிருப்பது படிப்போர் கவிதையின் பொருளோடு, அணிநலங்களையும் சுவைத்து இன்புற வேண்டும் என்பதை வற்புறுத்தவே!

உணர்வின் வழிப்பட்ட கலையை அறிவுடைய வித்தகர் எடுத்துக்கூறிப் பிறர் பயனுறுமாறு செய்தலை ஆசிரியர் பெரிதும் விரும்பியுள்ளார்.

> காவியம் ஓவியம் அனைய கலைகள் உணர்வின் வழியாக அமைதியின்பால் உய்க்கும் திறத்தன. மனிதரைக் கள்ளமில்லா உள்ளத்தவராக்குங் கலை. ஒரு நாளும் அசையாத உரத்தினை நமது உள்ளம் பெறுதற்கு அறிவு இன்றியமையாததென்றது உண்மையாயின் கலையினால் பண்பட்ட மக்களுள்ளத்தை அறிவினால் சான்ற வித்தகர்தம் பொருளுரைகளால் வலியுறுத்த வேண்டும் என்பது இன்றியமையாதது (3:27 ப. 419)

எனக் குறிப்பிட்டுள்ளமை நோக்கத்தக்கது.

கலையின் இயல்பைப் பலபடப் புகழ்ந்துரைக்கும் டி.என்.எஸ். அதன் திறத்தைப் பின்வருமாறு கூறுவர்.

> கருத்தினது ஆழத்தையும் எண்ணத்தின் உயரத்தையும் எட்டுதற்கு இயன்ற மாட்சி கலையின் திறத்தே உள்ளது (6:33 ப. 614)

என்கிறார்.

மாந்தர், கலையைத் துய்ப்பதற்காகவும், நல்ல வழியில் வாழ்வைச் செலுத்துவதற்காகவும் கலாநிலையம் வழங்கியுள்ள கலை இலக்கியக் கோட்பாடுகள் பெரிதும் ஏற்கத்தக்கன.

> கலையினது இலக்கணம் ஆயிரம் கூறினாலும் கலைநூல் இலக்கணம் ஆயிரம் கேட்டாலும் அது கலைப்பொருள் ஒன்றைத் துய்த்து மகிழ்தற்கு இணையாகாது (4:1 ப. 2)

என்ற கருத்தினை ஆழமாக எண்ணிய இதழாசிரியர், கலாநிலையத்தின் வழியே, இலக்கிய இன்பத்தை அள்ளியள்ளிப் பருகி மகிழ்ச்சிக்கடலில் திளைக்கச் செய்துள்ளார். இதற்காக ஆசிரியர் எடுத்துக்கொண்ட அயராத முயற்சியும், தளராத உழைப்பும் என்றென்றும் கலாநிலையத்தைத் தமிழ் இதழியல் வரலாற்றில் போற்றும்படி செய்துள்ளன.

டி.என்.எஸ்.இன் புலமைப்பசி தீராத பசியாகும். இலக்கியச் சுவையின் இனிய நினைவலைகளை அது எழுப்பிக்கொண்டேயிருக்கும். அத்தகைய பசி, ஓயாப்பசி. சேக்ஸ்பியர் மொழிகளில் கூறவேண்டுமானால், 'as hungry as the sea' என்று கூறவேண்டும்! கலாநிலையக் கடலினின்று அத்தகைய பசியலைக்கு ஓய்வுதான் உண்டோ!

### சிந்தனைகள் சில

1. கலாநிலையம் என்றதும் டி.என். சேசாசலம் முன்நிற்கிறார். ஈ. குமரய்யா இதழின் ஆசிரியர் (பதிப்பாசிரியர்) என உள்ளது. இதழில் அவர் பங்கினை அறிய வாய்ப்பில்லை.
2. தொடர்க்கட்டுரைகள் சில அடுத்தடுத்து இடம்பெறாமல், சற்றே நீண்ட இடைவெளிக்குப்பின் வெளிவந்திருப்பது, இலக்கிய ஆர்வலர்களின் ஊக்கத்திற்கு இடையூறாக விளங்கியிருத்தல் கூடும்.

3. படிப்பதற்கு ஏற்றவகையில் அதன் வடிவம் இல்லை. அளவிற்கு (31 செ.மீ. x 20 செ.மீ. அளவு) கையிலேந்திப் படிப்பதற்குச் சற்றே கடினமாக இருந்திருக்கிறது. அடர்த்தியான கட்டுரைகள் தாங்கிய இதழாதலால் பாதுகாக்கக்கூடிய வகையில் கையடக்கமாக இருந்திருக்கலாம்.

4. தலையங்கத்தில் இடம்பெற்ற ஆங்கில அறிஞர்களின் மேற்கோள் உரைகள், ஒரு பக்கம் அல்லது இரு பக்கங்களில் தரப்பட்டுள்ளன. அவற்றை மொழிபெயர்த்துத் தராமல் அப்படியே வெளியிட்டுள்ளது. (படிப்போர்க்குப் புரிகிறது என்றாலும்) தமிழ் இலக்கிய வாரஇதழ் என்றளவில், தமிழில் அவற்றைத் தந்திருக்கலாம்.

5. பாமரரும் புரிந்துகொள்ளும் வண்ணம் இலக்கியம் அறிமுகப்படுத்தப்பட வேண்டும் என்பதைக் கலாநிலையம் - ஏற்பினும் கடுநடையால் இயன்ற (அக்கால நடை) பல கட்டுரைகளைத் தாங்கி வந்துள்ளமை எண்ணுதற்குரியது.

6. ஆசிரியர் ஆங்கிலத்தின்பாற் கொண்ட காதலாலும், தாம் கற்ற ஆங்கில இலக்கியப் பயிற்சியாலும் ஆங்கில இலக்கியத்தைத் தமிழர்க்கு அறிமுகப்படுத்திய அளவிற்கு, இந்திய மொழியிலமைந்த இலக்கியப் படைப்புகள் பெரும்பாலும் அறிமுகப்படுத்தப் பெறவில்லை.

7. வளமும் செறிவும் மிக்கதாகக் கருதப்படும் வடமொழி இலக்கியப் பெயர்ப்புகள் (ஒன்றிரண்டு தவிர) இடம்பெறவில்லை

8. கவிதைகளின் பங்கு குறைவே. இடம்பெற்ற கவிதைகள் பெரும்பான்மையும் கடவுட்சிந்தையை உள்ளடக்கிய துதிப்பாடல்களே என்பது எண்ணுதற்குரியது.

9. ஓரிதழ், அது வெளிவந்த காலகட்டத்தில் அந்தக் கால நிகழ்வுகளைப் பதிவுசெய்யும். விடுதலைக்கு முன்வெளிவந்த இதழ்களில் ஒன்றான கலாநிலையம், இந்திய விடுதலை உணர்வை வெளிப்படுத்த இயலவில்லை போலும்! இலக்கிய இதழ் என்று தன்னை வரித்துக் கொண்டாலும், தலையங்கத்தில் விடுதலை உணர்வை வெளிப்படுத்தி

யிருக்க வாய்ப்புண்டு. வர்த்தமானம் என்ற பகுதியில் மட்டும் விடுதலைத் தொடர்பான நாட்டு நடப்புகளை அவ்வப்பொழுது, துணுக்குச் செய்திகளாக வெளியிட்டு வந்துள்ளது. விடுதலை குறித்த கலாநிலையத்தின் உணர்வினை நேரடியாக அறிதற்கு வாய்ப்பில்லாமற் போயிற்று.

10. கவிதையிலும் கட்டுரையிலும் விடுதலை உணர்வைக் கூறிய தேசிய கவி பாரதியார் பற்றிய சிந்தனையில் கலாநிலையம் என்ன கருத்து கொண்டிருந்தது என்பதை அறிய வாய்ப்பில்லை. 'வர்த்தமானம்' பகுதியில் இந்து பிரசார சபையிலிருந்து பாரதியின் கவிதைகள் சில பறிமுதல் செய்யப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. 'பாரதியின் பாடல்கள் பற்றித் தனக்கொன்றும் தகவல் இல்லை' என டாக்டர் சுப்பராயன் கூறியதைச் சொல்லி, 'அரசோடு அமைந்த அங்கத்தினர் வேறு யாது செய்வார்' - ("கடவுள் இருப்பது காவியத்திலோ" - தலையங்கம் 1:47 ப. 952) என்ற செய்தி இடம்பெற்றுள்ளது. சுத்தானந்த பாரதியாரின், பாரதி பற்றிய மதிப்புரை வந்துள்ளது. இவை தவிர, நரசிம்மன் இரு வாரங்களில் தொடராக எழுதிய 'பாரதியின் வேதாந்த பாடல்கள்' - என்னும் கட்டுரை வெளிவந்துள்ளது (8:10, 11). பாரதி குறித்துப் பல கட்டுரைகளை வெளியிட வாய்ப்பிருந்தும் அவற்றைத் தவிர்த்து வந்துள்ளதா எனத் தெரியவில்லை. பண்டை இலக்கியம் பற்றிய செய்திகளுக்கே முதன்மை தந்ததால் புதுமைக் கவிஞராக விளங்கிய பாரதி கவிதைகளைப் புறக்கணித்ததா என்பதையெல்லாம் அறியும் வாய்ப்பு இல்லை.

# பிரசண்ட விகடன்

**1932** இராம. வேணுகோபால்

மூதறிஞர் இராஜாஜி, எழுத்துலக வேந்தர் கல்கி, தமிழ்த் தென்றல் திரு.வி.க., பகுத்தறிவுத் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, பெருந்தலைவர் காமராஜர் ஆகியோரது அன்பிற்கு ஆட்பட்ட எழுத்தாளர் யார்? பேரறிஞர் அண்ணா, நடிப்பிசைப் புலவர் கே.ஆர். இராமசாமி, நடிகவேள் எம்.ஆர். இராதா, ஔவை டி.கே. சண்முகம் போன்ற நாடகத்துறை வல்லுனர்களை உலகுக்குக் காட்டியவர் யார்? இந்நாளைய பல நீதிபதிகளும் துணைவேந்தர்களும் முன்னணி எழுத்தாளர்களும் தங்கள் உச்சிமேற் கொள்ளும் எழுத்தாளர் யார்? அவர்தான் 'ஜீவா' என்னும் புனைபெயர் கொண்ட நாரண துரைக்கண்ணன் அவர்கள். இவர்தான், ஆனந்தபோதினி நிறுவனம் சார்பில் வெளிவந்த 'பிரசண்ட விகடன்' எனும் இதழின் ஆசிரியர்.

## பிறப்பு

இவரது பிறப்பு குறித்து இவரே எழுதியிருக்கிறார். எம்.கே. சாமி அவர்களால், கோவையிலிருந்து வெளியிடப்பட்ட 'குடியரசு' இதழில் தம் பிறப்பு குறித்து எழுதுகிறார். 28.8.1972 இதழில், தம் பிறப்பு குறித்து எழுதத் தொடங்கும் முன், தொண்டை நாட்டுப் பெருமைகளை எல்லாம் எடுத்துக் கூறுகின்றார். பின் அந்தத் தொண்டை நாட்டில் இருந்த புலியூர்க் கோட்டம் பற்றிக் குறிக்கின்றார். அதன் பிறகு, "இந்தப் புலியூர்க் கோட்டத்தில் திருமயிலாப்பூரில்தான் பராபவ ஆண்டு ஆவணி மாதம் ஒன்பதாம் தேதி (24.8.1906) அன்று காலை நான் பிறந்ததாக என் தந்தையார் பிறந்த நாட்குறிப்பு எழுதி வைத்திருக்கிறார்" என்று குறிப்பிட்டுள்ளார். மயிலையில் பரிபூரண விநாயகர் கோயில் தெருவில் உள்ள வீடு ஒன்றில் பிறந்ததாக அவர் குறிப்பிடுகிறார். செங்கை மாவட்டத்தில் உள்ள மாமல்லபுரத்துக்கு அருகில் உள்ள கழிப்பட்டூர் என்னும் ஏகாட்டூர்தான் இவரது பூர்வீகம் என்று தெரிகிறது. தந்தை மயிலை நாராயணசாமி. தாய் அலமேலு மங்கைத் தாயார்.

## இளமை

தந்தை வேங்கடாசலம் பிள்ளையின் மணியம் தொழிலில் வந்த வருமானம் போதாது என்ற நிலை ஏற்பட்டதால், நாராயணசாமி சென்னைக்குத் தொழில் செய்து பிழைக்க வந்தார். அவர் சென்னையில் கள் விற்றதாக அறிகிறோம். இத் தொழிலைத் தந்தை செய்தார் என்பதைப் பிற்காலத்தில் உணர்ந்தபோது, தான் மிகவும் வருந்தியதாக ஜீவா எழுதுகிறார். அக்காலத்தில் உயர் வகுப்புப் பிள்ளைகளே சேர்ந்து படிக்க முடியும் என்ற நிலையிலிருந்த, திருவல்லிக்கேணி உயர்நிலைப்பள்ளியில் தன் பாட்டனின் செல்வாக்கினால் படிக்க இடம் கிடைத்தது என்று பெருமையாக எழுதுகிறார் ஜீவா.

ஒரு வைகுண்ட ஏகாதசியன்று ஏற்பட்ட தந்தையின் திடீர் மரணம் இவரது படிப்புக்குத் தடையை ஏற்படுத்தியது. அப்போது அவருக்கு 7½ வயது. அத்தை மற்றும் அத்தானின் ஆதரவில் வாழ வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கெல்லட் உயர்நிலைப் பள்ளி ஓவிய ஆசிரியர் திரு. மைக்கேல் நடத்திய இரவுப் பள்ளியில் சேர்ந்து படிக்க விரும்பினார். எனினும் காலம் அதற்கு இடம் தரவில்லை. வறுமையின் காரணமாகவும் அத்தானின் உடல்நலக் குறைவு காரணமாகவும் ஜீவா பணிக்குச் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சிறிய தந்தையின் உதவியுடன், கமர்ஷியல் பிரஸ் போர்மென் மோகனப்பா என்பவரின் பரிந்துரையின்பேரில் அவ் அச்சகத்தில் ஜீவா வேலைக்குச் சேர்ந்தார். பின்னர், வாழ்க்கையில் பல அனுபவங்கள் படிப்படியாக அவரை எதிர்கொண்டன.

கலா நிலையம் சேஷாசலம் ஐயர், மங்கலம் குப்புசாமி முதலியார், கலாநிலையம் இராஜகோபாலாச்சாரியார், சுதேச மித்திரன் லோகநாத நாயகர், மறைமலையடிகள், திரு.வி.க. ஆகியோரின் தொடர்பு கிடைத்தது. அனைத்துக்கும் மேலாக, வாசுதேவன் என்ற நண்பர் கிடைத்தார். இவர் நாரண துரைக்கண்ணனைச் சுதேசமித்திரன் உதவி ஆசிரியருக்கு (லோகநாத நாயகர்) அறிமுகம் செய்துவைத்தார். லோகநாத நாயகர் ஒரு பொது நிகழ்ச்சிக்கு வந்தபோது, ஜீவாவை அழைத்து 'நீயும் இந்தக் கூட்டத்தில் பேச வேண்டும்' எனப் பணித்தார். ஜீவாவும் 'என் கடன் பணி செய்து

கிடப்பதே' என்ற பொருளில் சில மணித்துளிகள் உரையாற்றினார். இதைச் செவியுற்ற லோகநாத நாயகர், ஜீவாவின் திறமையை உணர்ந்தார். பின், நண்பர் வாசுதேவன் தூண்டுதலாலும் லோகநாத நாயகரின் ஆதரவினாலும் ஜீவா எழுத்து உலகில் அடியெடுத்து வைத்தார். ஜீவாவின் முதல்கட்டுரை 'சரசுவதி பூஜை' 5-10-1924 நாளிட்ட சுதேசமித்திரன் இதழில் வெளிவந்தது. அது முதல் பல இதழ்களில் சிறு சிறு கட்டுரைகள் எழுதத் தொடங்கினார். அப்போது ஜீவாவுக்கு வயது 16தான் (27.8.1973 குடியரசு, கோவை இதழ்).

## இதழாசிரியர் ஜீவா

அடுத்த கட்டத்தில் ஜீவாவைப் பரலி சு.நெல்லையப்பர் 'லோகோபகாரி' எனும் இதழுக்குத் துணையாசிரியர் ஆக்கினார். ஜீவாவின் எழுத்துப் பசியைத் தீர்த்துக் கொள்ளக் களம் அமைத்துக் கொடுத்தார். எனினும் அங்கு நிலைத்துப் பணிபுரியும் வாய்ப்பு அவருக்குக் கிட்டவில்லை. 1928இல் லோகோபகாரி; 1929இல் 'தேசபந்து'; 1930இல் 'இந்தியா'; 1931இல் 'திராவிடன்' ஆகிய இதழ்களில் பணிபுரிந்த ஜீவா, 1932இல் 'பிரசண்ட விகடன்' இதழாசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்டார். பின் தொடர்ந்து 33 ஆண்டுகள், அஃதாவது 1965 வரை (தொழிலாளர் பிரச்சினை ஏற்படும்வரை) அவ்விதழாசிரியராகவே தமது வாழ்க்கையை நடத்தினார் ஜீவா.

## பிரசண்ட விகடனின் தோற்றம்

தமிழ்ப் பத்திரிகை வரலாற்றில் 'ஆனந்த போதினி', 'பிரசண்ட விகடன்' இதழ்களுக்குத் தனிச்சிறப்புண்டு. இந்த இதழ்கள் மூலமாக ஆயிரக்கணக்கான கவிஞர்கள், கதாசிரியர்கள், அரசியல்வாதிகள் உருவானதைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்கு அறியும்.

இந்த இதழ்களுக்கு வித்திட்டு, உரமாக இருந்து, உயிரூட்டி உழைப்பால் உயர்ந்தவர் நாகவேடு முனுசாமி முதலியார் ஆவார். தமிழ் ஆர்வமுடைய இவர் 'ஆனந்தபோதினி' இதழை 1915இல் மாத இதழாக ஆரம்பித்தார். பின்னர், வார இதழாகவும் வெளியிட்டார். 1932இல் 'பிரசண்ட விகடன்' இதழையும் அவர் தொடங்கி நடத்தினார்.

ஆனந்த விகடனுக்குப் போட்டியாக, ஆனந்தபோதினி' ஆசிரியர், அதிபர் நாகவேடு முனுசாமி முதலியார் பிரசண்ட

விகடனைத் தொடங்கினார். எனினும் ஓர் இலக்கியவாதிக்கு - எழுத்தாளருக்கு அடைக்கலம் கொடுத்ததோடு, ஏராளமான எழுத்தாளர்கள் உருவாகக் காரணமாக அமைந்த பிரசண்ட விகடன் நிறுவனர் நாகவேடு நா. முனுசாமி முதலியார் போற்றுதற்குரிய பெரிய மனிதராவார்.

## இதழ் அமைப்பு

தொடக்க காலத்தில் பிரசண்ட விகடனில் 'விகடன்' உருவத்துடன், அஃதாவது ஒரு சர்க்கஸ் கோமாளியைப் போன்ற உருவத்துடன் அட்டைப்படம் வெளியிடப்பட்டது. 1950க்குப் பிறகு அழகான ஓவியம் வரையப்பட்டு அட்டைப்படம் வெளிவந்தது. பெரும்பாலும் இந்த அட்டைப்படம் உள்ளே இருக்கும் ஒரு கதையின் காட்சியாக அமைந்திருந்தது. 56 பக்கங்களைக் கொண்ட இதழாக வெளிவந்தது. இது இன்றைய 'துக்ளக்', 'ஜூனியர் விகடன்' போன்ற இதழ்களின் வடிவத்தில் வெளிவந்தது.

முதல் பக்கத்தில் (முகப்பு அட்டை அல்ல) மேலே இருபுறமும் சிறு மண்டபம் வரையப்பட்டு மேற்படி அவ்விரு மண்டபங்களையும் ஒரு சிறு திரைச்சீலை இணைப்பதாக அமைந்துள்ளது. அச்சீலையில் 'பிரசண்ட விகடன்' என அரைவட்ட வடிவில் எழுதப்பட்டுள்ளது. அப்பெயருக்குக் கீழே 'இடுக்கண் வருங்கால் நகுக அதனை, அடுத்தூர்வது அஃதொப்ப தில்' என்ற குறள் எழுதப்பட்டது. அதற்கும் கீழே இடது பக்கத்தில் எத்தனையாவது மலர் என்பதும் நடுவில் எந்த ஆண்டு என்பதும் வலப்பக்கம் எத்தனையாவது இதழ் என்பதும் குறிக்கப்பட்டுள்ளன. அதற்குக் கீழே 'விஷயம்' என்று தலைப்பிட்டு இதழின் உள்ளே இருக்கும் செய்திகள் குறிக்கப் பட்டுள்ளன. ஆரம்பகாலத்தில் இதழ் விலை என்ன? என்பது விளங்கவில்லை. 1953இல் இதன் விலை 3 அணா என்று குறிக்கப்பட்டுள்ளது. முதல் பக்கத்தின் கீழே 'விகடனில் வெளிவரும் பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே, தனிப்பட்டவர்களைக் குறிப்பவை இல்லை' என்று குறிக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக 36ஆம் ஆண்டு இதழின் உள்ளடக்கம் பற்றி முதல் பக்கத்தில் தரப்பட்டுள்ள தலைப்புகள் வருமாறு: 1. மந்திரத்தால் மாங்காய் விழாது, 2. காலச்சக்கரம், 3. சினிமா படம், 4. எதிர்கால பயங்கர

யுத்தம், 5. கறுப்புச் சாதிகளின் புரட்சியா?, 6. ஆரம்ப ஆசிரியர்களுக்கு மட்டும், 7. வக்கீலின் சாமர்த்தியம், 8. பாழ் வீட்டுப் பிசாசு, 9. விஜயகுமாரரின் வெற்றி, 10. பண்டைத் தமிழரின் இசைச் செல்வம், 11. சினிமா அழகி மாதுரி, 12. சீமாட்டி கார்த்தியாயினி, 13. மானம் பெரிதா? வாழ்வு பெரிதா? 14. எனக்கா கல்யாணம்?

1953க்குப்பின் முதல் பக்கத்தில் (முகப்பு அட்டை அல்ல) சில மாற்றங்களைக் காணமுடிகிறது. முதல் பக்கம் மலர், இதழ் பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக 1-4-1953 இதழில் (மலர்:21; இதழ்:3) வருஷ சந்தா ரூ.4.8.00; தனிப்பிரதி அணா 3; வெளிநாடுகளுக்கு ரூ.5.8.00 என்ற செய்தியும், விளம்பர விகிதம் என்று குறித்துக் கீழ்க்கண்ட செய்திகளும் தரப்பட்டுள்ளன. மேலட்டை கடைசி பக்கம் 2 கலர் ரூ.120.00; 2ஆவது, 3ஆவது பக்கம் ஒருகலர் ரூ.80.00; உள்பக்கம் ரூ.70.00; அரைப் பக்கம் ரூ.37-8-00 என்ற குறிப்புடன் வெளிவந்துள்ளது. வலப்பக்கத்தில் உள்ளே இருக்கும் செய்திகளின் தலைப்பு தரப்பட்டுள்ளது. பக்கத்தில் (56) எந்த மாற்றமும் இல்லை. திருக்குறள் விடுபட்டுள்ளது.

பிரசண்ட விகடனின் பழைய இதழ்கள் இப்பொழுது கிடைப்பதரிது. உ.வே.சா. நூல் நிலையம் சென்றபோது 1936ஆம் ஆண்டின் 12 இதழ்கள் மட்டும் கிடைக்கப்பெற்றன. இக்கட்டுரையின் பெரும்பாலான செய்திகள் அதிலிருந்துதான் தரப்பட்டுள்ளன. பின்னர், கன்னிமரா நூல் நிலையத்தில் 1953, 54, 55 இதழ்கள் கிடைத்தன. 53, 54, 55ஆம் ஆண்டு இதழ்களை மேலோட்டமாகப் பார்த்துச் செய்திகளைக் குறித்துள்ளேன். அவை மேலும் ஆய்வு செய்தற்கு உரியன.

பிரசண்ட விகடன் இதழின் செய்திகள், 1. தலையங்கம், 2. காலச்சக்கரம், 3. நாட்டு நடப்புகள், 4. இலக்கியம், 5. சினிமா விமர்சனம், 6. விளம்பரங்கள், 7. கருத்துப் படங்கள், 8. சிரிப்பு, 9. பிற செய்திகள் என்று பல பிரிவுகளாகப் பகுத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. 1950க்குப் பின் சினிமா விமர்சனம் பெற்ற இடத்தை ஜோதிடம் பிடித்துக்கொண்டது. எனினும் 'ஜீவா' சினிமாவை முழுதும் விட்டுவிடவில்லை. சில தலைப்புகளில் வேறு சிலர் சினிமா செய்திகளை எழுதிவந்தனர்.

**தலையங்கம்**

நாரண துரைக்கண்ணன் ஒரு நடுநிலை இதழாசிரியராக இருந்தார் என்பதை அவரது தலையங்கங்களும் பிற எழுத்துகளும் நமக்குக் காட்டுகின்றன. ஒப்புக்காக இல்லாமல், உண்மையிலேயே அவர் இந்தக் கொள்கையைக் கடைப்பிடித்திருக்கிறார். கட்சிபேதமின்றி, அரசியல் செல்வாக்கு மிக்கவர், பணபலம் மிக்கவர், பெரிய மனிதர் என்ற எந்த சக்திக்கும் ஆட்படாமல், மனத்தில் தான் நியாயம் என்று உணர்ந்ததைக் காரணகாரியங்களுடன் எடுத்து விளக்குவார்.

மகாத்மா காந்தி அரிஜனங்களைக் கோயிலுக்குள் அனுமதிக்க வேண்டும் என்ற கோரிக்கையை விடுத்தார். சனாதன தர்மத்தில் மூழ்கிப்போன சில காங்கிரசுத் தலைவர்களுக்கே இதில் கருத்து வேறுபாடு உண்டு. காங்கிரசில் இருந்த பண்டித மதன் மோகன் மாளவியா அவர்கள், நாசிக் ஷேத்திர குண்டத்தில் சில அரிஜனங்களுக்கு மந்திர தீட்சையும் உபநயனமும் செய்து வைத்தார். இச்செய்தி நாரண துரைக்கண்ணனுக்கு எட்டியது. 1.4.1936 பிரசண்ட விகடன் இதழில் 'மந்திரத்தால் மாங்காய் விழாது' என்ற தலைப்பில் தலையங்கம் எழுதினார். அதில், அவர் "தீண்டாமை விலக்குக்காக மந்திர தீக்ஷை, உபநயனம் செய்தல் போன்ற முறைகள் பயன்படமாட்டா என்பது விகடனது தாழ்வான அபிப்பிராயம்" என்றும் "தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கல்வி வசதியும் பொருளாதார நிலை உயர்வுக்கு வழியும் ஏற்படுத்திக்கொடுத்தால் அவர்களின் நிலைமை வெகுவிரைவில் உயர்ந்துவிடும் என்பதில் அய்யமில்லை" எனவும் எழுதிய பின், "மந்திர தீக்ஷையிலும் உபதேசங்களிலும் காலத்தைக் கடத்தாமல் காந்தியடிகளோடு ஒத்துழைப்பதன் மூலம் உருவான வேலையில் ஈடுபடவேண்டும். மந்திரத்தால் மாங்காய் விழாது என்பதை விவரிக்கவும் வேண்டுமோ" என்று பண்டித மதன் மாளவியாவுக்கு அறிவூட்டுகிறார்.

சட்டசபைத் தேர்தல்களில் பங்குகொண்டு மந்திரி சபையில் சேருவதா? கூடாதா? என்ற குழப்பம் காங்கிரசு கட்சியில் நீடித்தது. மக்கள் ஆவலோடு தலைவர்களின் அறிவிப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த நேரத்தில் 'இவ்வளவு தடுமாற்றமா?' என்ற

தலைப்பில் ஒரு தலையங்கம் எழுதியுள்ளார் 15.4.1936; அத்தலையங்கம் சிந்தனைக்குரியது. பண்டித ஜவகர்லால் நேருவை விட நாடு பெரிது என்று எடுத்துக்காட்டும் அவரது உள்ளத் திண்மைக்கு இது சான்று. "பண்டித ஜவகருக்குச் சங்கடம் ஏற்படக்கூடாது என்பது பெரிதா? நாட்டு நலம் பெரிதா? தலைவர்கள் எப்படிப்பட்ட மதிப்பு வாய்ந்தவர்களாக இருந்தபோதிலும், பொதுநலனை உத்தேசித்து அதற்கான முடிவைச் செய்வதே அறிவுடைமையாகும்" என்று எழுதுகிறார்.

பொதுவாக, எந்த மாநிலத்தில் காங்கிரசு மாநாடு நடக்கிறதோ அந்த மாநிலத்தைச் சேர்ந்தவரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கின்ற வழக்கம் காங்கிரசில் இல்லை. இதை அவர்கள் சம்பிரதாயம் என்று குறிக்கிறார்கள். ஆனால் நேருவின் விஷயத்தில் இது பின்பற்றப்படவில்லை. இதை ஜீவா 'சம்பிரதாய விரோதம்' என்றே குறிக்கிறார். எனினும் தலைவரின் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடப்பது மற்றவர்களின் கடமை என்று எழுதுகின்றார்.

தாய்மொழிக் கல்வியே வேண்டும் என்ற கருத்துடையவர் ஜீவா. இதைப் பிரசண்ட விகடனில் வாய்ப்பு நேருகின்ற போதெல்லாம் வெளிப்படுத்திக் காட்டியிருக்கிறார். தாய்மொழிக் கல்வி பற்றி எழுதுகையில், திவான்பகதூர் அறிஞர் எஸ். ரங்கநாதன் அவர்களின் கருத்தைக் கையாண்டிருக்கிறார். "பிறமொழியில் பாடம் போதிப்பதால் மாணவர்கள் மிதமிஞ்சிய சிரமம் அடைகிறார்கள்; தத்தளிக்கிறார்கள். அந்நியமொழி என்ற புகைப்படிவம் மாணவர்களின் அறிவுக் கண்களை மறைப்பதால் அவர்கள் கற்கும் பொருள்களின் உண்மைச் சொரூபம் அவர்களுக்கு விளங்காமல் போய்விடுகிறது" (5.5.1936).

1953 டிசம்பர் இதழில் 'விபரீத யோசனை' என்ற தலைப்பில் தீட்டப்பட்ட தலையங்கம் சிறப்பானது. அது இந்தித் திணிப்பைக் குறித்து, "தேசிய வெறி சில சமயங்களில் பகுத்தறிவை இழக்கும்படி செய்துவிடுகிறது. பல சமயங்களில் சுய சிந்தனையை மழுங்கடித்தும் விடுகின்றது. இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாய் விளங்குபவர்கள் இந்தி மொழி ஏகாதிபத்தியவாதிகள்... இவர்களது கைப்பொம்மைகளாய் மத்திய ஆட்சியாளரும் மாகாண ஆட்சியாளரும் இருந்து வருவது

இவர்களது வெறியை மேலும் மேலும் தீவிரப்படுத்தி வருகிறது" என்று குறிப்பிடுகிறது. இவர்களைப் பற்றி அத்தலையங்கத்தில் 'இந்தியாவின் வரலாறு தெரியாதவர்கள்', 'இந்தி ஏகாதிபத்தியவாதிகள்', 'இட்லரை விட மோசமாகச் செயல்படுபவர்கள்' என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்.

1953 அக்டோபர் தலையங்கத்திற்கு, 'தமிழ் ராஜ்யம் எனத் தடை என்ன?' என்று தலைப்பிட்டிருக்கிறார் ஜீவா. நேருவின் மொழிவாரி ராஜ்யக் கொள்கையில் ஜீவாவுக்கு உடன்பாடில்லை. இதைக் கண்டித்து ஒரு கட்டுரையும் பிரசண்ட விகடனில் எழுதியிருக்கிறார். ஆந்திர மாநிலம் தமிழ் நாட்டிலிருந்து பிரிந்துவிட்ட பின்பு அவர் எழுதுவது வருமாறு: "ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால் ஆந்திர ராஜ்ய ஆரம்ப விழா மற்ற மொழி வழி ராஜ்யப் போராட்டங்களுக்குக் கொடியேற்று விழாவாகும்". மேலும் ஆந்திரம் தமிழ்நாட்டிலிருந்து பிரிந்துபோன பிறகு 'எஞ்சிய சென்னை ராஜ்யம்' (Remaining Madras Presidency) என்று அழைக்கப்பட்டது. இதைப் பெருத்த அவமானமாகக் கருதினார் ஜீவா. "இதை இனி, தமிழ் ராஜ்யம் என அழைப்பதுதான் முறையாகும்" என்றும் எழுதுகின்றார். மேலும் அவர், "இப்போது வழங்கும் எஞ்சிய சென்னை ராஜ்யம் என்பதை மாற்றித் தனித் தமிழகம் ஏற்படச் செய்ய வேண்டுமானால், தமிழர்கள் தளராது உழைக்கத் தயாராக இருக்கவேண்டும். . . தங்களுடைய லட்சியத்தைப் பெற எவ்விதத் தடைகளையும் ஏற்கச் சித்தமாய் இருக்க வேண்டும். புதிய தமிழகத்தை உருவாக்கித் தனியரசு அடையும் இம் முயற்சியில் தமிழர் அனைவரும் சாதி, சமயம், கட்சி முதலிய எவ் வேற்றுமையையும் பாராட்டாமல் ஆந்திரர்களை முன் மாதிரியாகக் கொண்டு ஒன்றுபட்டு வேலை செய்யவேண்டும் என நாம் கேட்டுக் கொள்கிறோம்" என்று கூறுவது எவ்வளவு தீர்க்கதரிசனம் மிகுந்தது! 1958 ஜூன் இதழில், இன்றளவும் தீர்க்க முடியாத பிரச்சினையாக உள்ள இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து எழுதியுள்ளார். இலங்கையில் வாழும் இந்திய வம்சாவளித் தமிழருக்குத் தர வேண்டிய உரிமை பற்றி எழுதுகிறார். 'இலங்கையில் மொழி வெறியாட்டம்' என்ற தலையங்கம் சிந்தனைக்குரியதொன்றாக அமைந்துள்ளது.

இதைப் போலவே காஷ்மீர் பிரச்சினை குறித்தும் அதன் தொடக்கம் முதல் எழுதி நமக்கு அப்பிரச்சினையை விளக்கி, காஷ்மீர்

இந்தியாவின் ஒரு பகுதி என்பதைப் புரியவைக்கிறார். இது அவரது எழுத்தாற்றலுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு (டிசம்பர் 1953).

நேருவின் சமதர்மக் கொள்கைகள் தமக்குச் சரிப்பட்டு வராது என்று பல முதலாளிகள் நினைத்தனர். இது கூடாது எனக் கூறி 'வர்த்தகர் படையெடுப்பு' என்ற தலைப்பில் ஜீவா எழுதிய தலையங்கம் சிந்தனைக்குரியது. இதில் பண்டித நேருவுக்கும் மற்ற தலைவர்களான ராஜேந்திர பிரசாத், ராஜகோபாலாச்சாரியார், சத்தியமூர்த்தி போன்றவர்களுக்கும் இருந்த கருத்து வேற்றுமைகளை விளக்கிவிட்டு நேருவைத்தான் மற்றவர்கள் பின்பற்ற வேண்டும் என எழுதுகிறார். இதைப் போலவே பெண்களுக்குத் தரவேண்டிய உரிமைகளை ஆண்கள் தர மறுத்தால் விரைவில் 'அல்லி ராஜ்யம்' உருவாகிவிடும் என்று எச்சரிக்கை விடுக்கின்றார். பெண்களை மரியாதையுடன் நடத்த வேண்டும் என்று எழுதுகிறார்.

1936 ஜூன் மாத பிரசண்ட விகடன் இதழில் 'தேவதாசிகள் கவனிக்க' என்ற தலைப்பில் ஜீவா எழுதியுள்ள தலையங்கம் சிந்தனை உணர்வும் சமுதாய உணர்வும் கொண்டது. தமிழகத்தில் நிலவி வந்த பொட்டு கட்டும் வழக்கம் ஒழிய வேண்டும் என்று ஜீவா வலியுறுத்துகிறார்; இவ்வழக்கத்தை ஒழிக்கப் பாடுபட்ட டாக்டர் முத்துலட்சுமி அம்மையாரை மனதாரப் பாராட்டி எழுதுகின்றார். அந்த இதழில் அன்றைய சென்னை உள்ளிட்ட நகரங்களைப் பற்றி எழுதுகையில் "சென்னை முதலிய நகரங்களில் விபச்சாரிகள் பட்டப்பகலில் பகிரங்கமாய்த் தெருவில் நின்று அழைக்கும் நிலைமை ஒருவாறு மாறியிருக்கிறதேயொழிய மற்றபடி ரகசிய வியாபாரம் ஒரு சிறிதும் குறையவே இல்லை எனலாம். சட்டம் இயற்ற விரும்பியவர்கள், மீட்கப்படும் பெண்கள் தங்கித் தங்கள் வாழ்க்கைக்கு வழிகாண மீட்சி விடுதிகளுக்கு ஏற்பாடு செய்திருக்க வேண்டும்" என்று எழுதும் ஜீவாவின் - விகடனின் - முன்னோக்குப் பார்வை பாராட்டுதற்குரியது. இன்று பெண்களுக்கான அபலை நிலையங்களை அரசே உருவாக்கி அவர்களை ஆதரித்து வருவது, இது போன்ற தலையங்கங்களின் வெளிப்பாடு எனலாம்.

இத்தகு தேவதாசி முறை ஒழிப்புச் சட்டத்துக்கு அக்காலத்தில் பல நிலைகளிலும், ஏன் முன்னோடியான பல அரசியல் தலைவர்களிடமிருந்தும் எதிர்ப்பு இருந்ததாகக் கூறுகிறார் ஜீவா.

முற்போக்குச் சிந்தனையாளர் என்று தங்களைக் கூறிக்கொள்பவரும் வைதீகச் சமயத்தாருடன் சேர்ந்துகொண்டு இச்சட்டத்தை எதிர்த்தனர் என்பார். "சமயம் போச்சு; சாஸ்திரம் போச்சு; கடவுள் போச்சு" என்று வைதீகர்கள் கூக்குரல் இடத் தொடங்கினராம். மேலும் அவ்விதழில், பம்பாய் விலைமாதருக்கு டாக்டர் அம்பேத்கர் கூறியிருந்த அறிவுரைகளை அப்படியே எடுத்தாண்டு இங்குள்ள விலைமாதருக்கு அறிவுறுத்துகிறார். "புத்துணர்ச்சியும் புதுவேகமும் மேலோங்கி வரும் இக்காலத்தில் தேவதாசிகள் மானிய வருவாயைக் காரணங்காட்டி விபச்சாரத்திற்கு ஆக்கந்தேடிக் கொண்டிருப்பது எவ்வகையிலும் நியாயம் ஆகாது. டாக்டர் அம்பேத்கர் கூறியதுபோல் தேவதாசிகளும் தங்கள் பெண்களுக்குக் கலியாணம் செய்து ஒழுங்கான வாழ்க்கைக்கு ஆதரவு தேடவேண்டும். இன்றேல் பெண்ணுலகிற்கே பெருங்களங்கமாயிருக்கும் பழி தேவதாசிகளைச் சேரும்" என்று கூறுகிறார்.

சுதந்திரத்திற்குப் பின் தமிழ்நாட்டில் நிலவிய சமூக அமைப்பில் இருந்த சில சாதி மத வேறுபாடுகளையும் எடுத்துக் காட்டுகிறது விகடன். ராஜாஜியின் குலக்கல்வித் திட்டத்தினால் அவர் பதவி இறங்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அந்தச் சூழ்நிலையை விவரித்துப் பின், காமராஜர் பதவி ஏற்க வேண்டிய சூழ்நிலையை ஆசிரியர் எழுதுகிறார்; விரிவாக ஆய்வு செய்கிறார். சி. சுப்பிரமணியம் வானொலியில் ராஜாஜியின் சாதனைகள் குறித்து உரை நிகழ்த்தினார். இதையும் ஜீவா விமர்சனம் செய்கிறார். மேலும், பத்திரிகையாளர்களும் (குறிப்பிட்ட இனம் சார்ந்தவர்) இனப்பற்றுள்ள சில நண்பர்களும் அளவுக்கு அதிகமாக ராஜாஜியின் சாதனைகளைப் புகழ்ந்தனர். இவரைப் போலவே, ஏன் இவரைவிட அதிகமாகவே தமிழ் மக்களுக்குச் சில நற்காரியங்களைச் செய்த ஓமந்தூரார் மந்திரிசபை பற்றியோ, குமாரசாமி ராஜாவின் மந்திரிசபை பற்றியோ, அவர்கள் செய்த நன்மைகள் பற்றியோ பத்திரிகைகளும் இனப்பற்றாளர்களும் எடுத்துக்காட்டவில்லை. எனவே, அவர்களுக்குச் சேரவேண்டிய அளவு புகழ் வந்து சேரவில்லை. அந்த நிலை காமராஜருக்கும் ஏற்பட்டு விடக்கூடாது என்று சுட்டிக்காட்டி, "ஆங்கிலக் கல்வியோ, சட்டப் படிப்போ இல்லாதவர்களாலும் திறமையாக நாட்டை

நிர்வாகஞ் செய்யமுடியும் என்பதைக் காமராஜ் நிச்சயம் செய்து காட்டுவார்" என்று கணித்து உண்மை ஜனநாயகம் எது என்பதை எடுத்துக்காட்டுகிறார். மேலும் அந்தக் காலத்தில் உயர் வகுப்பாரிடம் இருந்த மனப்பாங்கையும் வெளிப்படுத்திக்காட்டுகிறது விகடன்.

15.4.1954 விகடனில் ஆசிரியர் மத்திய அரசின் வரி விதிப்புக் கொள்கையை எதிர்த்து 'வரிமேல் வரியா?' என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் எழுதி அரசைக் கண்டித்துள்ளார். 1.6.1954 விகடனில் 'நல்ல கல்வித்திட்டம் வேண்டும்' என்ற தலைப்பில் வெளிவந்த தலையங்கம் இந்தியா முழுவதற்கும் ஒரே கல்வித் திட்டம் வேண்டும் என்று கூறுகிறது. ஆங்கிலமொழி மோகம் ஒழிய வேண்டும்; தமிழில் பாடங்களைப் போதிக்க வேண்டும் என்கிறார். மேலும் "இக்கல்வி முறையில் அரசியல் நோக்கம் எதுவும் இருக்கக் கூடாது; அரசியல்வாதிகளின் ஆதிக்கமும் இருக்கக்கூடாது; அவசர உணர்ச்சியும் கூடாது" என்று எழுதுகிறார்.

1955 மார்ச்சு பிரசண்ட விகடனில், 'தமிழை ஆட்சிமொழி ஆக்குக' என்ற தலையங்கத்தில் தமிழின் பெருமைகளை எடுத்துக் கூறுகிறார். இது அவரது மொழி உணர்வுக்குச் சான்றாக அமைந்துள்ளது. 1958 டிசம்பர் இதழில் 'விலை உயர்வும் சர்க்கார் நடவடிக்கையும்' என்ற தலையங்கத்தில், அரிசி விலை ஏற்றத்திற்குக் கண்டனம் தெரிவித்திருக்கிறார்.

விகடனில் எழுதப்பட்ட பல்வேறு தலையங்கங்களும் ஜீவாவின் - விகடனின் சமுதாய உணர்வையும் நடுநிலைப் போக்கையும் எடுத்துக்காட்டுவனவாக அமைந்ததை நோக்குதல் வேண்டும்.

## இலக்கியப் பணி

### (i) கதை

விகடன் அக்காலத்தில் பல புதிய எழுத்தாளர்களுக்கு இடம் கொடுத்தது. இதனால் பலர் கதை எழுதும் ஆற்றல் பெற்றனர். மேலும் ஜீவா அவர்களே பல கதைகளை எழுதியும் மொழிபெயர்த்தும் வெளியிட்டார். 'வக்கீலின் சாமர்த்தியம்', 'பாழ்வீட்டுப் பிசாசு', 'மானம்

பெரிதா? வாழ்வு பெரிதா?', 'எனக்கா கல்யாணம்?', 'மாயமோதிரம்', 'காதலின் கொடுமை', 'சூழ்ச்சி பலித்தது', 'சங்கரி', 'பாம்புத்தாத்தா', 'தங்க பட்சி தரிசனம்', 'சாரதாவின் கல்யாணம்', 'காதல் மணம்', 'மசால் வடைக்காரன்', 'தேவ விலாசத்தில் கொலை', 'ஹரிஜன் தாத்தா', 'கலியாண வயது', 'ஹாஸ்டல் கொலை', 'நாகரீக மோகினி மிஸ் லீலா', 'ஜன்னிப் பிதற்றல்', 'எங்கள் வீட்டுப் போக்கிரி', 'அட சகுனமே', 'ஹரிஜன் ஸ்கூல் இன்ஸ்பெக்ஷன்', 'நாய்க்கடி வைத்தியர்', 'கலெக்டர் ராமநாதன்', 'மருமகள் துயரம்', 'இன்னமும் ஒரே ஒரு நிமிஷம்', 'கோணங்கி வேலை', 'வீராசாமியின் வீரம்' முதலான ஏராளமான சிறுகதைகள் வெளிவந்துள்ளன.

அசலம், வசீகரன், எஸ். முத்துசாமி, எல்.கே. கணேசன், கே.வி. சுப்பிரமணியன், நாகூர் கோபாலகிருஷ்ணன், ஏ. ராஜாமணி, மாணிக்கம், சீமா, கே.வி. அனந்த கிருஷ்ணய்யர், கே. ராஜகோபாலன், வி.ஆர். பாஷ்யம், ஆரியூர் வ. பதுமநாபப் பிள்ளை, ஸ்ரீமதி அம்புலு அம்மாள், ரோஜா, ஸ்ரீமதி செங்கம்மாள், சி. ரெகுநாதன், அமிர்தம், டி. சீனிவாசன், தேயு, ஸ்ரீமதி, மேலம்பூர் வி.எம். சாமி, எஸ்.டி. சம்பந்த முதலியார் முதலிய எழுத்தாளர்கள் பிரசண்ட விகடனில் அடிக்கடி கதை எழுதிய ஆசிரியர்கள்.

'மோகனாவின் முன்யோசனை' 15.4.1936 என்ற கதை மனைவிமீது சந்தேகப்படும் கணவன் பற்றியது. 'குசுமாவின் குயுக்தி' 15.7.1936 என்ற கதை தன்னை மணக்க வரும் ஆணுக்குப் பணத்தாசை உள்ளதா? எனச் சோதித்துப் பார்க்கும் பெண்ணைப் பற்றியது. 'ஜன்னிப் பிதற்றல்' 17.1936 என்ற கதை காதல் திருமணத்தின் உயர்வைக் கூறுகிறது. 'அட சகுனமே' (15-7-1936) என்ற கதை மக்களின் மூடப் பழக்கத்தைக் கூறுகிறது. 'இன்னும் ஒரே ஒரு நிமிஷம்' (1.8.1936) என்ற கதை, பெண்கள் தங்களை ஒப்பனை செய்துகொள்ள எடுத்துக்கொள்ளும் அளவு கடந்த காலம் பற்றிக் கேலி செய்கிறது.

**(ii) கவிதை**

பிரசண்ட விகடன் மாதமிருமுறை இதழில் அவ்வப்போது சில கவிதைகளும் வெளியிடப்பட்டன. 'அணிலும் சிவனும்' என்ற

தலைப்பில் நாரணன் என்பவர் எழுதிய கவிதை (15.4.1936), 'ஆரியூர் வ. பதுமநாபப் பிள்ளை என்பவர் எழுதிய 'மாதர் கடமைக் கும்மி' (15.5.1936), 'நான் கண்ட பாரதத்தாய்' என்ற டிஎஸ். சீனிவாசன் கவிதை (15.9.1936), சாமி என்பவர் எழுதிய 'கொலைஞர் மாநாடு' (19.1936) என்ற கவிதை முதலியன குறிப்பிடத்தக்கன.

மாதர் கடமைக் கும்மியில் இடம் பெறும்,

"செந்தமிழ் நாட்டினில் மாதர்கள் பேதமை
சேர்ந்திருப்பது எவர் குற்றம்
அந்தகர் போலும் அவரை அடக்கிஆள்
ஆடவர் தங்களின் குற்ற மன்றோ!
பெண்ணுக்கு விடுதலை இல்லையெனல் - இங்கு
பேணும் சுயாட்சி கூடுவதோ
மண்ணுக்கு இறைவியும் பூமகளே - இதை
மறந்து பெண்ணை அடக்குவதோ"

என்னும் பகுதியும் கிரதி என்பவர் பாடியுள்ள தமிழ்நாடு பற்றிய கவிதையின் பின்வரும் பகுதியும் சிறப்பாகக் குறிக்கத்தக்கன.

"மானங் குறைந்த தமிழ்நாடு - உயர்
மாண்புங் குறைந்த தமிழ்நாடு
ஈனம் மிகுந்த தமிழ்நாடு - என்றும்
இன்பும் ஒழிந்த தமிழ்நாடு
வன்மை இழந்த தமிழ்நாடு - உயர்
வளமுங் குறைந்த தமிழ்நாடு இனும்
தொன்மை முழங்குந் தமிழ்நாடு - வலி
தோளும் குழைந்த தமிழ்நாடு"

கொலைஞர் மாநாடு' என்ற கவிதையில் சுற்றுப்புறச்சூழல் வலியுறுத்தப்பட்டுள்ளது. சுற்றுப்புறம் எவ்வாறு கெடுகிறது என்பதை உணர்த்தும் அக்கவிதையின் சிலவரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

கொலைஞர்கள் மாநா டொன்று கூட்டினர் அதற்கு எச்சில்
இலைகளில் குப்பை மேட்டில் எலிகளின் முதுகில் நாற்றத்

தலைதனில் சகதிக் குட்டைச் சாக்கடைப் படுக்கை கட்டில்
நிலையினி லிருந்து வந்து நிறைந்தனர் வீர ரெல்லாம்

ஈ, கொசு, எலி, பேன், மூட்டைப் பூச்சி போன்றவை எப்படி நோய்களைப் பரப்புகின்றன என்பதைக் கூறுகிறது கவிதை.

(iii) கட்டுரை

15.4.1954 பிரசண்ட விகடனில் வெளிவந்த புது டில்லியின் அமைப்பு பற்றிய கட்டுரை, புது டில்லியை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. பலகாரப் பிரியன் என்ற பெயரில் 'பண்டங்கள் பலவிதம்' எனும் கட்டுரை வெளிவந்துள்ளது (ஆகஸ்டு 1936). 'தமிழன் காணாத ஒன்று' என்ற தலைப்பில் சந்தானம் என்பவர் தமிழர்களிடம் ஒற்றுமை இன்மை என்பது குறித்து எழுதுகிறார் (டிச. 1958). 'வினோதங்கள்' என்ற கட்டுரையை எஸ். குருசாமி ஐயர் என்பவர் எழுதியுள்ளார் (ஆகஸ்டு 1936).

'ஆரம்ப ஆசிரியர்களுக்கு' (1936 ஏப்ரல்) என்ற தலைப்பில் ஜீவா எழுதியுள்ள கட்டுரையில் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் பெறும் பயிற்சி மட்டும் ஆசிரியருக்குப் போதாது. அவர்கள் திறம்படப் பணிபுரிய வேண்டுமானால் வேறுசில பயிற்சிகளையும் பெறவேண்டும்; தன்னைத் தகுதியுள்ளவர்களாக மாற்றிக்கொள்ள வேண்டும். அதற்குக் கீழ்க்கண்ட சில மாதிரி வினாக்களுக்கு விடை தயாரித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று கூறிச் சில வினாக்களைக் கொடுத்துள்ளார். அவற்றுள் சில : 1. ஒரு பையனைக் காயம் படும்படி அடித்து விடுகிறீர். தகப்பன் சண்டைக்கு வந்தால் அவரை, சமாதானப்படுத்துவது எப்படி? 2. ஆதி திராவிடர்களைப் பள்ளியில் சேர்த்துக் கொள்வது பற்றிக் கிராமவாசிகளுக்குள்ள அதிருப்தியை எவ்வாறு போக்குவீர்? 3. உமக்கு உம்முடைய நிர்வாகிகளால் ஏற்படக்கூடிய தொந்தரவுகள் (பாதகங்கள்) என்னென்ன? அவைகளை நிவர்த்திப்பது எப்படி? 4. மேலதிகாரிகளிடமிருந்து உமக்கிடப்படும் ஸ்பெஷல் டியூட்டி என்னென்ன? அவைகளை நிறைவேற்றுவதில் உமக்குள்ள கஷ்டங்களை விவரிக்க.

பால்ய விவாகம், ஜாதகப் பொருத்தம், தரகர் வியாபாரம் முதலியன தடைப்பட வேண்டுமானால், ஆண்களும் பெண்களும் 'கலியாணப் பரிஷையில்' தேர்வு பெற வேண்டும் என்று கூறுகிறார். ஆண்களுக்கான தேர்வு வினாக்கள் வருமாறு:

1. உம்முடைய கலியாணத்திற்கு நீர் (கடன் வாங்காமல்) சேமித்து வைத்திருக்கும் தொகை எவ்வளவு?

2. கலியாணத்திற்கு நீர் என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்? (பூர்வீக சொத்து இல்லையெனில்)

3. உமக்குத் தொழில் என்ன? மாதம் குறைந்தது எவ்வளவு சம்பாதிக்கின்றீர்?

4. நீர் வைதீகம்; உமது மனைவி லௌகீகம் - நீர் அவரை எப்படித் திருத்துவீர்?

5. மக்கள் அதிகமானாலும் மனைவிமீது மாறா அன்புடையவராக இருப்பீரா?

6. பெண்கல்வி அவசியமா? குமாரத்திகளைப் படிக்க வைப்பீரா?

7. மனைவி இருக்கிறபோதே மறுமணம் செய்ய உத்தேசமா? அது சரியா?

8. பெண்களை அடித்து மிரட்டுவது சரியா?

9. உமது தாயாருக்கும் மனைவிக்கும் யுத்தம் நேர்ந்தபொழுது நீர் அவர்களை எவ்வாறு திருத்துவீர்?

10. பெண்கள் சினிமா, டிராமா, சர்க்கஸ் பார்க்க வேண்டுவது அவசியமா?

பெண்களுக்கான வினாத்தாள் வருமாறு :

1. பாடத் தெரியுமா? தெரிந்த பாடல்களுடன் தயாராயிரு.

2. உன் புருஷன் எப்படி இருக்க வேண்டும்? (குணம், பணம், அழகு)

3. உன் கலியாணத்திற்குப் பெற்றோர் எவ்வளவு செலவு செய்யவேண்டும் என்று விரும்புகிறீர்?

4. கோலம் போடத் தெரியுமா?

5. தெரிந்த உயர் பட்சணம் செய்யும் விதம் பற்றிக் கூறு?

6. உன்னுடைய டிரஸ் எவ்வாறு அமைந்திருக்க வேண்டும்?

7. நீ எதுவரையில் படித்திருக்கிறாய்?

8. தெய்வபக்தியும் தேசபக்தியும் இல்லாத புருஷனை எவ்வாறு திருத்துவாய்?

9. உன் கணவருக்குக் கோபம் வந்தால் எவ்வாறு தணிவிப்பாய்?

10. குழந்தை அதிகம் பெற்றால், பாதுகாப்பது பற்றியும் சம்பந்தஞ் செய்வது பற்றியும் இரண்டு பக்கம் எழுது (1.7.1936).

தமிழர்களுக்கு மொழிப்பற்றும் இனப்பற்றும் மிகவும் குறைவு. இது காலந்தோறும் நாம் காண்கின்ற வரலாறு. இது குறித்தும் ஜீவா ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். "வங்காளிகள் கொண்டுள்ள தாய்மொழிப் பற்றில் ஆயிரத்தில் ஒரு கூறாகிலும் நமக்கு இருக்கிறதா? வங்காளிகள் காட்டிவரும் தாய்மொழிப் பற்றைப் போற்றும் வகையிலாயினும் தமிழ் மக்கள் தங்கள் தாய்மொழியில் பற்றுக்கொண்டு, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வேண்டுவன செய்வார்களா?" என்று கூறுவது அவரது தமிழ்ப்பற்றைக் காட்டுகின்றது.

## சினிமா விமர்சனம்

'ஆடலும் பாடலும்' என்ற தலைப்பில் 'இரசிகன்' என்ற புனைபெயரில் பல வரலாற்றுச் சிறப்பு மிக்க செய்திகளைக் கூறியிருக்கிறார். இது ஜீவாவும் பிரசண்ட விகடனும் கலைத்துறைக்கு ஆற்றிய தொண்டினை எடுத்துக்காட்டுகிறது.

பக்த நந்தனார், பாக்கிய சக்கரம், பாதுகா பட்டாபிஷேகம், மனோஹரன், உஷா கல்யாணம், கருட கர்வ பங்கம், சந்திரஹாசன், பக்த குசேலா, பட்டினத்தார், விசுவாமித்திரர், ஸ்ரீமதி பரிணயம், சத்தியசீலன், சம்சார நௌகா, இல்லற ஜோதி, மலைக்கள்ளன் முதலான பல படங்களுக்கு விமர்சனம் எழுதப்பட்டுள்ளது.

சினிமாப்படங்களை விமர்சனம் செய்யும்போது, ஜீவா படங்களை நேரிடையாக விமர்சனம் செய்யாமல், அக்காலச் சமுதாயச் சூழலையும் திரைத்துறைச் சூழலையும் விரிவாக எடுத்துரைத்த பின்பே தாம் எடுத்துக்கொண்ட சினிமா பற்றிய விமர்சனம் செய்கிறார். சினிமா உலகம் கூட சாதி வேறுபாட்டினால் உண்மையான விமர்சனம் செய்வதில்லை என்று வருத்தப்படுகிறார். கே.பி. சுந்தராம்பாள், எஸ்.டி. சுப்புலட்சுமி போன்ற நடிகையர்களின் நடிப்பு பற்றி அக்காலத்தில் சில பத்திரிகைகள் சரியான விமர்சனம் எழுதவில்லை என வருந்திய அவர், 1936 ஏப்ரல் இதழில், "அரசியலில், தேசியத்தில், சமய, சமூகத்தில்தான் வகுப்புவாதம் எனும் தொத்துநோய் பரவி, இந்திய மக்களை முன்னேற்றமடைய வொட்டாது அலைத்துப் படுகுழியில் ஆழ்த்திவிடுகிறதென்றால்,. . . சினிமாக் கலையிலுமா இச்சனியன் பிடிக்க வேண்டும்? இவ்வகுப்பு வாதப் போக்குக்குத் தமிழ் மக்களாகிய நாம் அடிமைப்பட்டிருந்தால் எக்காலத்தில், அரசியலிலோ, கலைத் துறையிலோ, பிறவற்றிலோ முன்னேற முடியும்? ஆண்டவனே, இவ்வகுப்புவாதத் தொற்று நோயிலிருந்து மக்களைக் காப்பாற்ற மாட்டாயா?" என்று எழுதுகின்றார்.

பம்மல் சம்பந்த முதலியார் பற்றி ஒரு சுவையான செய்தி: ஒரு முறை சென்னைக் கிறித்தவக் கல்லூரியில், கல்லூரி சபைக் கூட்டத்தில், சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியர் மணி. திருநாவுக்கரசு அவர்கள் உரையாற்றும்போது, முன்னால் அமர்ந்திருந்த பம்மல் சம்பந்த முதலியாரைப் பார்த்து, முதலியார் போன்றவர்கள் சினிமாவுக்கு வரவேண்டும் என வேண்டுகோள் விடுக்க, அதை மறுப்பதுபோல், சம்பந்த முதலியார் தலையை அசைத்தாராம். ஆனால் அதே சம்பந்த முதலியார் பிற்காலத்தில், தமது முதிய வயதில் மனோஹரா திரைப்படத்தில் நடித்தார். அப்படத்தைப்

பற்றி ஜீவா பிரசண்ட விகடனில் (1.5.1936), "என்னைப் பொறுத்தவரையில் என் போன்றோர் எதிர்பார்த்த அளவு, நமது முதலியார் சம்பந்தப்பட்ட இப்படம் இல்லை என்றே வருத்தத்தோடு கூறவேண்டியிருக்கிறது... திரு. சம்பந்த முதலியார் புருஷோத்தமனாக நடிக்காது, டைரக்ட் செய்யுமளவோடு நின்றிருக்கலாம்" என்று விமர்சனம் எழுதுகிறார். இது ஜீவாவின் நடுநிலைப்போக்கையும் நியாய உணர்வையும் வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

15.5.1936 இதழில், 'தாரா சசாங்கம்' என்ற தமிழ் பேசும் படத்துக்கு விமர்சனம் எழுத வந்த ஜீவா, விகடனில் சமுதாய உணர்வுடன் எழுதியுள்ள செய்திகள் நினைக்கத்தக்கன. ஆபாசத்தைச் சினிமாவில் புகுத்துவது கண்டு சீறிப் பாய்கிறார்.

> நமது இந்து மத, புராண, இதிகாசங்களில் இயற்கைக்கு மாறானதும் அறிவுக்குப் பொருத்தமற்றதும் சிறிதும் நம்புவதற்கு ஏதுமற்றதுமான பல ஆபாசக் கதைகள் நிறைந்திருக்கின்றன என்று பகுத்தறிவுவாதிகள் கூறிவருகின்றனர். அது உண்மை என்பதுபோல், நமது படத்தயாரிப்பாளர்கள், படம் எடுத்து வருகின்றனர். சினிமா படத்துக்குச் சிருங்கார ரஸம் அத்தியாவசியம் என்றால், அதற்கும் ஒரு அளவில்லையா? ஐந்தாம் வேதம், ஐந்தாம் வேதம் என்று மிருக சுபாவத்தை மீசுரப்படுத்திப் பார்ப்பவர் காமவெறிகொண்டலையும் வகையில், ஆபாசமாக நடித்தும் பாடியும் பேசியும் வந்தால்தானா சிருங்கார நாடகம் என்று கூறமுடியும்? இவ்விதம் ஆபாசமாகச் சித்திரித்துக் காட்டப்படும் படத்தை, அறிஞர்களும் குடும்பப் பெண்களும் சிறுவர், சிறுமிகளும் எவ்வாறு பார்க்க முடியும்?

என்று மிகவும் சூடாகவும் கடுமையாகவும் கேட்கிறார்.

தமிழ்ப் படங்கள்மீதும் தமிழ்மீதும் அவருக்கு அளவு கடந்த அன்பு உண்டு. எனினும் தமிழ்ப்பட உலகைச் சார்ந்தவர்கள், இன்னும் தங்கள் திறமையை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று தம் கருத்தைப் பலவிடங்களிலும் சுட்டுகிறார். "தமிழ் மொழி

தெரிந்தவர்கள் (அ) தமிழைத் தாய் மொழியாக உடையவர்கள் தமிழ்ப் படங்களை டைரக்ட் செய்ய வேண்டும் என்று நாம் அடிக்கடி சொல்லி வருகிறோம்" என்று எழுதுகிறார்.

'அமரஜோதி' என்னும் இந்திப்படம், வெனீஸ் நகர சர்வதேச சினிமா விழாவிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்பட்டதற்குப் பாராட்டு கூறிவிட்டு, "நம் படங்களில் எந்த விசேஷத்தைக் கொண்டு, சிறந்த கதைப்போக்கா! நடிப்புத் திறமையா! நடிகர்களின் அழகிய தோற்றமா! இனிய பாடலா! அல்லது சிறந்த டைரக்ஷனா! எந்த விசேஷ அம்சத்தைக் கொண்டு, பிற மாகாணத்தார் பார்க்க விரும்பி வரவழைப்பார்கள்? என்று என்னுள் எழுந்த வினாவுக்கு இதுவரை விடையளிக்க முடியவே முடியவில்லை" என்று எழுதும் ஜீவாவின் ஆதங்கம் நமக்குப் புரிகிறது. ஆனால் தமிழ்ப்படத் தயாரிப்பாளர் களுக்கும் படைப்பாளிகளுக்கும் இது புரிந்ததா? என்பது விளங்கவில்லை.

தமிழ்ப் படங்களைக் குறை கூறியதோடு அமையாமல், எப்படிப்பட்ட படங்கள் வரவேண்டும் என்ற அறிவுரையையும் வழங்குகிறார் ஜீவா. "ஒரு படம் உன்னத முறையில் சிறந்து வெளிவருவதற்கு முதற்காரணம் கதையமைப்பே. தற்போதைய நவ நாகரிக வாழ்க்கையின், நடவடிக்கைகளை அனுசரித்து, கதைகளை ஜோடித்துப் படமெடுக்க வேண்டும். இதைத் தவிர்த்துப் பல ஆண்டுகளாக, ஆடியாடி, பாடிப்பாடி, பார்த்தும் கேட்டும் சலித்துப்போன, பாட்டி பழங்கதைகளால் எந்தவிதம், யாரிடம் கலை வளர்ச்சி அடையுமென்று நாம் எதிர்பார்க்க முடியும்" (1.9.1936) என்று எழுதுவது அவரது அறிவுடைமைக்குச் சான்று.

### காலச்சக்கரம்

'காலச்சக்கரம்' என்ற தலைப்பில் நாட்டில், உலகில் நடக்கும் அரசியல் நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறுகிறார். விதவைகள் மறுமண மசோதா காங்கிரசுக்குக் கிடைத்த வெற்றி என்று எழுதுகிறார் (ஏப்ரல் 1936). ஹிட்லர் செய்த தடபுடல்கள் பற்றி எழுதி அவரது அரசியல் நடவடிக்கைகளை ஆராய்கிறது பிரசண்ட விகடன் (ஏப்ரல் 1936). சர்வதேசச் சங்கம் என்ற அமைப்பு இருந்தும் அது திறம்படச்

செயல்படாத நிலையை எடுத்துக்காட்டி விளக்குகிறார் (மே 1936). வேலூர் ஜில்லா போர்டு தேர்தலில் காங்கிரசுக்குப் பெரும்பான்மை இருந்தும் அதன் வேட்பாளர் தோல்வியுற்றது குறித்து வருந்துகிறார் (மே 1936). ஒவ்வொரு குடிமகனும் தனது ஓட்டுரிமையைப் பதிவு செய்வது அவர்தம் கடமை என்று குறிப்பிடுகிறார் (15.6.1936); அந்தக் காலத்திலேயே பம்பாய் காங்கிரசு, ஓட்டர்களைச் சேர்க்க ரூ.1000/- செலவு செய்தது; இதைத் தமிழ்நாடு பின்பற்ற வேண்டும் என்று எழுதுவார்.

திவான்பகதூர் இராமசுவாமி முதலியாரைக் காங்கிரசில் சேருமாறு அழைப்பு விடுக்கிறார். அவர், இந்தியா மந்திரிசபை மெம்பர் பதவியை ஏற்கக்கூடாது என்று எழுதுகிறார். திலகர் திரட்டிய சுயராஜ்யத்தில் ஊழல் நடந்து விட்டது என்று கூறியதற்கு, இராமசாமி முதலியாருக்கு மறுப்பறிக்கை விட்டு விவாதிக்கிறார். சிறிது காலம் காங்கிரசை விட்டு விலகியிருந்து மீண்டும் காங்கிரசில் சேர்ந்த ஜார்ஜ் ஜோசப், பி. வரதராஜுலு நாயுடு, திரு.வி.க. ஆகியோரை வரவேற்று எழுதியதுடன் மற்றவர்களையும் 'சேர வாரும் ஜெகத்தீரே' என்று வந்து சேருமாறு அழைப்பு விடுக்கிறார் (15.9.1936). சட்டசபை அங்கத்தினர்களுக்குச் சம்பளம் தரவேண்டும் என்று சத்தியமூர்த்திதான் முதன்முதலாக சிம்லா ரேடியோவில் பேசினார் என்று எழுதுவார் (15.9.1936). திருச்சி நகரசபைத் தலைவர் தேர்தலில் காங்கிரசு வேட்பாளர் பி.ஆர். தேவர் தோல்வியுற்றதற்குத் தார்மீகப் பொறுப்பேற்று ராஜாஜி பதவி விலகினார் என்ற செய்தியையும் குறிப்பிடுகிறார் (19.1936).

### கருத்துப்படங்கள்

விகடனில் வெளிவந்த கருத்துப்படங்கள் அவ்வக்கால, அரசியல், சமூக நிலைமைகளை எடுத்துக்கூறுவனவாக உள்ளன. உலகப் போரினால் ஐரோப்பாவின் பொருளாதாரம் சிக்கலாக மாறிவிட்டது என்பதை உணர்த்த ஒரு பெரிய பாறை வரைந்து அதன் கீழ் மனிதன் ஒருவன் மாட்டிக்கொண்டிருக்கிறான்; அவன்மீது ஐரோப்பா என எழுதியிருக்கிறது. இதைப் போல, நாளெல்லாம் கைரிக்ஷா இழுக்கும் தொழிலாளி, தான் ஏறி அமர்ந்து சவாரி

செய்தால் எப்படி இருக்கும் என்பதை உணர வேறு ஒரு மனிதனைக் கொண்டு இழுக்கச் சொல்கிறான். வண்டியில் அமர்ந்திருப்பவன் வாயில் சிகரெட் வைத்து ஊதியபடி, கால்மேல் கால்போட்டு அமர்ந்திருக்கிறான்; அதை இரண்டு தலைவர்கள் ஆச்சரியத்தோடு பார்க்கின்றனர். இன்னொரு படம் வெயிலின் கொடுமையைக் காட்டுகிறது. அலுவலகத்தில் பணிபுரியும் ஒருவர், தலையில் குடையைக் கட்டிக்கொண்டும் மற்றொருவர் ஐஸ் வைத்துக் கட்டிக் கொண்டும் பணி புரிகின்றனர்.

உலக மகாயுத்தம் வரப்போகிறது என்பதை, ஒரு குறியீட்டில் காட்டியுள்ளார். யுத்த குரல்வளையின் படத்தை வரைந்து விட்டு, அதன் அருகில் சிறிதும் பெரிதுமான தூரிகைகள் வைக்கப்பட்டுள்ளன. சிறு தூரிகையில் இத்தாலிய அபிசீனியப்போர் என்று எழுதப்பட்டுள்ளது. பெரிய தூரிகையில் உலக யுத்தம் என்று எழுதியிருக்கிறது. உலகில் வல்லரசு நாடுகள் தலைதூக்கிவிட்டன என்பதை அறிவிக்க முசோலினிக்கு முடிசூட்டு விழா நடைபெறுவது போன்று ஒரு படம் வெளியிடப்பட்டுள்ளது. இன்னொரு கருத்துப் படம் ஒரு வகுப்பறையைக் காட்டுகிறது. மாணவர்கள் பலரும் பல குறும்புச் செயல்களில் ஈடுபடுகின்றனர். ஆசிரியர் தூங்குகிறார். அவர்மேல் தமிழ் வாத்தியார் என்று எழுதப்பட்டுள்ளது. காங்கிரசுக் கட்சி தன்னிகரின்றி வளர்ந்து வருகிறது என்பதைக் குறிக்கும் ஒரு காட்சி. ஒரு யானைமீது நேரு அமர்ந்து வருகிறார். சுற்றிப் பல நாய்கள் உள்ளன. அவற்றின்மீது ஜஸ்டிஸ் கட்சி, வைதீக சனாதனக் கட்சி என்று எழுதப்பட்டுள்ளன. யானைமீது காங்கிரஸ் என எழுதப்பட்டுள்ளது.

## பிற செய்திகள்

'இந்தியா சட்டசபையின் ஒரு மெம்பர் தன் மனைவியை இழந்து, அவர் வேறு திருமணம் செய்வதாயிருந்தால் ஒரு விதவையைத்தான் திருமணம் செய்யவேண்டும்' என்று எழுதுகிறார் ஜீவா. 'விதவைகள் திருமணச் சட்ட மசோதாவுக்கு இந்தியா சட்டசபை மெம்பர்கள் பேராதரவு காட்டி அதை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று விகடன் கேட்டுக்கொள்கிறான்' (1.4.1936).

ஸ்ரீமான் சுபாஷ் சந்திரபோஸ், ஸ்ரீமான் சரத் சந்திரபோஸ் ஆகியோருக்கு விதிக்கப்பட்ட தடைகள் நீக்கப்படவேண்டும்; பம்மல் சம்பந்த முதலியாரின் நாடகப்பணி குறித்துப் பாராட்டும் கருத்துகள் (15.4.1936).

சென்னையில் அன்னிபெசன்ட் அம்மையாரின் ஹோம்ரூல் இயக்கத்தில் ஈடுபட்டவர் பி.பி. வாடியா என்பவர். இவர்தான் 1918இல் பக்கிங்காம் கர்நாடிக் நெசவாலைத் தொழிலாளர்களை ஒரு சங்கமாகச் சேர்த்தார். இதுதான் இந்தியாவில் ஏற்பட்ட முதல் தொழிற் சங்கம் ஆகும் (1.7.1936).

"இவ்வாறு அர்த்தமற்ற முறையில் அவரவர் கியாதியடைந்த மார்க்கங்களுக்கு முரணான வழியில், விளம்பரங்கள் செய்வதைவிட, அதே விஷயங்கள்கொண்ட விளம்பரங்களினால் ஜனங்கள் பொருள்களின் தன்மையையறிய ஏதுவாகுமென்பது எனது நம்பிக்கை. கோகுலாஷ்டமிக்கும் குலாம்காதருக்கும் சம்பந்தம் கூறுவது போலல்லவா இருக்கிறது நமது இந்தியர்கள் விளம்பரம்" (1.8.1936).

கா. நமச்சிவாய முதலியார் 13.3.36இல் மறைந்து விட்டார். அது குறித்த இரங்கல் செய்தியை விகடன் வெளியிட்டது (1.4.1936). அதில் "தமிழ் வசன நடைக்குப் புத்துயிர் அளித்தவர் இப்பெரியார். அது மட்டுமோ! தமிழ்ப் பண்டிதர்கள் என்றால் பரம ஏழைகள்; உலகம் தெரியாதவர்கள், அநாகரிகர்கள் என்று பிறர் எண்ணி வந்த எண்ணத்தை அவர் போக்கி, தமிழ்ப் புலவர்களுக்குக் கௌரவத்தையுண்டு பண்ணினார். அவர் பரந்த நோக்கும் விரிந்த உள்ளமும் உடையவர். சாதி சமய பேதங்களைக் கடந்தவர். யாருடனும் இனிமையாகப் பேசும் சுபாவம் உடையவர். தம்மை அடைந்தாரை ஆதரிப்பதில் கற்பகத்தருவை யொத்தவர்" என்று அவரது பெருமைகளை எடுத்துக்கூறி, இப்படிப்பட்டவர் தாம் மணிவிழா காணுமுன்பே மரணமடைந்து விட்டாரே என்று ஏங்குகிறார்.

'சம்சார நௌகா' எனும் கன்னடப் படத்தின் ஆரம்பத்தில் 'பெற்ற தாய்தனை மகன் மறந்தாலும்' எனும் வள்ளலார் பாடல்

பாடப்பட்டது (15.9.1953). 'துப்பாக்கிப் பிரயோகம்' என்ற தலையங்கத்தின் ஒரு பகுதி: "காங்கிரசு ஆட்சியின் கேடுகளை நன்குணர்ந்த முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவர், 'போலீஸ் ஆட்சி' என்றார். ஜெயப்பிரகாஷ் நாராயணன் 'பாசிச ஆட்சி' என்றார்; ஆச்சாரிய கிருபளானி 'எதேச்சதிகார ஆட்சி' என்றார். இம்மூவர் கூற்றுக்களையும் பின்னணியாக வைத்து, இன்றைய ஆட்சியினரது செயல்களை நடுவுநிலைமையோடு மதிப்பிடும் யாரும் இக்குற்றச்சாட்டுகள் உண்மை என்பதை மறுக்கமாட்டார்கள். மறுக்கவும் முடியாது" (1953).

## முடிவுரை

"தமிழர்களில் இவர் எழுத்துக்களைப் படிக்காதவர்கள் மிகச் சிலரே. கல்கிக்கு முன்னாலேயே தமிழர்களைக் கதை படிக்க வைத்த கதாசிரியர் என்ற பெருமை இந்த ஜீவாவுக்கே உண்டு" என்ற தமிழ்வாணனின் கூற்றும், "பொதுவாழ்வில் தமக்குச் சாதகமோ, பாதகமோ எது ஏற்பட்டாலும் அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், கொண்ட கொள்கைக்காக உறுதியும் பற்றும் பாசமும் கொண்டு இடைவிடாது அயராது உழைக்கும் உழைப்பாளர்; கட்சி, அரசியல் சர்ச்சை இவைகட்கு அப்பாற்பட்டவர்" என்ற வி.எஸ். மணியின் கூற்றும் ஜீவாவிற்குப் பொருத்தமானவை.

# கலைமகள் (சென்னை)

1932 மு. செல்லன்

"நமது நாடானது சீர்பெற்றுச் சிறப்புற்று விளங்க வேண்டுமானால், தேச பாஷை பத்திரிகைகள் அதிகமாக வேண்டுவதைத் தவிர வேறு வழி இல்லை. பத்திரிகைகள் அதிகமானால் ஜனங்களின் அறிவும் திறமையும் அதிகரித்து ஒற்றுமையும் மேன்மையும் உண்டாகும்".

1908ஆம் ஆண்டு விவேகபோதினி என்ற இதழைத் தொடங்கியபோது அதன் முதல் இதழில் மேற்கண்டவாறு இதழாசிரியர் குப்புசாமி ஐயர் தெரிவித்துள்ள கருத்து எண்ணிப் பார்க்கத் தக்கது.

ஒரு நாடும் அதன் மக்களும் மேன்மை அடைய வேண்டுமானால் அந்நாட்டுத் தாய்மொழியில் இதழ்கள் பலவாக - மிகப்பலவாகத் தோன்ற வேண்டும் என்பதும் அவை மக்களுக்கு மொழி, இன, நாட்டு உணர்வுகளோடு உலகியலையும் ஊட்டுவனவாக அமையவேண்டும் என்பதும் புலனாகின்றன.

இந்தப் பொதுநோக்கத்தின் அடிப்படையில் விவேகபோதினி இதழுக்கு முன்னும் பின்னுமாக எண்ணற்ற இதழ்கள் தோன்றின. அவற்றுள் சென்னையில் இருந்து வெளிவந்து கொண்டு இருக்கும் 'கலைமகள்' இதழும் ஒன்றாகும்.

1932இல் தொடங்கி இன்றளவும் வெளிவந்து கொண்டிருக்கும் கலைமகள் இதழின் தனித்தன்மைகளும் சிறப்புகளும் தமிழ் இதழியல் வரலாற்றில் அதன் பங்களிப்பும் இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கன.

தமிழ்ப் பத்திரிகைகளின் பெருக்கத்தையும் அவற்றில் வெளிவந்து கொண்டிருந்த பல்வேறு வகையான பொருளடக்கங்களையும் கவனித்த சில நண்பர்கள் அந்தப் பத்திரிகைகளை விட வேறான வடிவத்திலும் பொருளடக்கத்திலும் ஒரு சஞ்சிகை வெளியிட வேண்டும் என்று விரும்பினர்.

தரமான அறிவியல், ஆராய்ச்சி, கலை சம்பந்தமான கட்டுரைகள், கதைகள், கவிதைகளை உள்ளடக்கிய ஒரு பத்திரிகை அவசியம் என்று மயிலாப்பூரைச் சேர்ந்த சில அறிஞர்கள் விரும்பினர். பெ.நா. அப்புசுவாமி, டி.கே. சிதம்பரநாத முதலியார், வையாபுரிப் பிள்ளை போன்ற அறிஞர்களின் ஆலோசனையுடன் மயிலாப்பூர் லா -ஜர்னல் என்ற நீதித்துறைத் தீர்ப்புகளை வெளியிட்டு வந்த பதிப்பகத்திலிருந்து அதன் நிர்வாகி நாராயணசாமி ஐயர் பொறுப்பில் 'கலைமகள்' என்ற பெயரில் ஒரு மாத இதழ் 1932ஆம் ஆண்டில் வெளிவந்தது. இதற்கு ராமச்சந்திர ஐயர் என்ற ஓய்வு பெற்ற அரசாங்க அதிகாரி முதலில் ஆசிரியராக இருந்தார். இவருக்கு உதவியாக ஓர் இலக்கியக் குழு ஏற்படுத்தப்பட்டிருந்தது. பின்வருவோர் அக்குழுவில் இடம்பெற்றிருந்தனர்.

பெ.நா. அப்புசுவாமி ஐயர், எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, மு. இராகவையங்கார், கே.வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், டி.கே. சிதம்பரநாத முதலியார், தி. சிவராம சேதுப்பிள்ளை, கே. சுவாமிநாதன், க.அ. நீலகண்ட சாஸ்திரி, எஸ். வையாபுரிப் பிள்ளை, எம். லட்சுமி அம்மாள் இவர்கள், 'கௌரவப் பத்திரிகாசிரியர்கள்' என்று அழைக்கப்பட்டனர்.

> பிரபலமான தமிழ் வித்துவான்களும், ஆங்கில பாஷையிலும் தமிழிலும் தேர்ச்சியடைந்த பல கலைஞர்களும் இதற்கு விஷயதானம் செய்து வருவதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். நம் தாய்மொழியாகிய தமிழில் உள்ள பல நூல்களின் அருமை பெருமைகளை எடுத்துக்காட்டி யாவரும் இன்புறச் செய்வதோடு வேறுபாஷைகளிலும் வேறு தேசங்களிலும் உள்ள அரிய சாஸ்திர விஷயங்களையும் நம் தேசத்துக்கு அவசியமான சரித்திர ஆராய்ச்சி விஷயங்களையும் கல்விமான்களுடைய உதவியினால் இப்பத்திரிகை மூலமாய் வெளிப்படுத்தலாமென்று நினைக்கிறோம்.

கலைமகளில் எத்தகைய செய்திகள் எல்லாம் இடம்பெறும் என்பதை மேற்கண்ட அறிவிப்பு விளக்குவதாக உள்ளது. கலைமகளின் முதல் மூன்று ஆண்டு இதழ்களை ஆய்வு நோக்கில் பார்த்தபோது, இதழின் உரிமையாளராகிய நாராயணசாமி ஐயரின் மேற்குறித்த கூற்று பேரளவு நடைமுறைப் படுத்தப்பெற்றதை அறியமுடிகின்றது.

## இதழின் அமைப்பும் உள்ளடக்கமும்

நீளம் 23 சென்டிமீட்டரும் அகலம் 15 சென்டிமீட்டருமாக ஏறக்குறைய இன்றைய கல்கி இதழின் அளவில் தொடக்க காலக் கலைமகள் இதழ் அமைந்து இருந்தது. ஒரு இதழ் 108 பக்க அளவில் வெளிவந்தது.

இலக்கியம், கதை, கவிதை, சரித்திரம், சாஸ்திரம், சிறுவர் பகுதி, மாதர்பகுதி, நற்கலை, மதிப்புரை போன்ற பல்வேறு தலைப்புகளில் செய்திகள் தரப்பெற்றுள்ளன. இவையல்லாமல் அனுபந்தமாக, அதுகாறும் வெளிவராத பழைய தமிழ் நூல்கள் தரப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

> நமது ‘கலைமகள்’ பல துறையிலும் சிறப்படையும்படி செய்ய வேண்டுமென்னும் எண்ணத்துடன் இப்பத்திரிகையில் பழைய தமிழ் நூல்களை வெளியிடலாம் என்று உ.வே. சாமிநாத ஐயர் அவர்களிடம் தெரிவித்துக் கொண்டோம். அவர்கள் அவ்வேண்டுகோளுக்கு இணங்கி ஒவ்வொரு மாதமும் இதுகாறும் வெளிவராத அரிய நூல்களைத் தனியே குறிப்புரை முதலியவற்றோடு கலைமகளில் தொடர்ந்து வெளியிட மனமுவந்து ஏற்றுக்கொண்டார்கள். முதலாவதாக, பலபட்டடைச் சொக்கநாதப் புலவரால் இயற்றப்பெற்ற ‘தென்றல் விடுதூது’ என்னும் பிரபந்தம் ஐயரவர்களுடைய குறிப்புரையுடன் இப்பகுதியில் வெளிவரத் தொடங்கியிருக்கிறது. தமிழ் அன்பர்களுக்கு இவ்வாறு வெளிவரும் நூல்கள் நல்ல பயனை அளிக்குமென்று நம்புகிறோம்

என்று ஏப்ரல் 1932 இதழில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

1932 முதல் 1934 வரையில், பழனி இரட்டை மணிமாலை, பாசவதைப் பரணி, களக்காட்டுச் சத்திய வாசகர் இரட்டைமணி மாலை, திரு இலஞ்சி முருகன் உலா, சியமளா தாண்டகம் முதலிய சிற்றிலக்கியங்கள் உ.வே.சா. அவர்களால் அரிய குறிப்புரைகளுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இவ்வாறு பதிப்பிக்கப் பெற்றவை தமிழ் இலக்கிய உலகிற்குப் புதிய இலக்கிய வரவுகளாக அமைந்தன.

**கதைகள்**

தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் கலைமகள் இதழில் வெளிவந்த சிறுகதைகளுக்கு ஓர் இடமுண்டு. வெறும் பொழுதுபோக்கிற்கு என்றில்லாமல், உயர்ந்த இலக்கியத்துக்கும் அறிவியல் கருத்துகளுக்குமாக அமைக்கப்பெற்ற கலைமகளில் சிறப்பான சிறுகதைகளுக்கும் இடம் அளிக்கப்பெற்றதால் அது எழுத்தாளர்களைக் கவர்ந்தது. பின்னால் 'மணிக்கொடி குழு' எழுத்தாளர்கள் என்று இனம் காணப்பெற்ற பிச்சமூர்த்தியும் சுந்தரராஜனும் கு.ப.ராவும் மணிக்கொடியில் எழுதுவதற்கு முன்பே தமது சிறுகதைப் படைப்புகளைக் கலைமகளில் வெளியிட்டார்கள். வீண்வம்பு, கமலாவின் பயம், கௌரவநாசம் என்ற தலைப்புகளில் பெ.கோ.சுந்தரராஜனும் மோகினி, முள்ளும் ரோஜாவும், குடும்ப வாழ்க்கை, விசயதசமி முதலிய தலைப்புகளில் ந. பிச்சமூர்த்தியும் அபிமன்யுவும் உத்தரையும், விசுவாமித்திரரும் மேனகையும் என்னும் தலைப்புகளில் கு.ப.ராவும் கலைமகளில் சிறுகதைகள் எழுதியுள்ளனர். அதுவரை சிறுகதை என்பது அபூர்வமாக ஓரிரண்டு இதழ்களில் மட்டும் வெளிவந்து கொண்டிருந்த நிலைமாறி எந்த இதழை எடுத்தாலும் கதை படிக்கலாம் என்ற நம்பிக்கையைக் கலைமகள் வாசகர்களுக்கு உண்டாக்கியது.

கலைமகளில் கதை எழுதியவர்களில் குறிப்பிடத்தக்க வேறுசிலர் கல்கி, சங்கு சுப்பிரமணியம், குமுதினி, குகப்பிரியை, சாவித்திரியம்மாள் முதலியோர். முகவெட்டு, அருணாசலத்தின் அலுவல், அனுபவ நாடகம் அல்லது தப்பிலிக் கப் ஆகிய சிறுகதைகளைக் கல்கி கலைமகளில் எழுதினார்.

தமிழ்ச் சிறுகதை உலகில் புகழ்பெற்று விளங்கிய இவர்களைத் தவிர வேறுபலரும் கலைமகளில் சிறுகதைகளை எழுதினர். பொதுவாக, கலைமகளில் வெளிவந்த சிறுகதைகள் சமுதாயச் சீர்திருத்த கருத்துக்களைக் கதைப்பொருளாகக் கொண்டிருந்தன.

சிறுகதைகளைப் போலவே கலைமகளுக்குப் பெருமை சேர்த்த வேறுசில பகுதிகளும் உண்டு. அவை அறியத்தக்கன. கலைமகளில் வெளிவந்த அறிவியல் கட்டுரைகளும் கலைச்சொல்லாக்க முயற்சிகளும் மொழிபெயர்ப்பு இலக்கியப் படைப்புகளும் இலக்கியக்

கட்டுரைகளும் ஆராய்ச்சிகளும் தனித்தன்மை வாய்ந்தவை. தமிழ் இதழியல் வரலாற்றில் கலைமகள் நிலைத்து இருப்பதற்கு இவையே அடிப்படை

இவற்றிற்கு அடுத்த நிலையில் நாடோடிப் பாடல்கள் கலைமகள் இதழ்களில் முக்கியத்துவம் பெறுவதைக் காணமுடிகிறது.

> புது நாகரிகவெள்ளம் வந்து கரை புரண்டு நமது நாட்டைத் தாக்கவே, நமது நாடானது பல வகையாக மாறுபட்டு வருகிறது. மோட்டார் கார்கள், பஸ்கள் இவற்றின் வெள்ளமானது, நமது வண்டிக்காரன் தொழிலையும் அவன் பாட்டையும் நசுக்க ஏதுவாகி விட்டது. ஆங்கிலக் கல்வியிலும் ஆங்கில முறைகளிலும் ஓர் ஆசை உண்டாகவே நமது நாட்டுக் கல்வியிலும் முறைகளிலும் பழக்கவழக்கங்களிலும் வாழ்க்கை முறைகளிலும் ஒரு கவனக்குறைவு உண்டாகிவிட்டது; அதில் ஓர் இழிவுகூடப் புலப்படத் தொடங்கி விட்டது. ஆகவே தாலாட்டுப் பாட்டுக்களைப் பாடுவது அநாகரிகமாகவும் அதுபோலவே சுழற்சி, பல்லாங்குழி, சோழி, அம்மானை, பாண்டில் முதலிய விளையாட்டுக்களை விளையாடுவது கர்நாடகமாகவும் கருதப்படத் தொடங்கி விட்டன. ஆதலால் அப்பாட்டுக்களும் கற்கப்படுவதில்லை. அவை அச்சில் இன்றி, கர்ணபரம்பரையாகவே வந்து கொண்டிருப்பதால் இன்னும் ஒன்றிரண்டு தலைமுறை செல்லுமானால் அவை இருந்த இடமும் தெரியாதபடி முற்றிலும் மறைந்து போனாலும் போய்விடும். அவ்வாறு அவை அழிந்து போகாவண்ணம் பாதுகாக்க வேண்டியது நமது கடமை என்று கருதுகிறேன். ஆதலால் அப்பாட்டுக்களைத் திரட்டி அச்சிட்டு வைத்துவிட்டால் அவை அழியாமல் தங்கிவிடும். நமக்குத் தேசாபிமானம் மிகுந்து, பகட்டான மேல்நாட்டு நாகரிகத்தின்மேல் நமக்கு உண்டாயிருக்கிற கட்டுக்கடங்காத தற்காலிக ஆசையானது ஒருவாறு அடங்கி, நமது நாட்டிலுள்ள அருமை பெருமைகளை நாம் நன்றாக உணரப்போகும் ஒரு சமீப காலத்திலே அவையாவும் நமது நாட்டில் மீண்டும் தலையெடுத்துச் சிறப்பாக விளங்கும் என்பது துணிவு.

அப்பாட்டுக்களைத் திரட்டி நமது கலைமகள் பத்திரிகையில் மாதந்தோறும் வெளியிடலாமென்று எண்ணியிருக்கிறோம். ஆகையால் நமது நண்பர்கள் அனைவரும் அவரவர்கள் ஊர்களிலுள்ள நாடோடிப் பாட்டுக்களைத் திரட்டி எழுதி அனுப்பினால் நாம் அவைகளை வந்தனத்துடன் ஏற்றுக் கொண்டு வெளியிட முயலுவோம்.

பெ.நா. அப்புசுவாமியின் வேண்டுகோளின்படி கிடைக்கப் பெற்ற நாடோடிப் பாட்டுக்கள் எண்ணிக்கையில் பலவாகக் கலைமகள் இதழில் வெளிவந்துள்ளன. நாட்டுப்புற இலக்கியம் புறக்கணிக்கப் பெற்ற காலகட்டத்தில் அதற்கு முதன்மை கொடுத்து அதை இலக்கியமாகப் பதிவு செய்த பெருமை கலைமகளுக்கே உரித்தானது. தம்முடைய வேண்டுகோளில் வருங்காலத்தில் நாட்டுப்புற இலக்கியம் மீண்டும் தலையெடுத்துச் சிறப்பாக விளங்கும் என்று முன் உணர்ந்து பெ.நா. அப்புசுவாமி கூறியுள்ளது அவருடைய தொலைநோக்குப் பார்வையைப் புலப்படுத்தவல்லது.

கலைமகள் அன்றைய நிலையில் தமிழ் வாசகர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தது. கலைமகளில் வெளியான இலக்கியக் கட்டுரைகளும் ஆராய்ச்சிகளும் சிறுகதைகளும் தொடர்கதைகளும் மொழிபெயர்ப்பு இலக்கியங்களும் பெரும் வாசகர் கூட்டத்தைக் கவர்ந்து இழுத்தன. இதனால் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் இதழியல் வரலாற்றிலும் கலைமகள் நிலைத்த இடத்தைப் பெற்றுச் சிறந்தது.

# மணிக்கொடி

**1933** இரா. இரகுபதி

இருபதாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாற்றில் 'மணிக்கொடி' பத்திரிகையின் காலகட்டம் மிக முக்கியமானது. "மணிக்கொடி வாரப் பதிப்பாகவும், மாதமிரு கதைப்பதிப்பாகவும் வெளிவந்த வெறும் தமிழ்ப் பத்திரிகை மட்டுமல்ல. அது ஒரு இயக்கம். தமிழ்நாட்டில் சமூக அரசியல் வாழ்வில் மக்கள் உள்ளங்களில் புதிய எழுச்சியைத் தூண்டி விடுதல், மக்களின் இலக்கியச் சுவையை உயர்த்துதல் என்ற குறிக்கோளுடன் தொடங்கிய இயக்கம்"[1] என்று மணிக்கொடி இயக்கத்தைப் பதிவு செய்வர். மணிக்கொடி இயக்கத்தின் முன்னோடியாகத் திகழ்ந்தவர்கள், மணிக்கொடி சீனிவாசன், தினமணி சொக்கலிங்கம், வ.ரா., கல்கி, புதுமைப்பித்தன் போன்றவர்கள். இவர்களுடன் மணிக்கொடி இதழில் இணைந்து (1933ஆம் ஆண்டு முதல்) அவ்விதழை, கதை மணிக்கொடியாக மாற்றித் தமிழ்ச் சிறுகதை வரலாற்றின் முன்னோடிகளை இனம் காட்டியவர் பி.எஸ். இராமையா. இக்கட்டுரை, மணிக்கொடி இதழ், கதை மணிக்கொடியாக மாறியதையும் பணிகளையும் ஆராய்கிறது.

## கதை மணிக்கொடியின் தோற்றம்

சைமன் குழுவின் நடவடிக்கைகள் பற்றி அறிந்து செய்திகளை அனுப்புவதற்காக நிருபராக - இலண்டன் சென்றார் சீனிவாசன். அங்கு 'ஸண்டே அப்சர்வர்' என்ற இதழால் கவரப்பட்டார். அவ்விதழ் செய்திகள் தாங்கிவரும் ஏடாக மட்டுமின்றிக் கட்டுரைகள், கதைகள், வாழ்க்கைப் போக்குகள், சிந்தனையாளர்களின் கருத்துக்கள் யாவும் கொண்ட இதழாக இருந்தது. இதனைப் போன்று தமிழிலும் ஒரு ஏட்டினை நடத்த விரும்பினர். வெள்ளையர் ஆண்ட அக்காலத்தில் ஞாயிறன்று எந்த ஒரு ஏடும் வெளிவருவதில்லை. ஆகவே ஒரு ஞாயிறு - இலக்கிய ஏடு நடத்த வ.ரா., சொக்கலிங்கம் இவர்களோடும் தன் தம்பி கிருஷ்ணமூர்த்தியோடும் விவாதித்து மணிக்கொடி என்ற ஏட்டைச் சீனிவாசன் தொடங்கினார்.

அதன்படி 1933 செப்டம்பர் 17 ஞாயிறன்று மணிக்கொடி முதல் இதழ் வெளியானது. கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் "பத்திரிகை என்றால் இதுதான் பத்திரிகை; இந்தத் தமிழ் வேறு யாரால் எழுதமுடியும்"[2] என்று பாராட்டினார்.

"பாரதி பாடியது மணிக்கொடி; காந்தி ஏந்தியது மணிக்கொடி; காங்கிரஸ் உயர்த்தியது மணிக்கொடி; சுதந்திரப் போராட்டத்தில் பல்லாயிரம் வீரர்களை ஈடுபடச் செய்து அவர்களுக்கு உற்சாகம் ஊட்டியது மணிக்கொடி; மணிக்கொடி பாரத மக்களின் மனத்திடை ஓங்கி வளரும் அரசியல் இலட்சியத்தின் நுனி, முனை, கொழுந்து,"[3] என்று மணிக்கொடி முரசு கொட்டிக் கொண்டு வெளியானது.

## பி.எஸ். இராமையாவும் மணிக்கொடியும்

பி.எஸ். இராமையா 24.03.1905ஆம் ஆண்டில் வத்தலகுண்டில் பிறந்தார். ஐந்தாம் வகுப்பு வரைதான் பயின்ற இவர் சென்னைக்கு வந்து பத்தணா ஊதியத்தில் தன் வாழ்வைத் தொடங்கினார். விடுதலை இயக்கத்தில் பங்கேற்றுத் தேசியவாதியாகத் திகழ்ந்தார். பிற்காலத்தில் சிறுகதை உலகத்தில் தனி இடத்தைப்பெற்ற இவர் 1933ஆம் ஆண்டில் ஆனந்த விகடன் நடத்திய சிறுகதைப் போட்டியில் 'மலரும் மணமும்' என்ற சிறுகதைக்காக இரண்டாம் பரிசைப் பெற்றார். மணிக்கொடி இதழ் வெளிவந்த சமயம் 'ஜெயபாரதம்' என்ற ஏட்டில் பணியாற்றிவிட்டு வெளியேறிய இவர், சீனிவாசனைச் சந்தித்து மணிக்கொடிக்கு விளம்பரங்கள் சேகரிக்கும் பணியில் சேர்ந்தார். பாரதிதாசன், நாமக்கல் கவிஞர், வ.ரா., சங்கு சுப்பிரமணியம், சிவராமன், புதுமைப் பித்தன், பிச்சமூர்த்தி, கு.ப.ரா. போன்றவர்களின் படைப்புக்கள் மணிக்கொடியில் வெளிவந்தன. இதனால் மணிக்கொடியின் சிறப்பு நிலவென ஒளிர்ந்தது.

ஆனால், 1935ஆம் ஆண்டில் மணிக்கொடி இதழைத் தொடங்கிய சீனிவாசன், பம்பாய் சென்று 'பம்பாய் ஸ்டாண்டர்டு' என்ற ஆங்கில ஏட்டிற்கு ஆசிரியராய் அமர்ந்தார். அங்கு சென்றபின் பொருளாதாரச் சிக்கல்களால் மணிக்கொடி நின்றுபோனது. மணிக்கொடி சீனிவாசன் தன் ஏடு நின்று போவதை நினைத்து, 'தினமணி' ஏட்டில் ஞாயிறு இதழை மணிக்கொடி என்ற தலைப்பில் கொண்டுவர சதானந்தம் அவர்களிடம் கேட்டபோது அவர் இசையவில்லை. இது போன்ற வேண்டுகோளைச் சுதேசமித்திரன்

ஆசிரியர் சி.ஆர். சீனிவாசனிடம் வைக்க அவர் இசைகின்றார். ஆனால் இதையறிந்த பி.எஸ். இராமையா 'மணிக்கொடியை எதற்காக இன்னொரு பத்திரிகைக்குள் வைத்து மூடவேண்டும்.' நீங்கள் அனுமதியளித்தால் அதை நான் சிறுகதை பத்திரிகையாக எடுத்து நடத்துகிறேன் என்று கேட்டவுடன், அவரே அப்பத்திரிகையை ஏற்று நடத்த இசைகின்றார் மணிக்கொடி சீனிவாசன்.

### கதை மணிக்கொடி

"மணிக்கொடி காந்தி இணைப்புச் செய்தி ஒரு மாதத்திற்கு முன்பே அன்பர்களுக்கு அறிவிக்கப்பட்டது. பதினெட்டு மாத காலம் வாரப் பதிப்பாக வெளிவந்து கொண்டிருக்கிற மணிக்கொடி இன்று முதல், இலட்சியத்தில் தன்னுடன் ஒன்றுபட்ட காந்தியையும் இணைத்துக் கொண்டு, மாதமிருமுறை வெளிவருகிறது. புதிய கொடி உருவத்திலும், உள்ளடக்கத்திலும் புதுஜென்மம் எடுத்திருக்கிறது"[4] என்ற அறிக்கையோடு கதை மணிக்கொடியின் முதல் இதழ் மார்ச்சு 31 - 1935இல் வெளிவந்தது.

அவ்விதழில் 'முதல் அத்தியாயம்' என்று தலைப்பிட்டு "ஆசிரியர், எழுத்தாளர்கள், வாசகர்கள், கதாபாத்திரங்கள் யாவரும் தாராளமாகச் சந்தித்துப் பழகுமிடம்" என்ற பகுதி அதில் இடம் பெற்றிருந்தது.[5]

இதழாசிரியர் பெயரை, கே. சீனிவாசன் என்று வெளியிட்டிருந்தாலும் அவ்விதழிலிருந்து ஆசிரியராக மாறிய பி.எஸ். இராமையா, "தமிழில் சிறுகதைக்கென்று தனியாகப் பத்திரிகை ஏதும் இல்லை. ஆனால் இன்று தமிழ்நாட்டில் பிற நாட்டவரும் கண்டு வணங்கும்படியான உயர்ந்த கதைகள் எழுதக் கூடியவர்கள் பலர் இருக்கிறார்கள். கலாரசனையும், கதாருசியும் கலந்து, மனவெழுச்சியை உண்டாக்கக் கூடிய பல கதைகள் பிரசுரிக்கப்படாமலே இருந்து விடுகின்றன. இந்தப் பக்கத்தில் புதிது புதிதாகத் தமிழ் எழுத்தாளர்கள் அறிமுகப்படுத்தி வைக்கப்படுவார்கள்"[6] என்று எழுதி முதல் இதழின் படைப்பாளர்கள், சி.சு. செல்லப்பா, ந. பிச்சமூர்த்தி, சங்கு சுப்ரமணியம், புதுமைப்பித்தன் போன்றவர்களையும், மொழிபெயர்ப்பு செய்யப்பட்ட மூலக்கதையாசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள் பற்றியும் அறிமுகம் செய்து, அடுத்த இதழில் எழுதும் எழுத்தாளர்கள்

பற்றியும் அப்பகுதியில் அறிமுகம் செய்தார். மணிக்கொடி இதழ் வந்தவுடன் தமிழ் இலக்கிய ஆர்வலர்கள் மட்டுமின்றி ஆங்கில ஏடுகளும் பாராட்டி மகிழ்ந்தன.

> ஊக்கமுள்ள சஞ்சிகை (மாதமிருமுறை) யொன்று வெளிவந்திருக்கிறது. அது புதிதுமன்று. போன ஒரு வருஷமாகத் தமிழ் இலக்கியத்தில் ஒரு பெரும் கிளர்ச்சியைத் தோற்றுவித்துவரும் 'மணிக்கொடியே' தான் . . . தமிழில் ஒரு சிறுகதைப் பத்திரிகை தனியாக இல்லாதது நெடுநாளாக இருந்து வந்த ஒரு குறை. இப்போது 'மணிக்கொடி' அந்தக் குறையையும் பூர்ணமாக நிவிருத்தி செய்துவிட்டது. முதல் மணியில் விஷயத்திலும், தன்மையிலும் சிறந்த பல கதைகள் அடங்கி இருக்கின்றன. தமிழ் இலக்கியத்தின் மதிப்பை உயர்த்திப் பல புதிய எழுத்தாளர்களைப் பொதுஜனங்களுக்கு அறிமுகம் செய்து வைத்து 'மணிக்கொடி' செய்துள்ள சேவை என்றென்றும் மதிப்புடன் விளங்கிக் கொண்டிருக்கும்[7]

என்று 'ஸண்டே கிரானிகல்' பத்திரிகையில் ஸ்கிரிப்ளா என்பவர் எழுதினார்.

> தமிழ்ப் பாஷைக்கு ஒரு புது உயிரும் ஒரு புது மெருகும் கொடுத்த பெருமையில் ஒரு பகுதி 'மணிக்கொடிக்கு' உண்டு. தமிழ் பாஷையில் முழுதும் சிறுகதைகளடங்கிய ஒரு பத்திரிகையில்லாதது ஒரு குறை. இந்தக் குறையை மணிக்கொடி ஒருவாறு நீக்கிவிட்டது[8]

என்று ஜயபாரதி ஏடு வரவேற்றுப் பாராட்டியது.

புதுமைப்பித்தன் தன் துன்பக்கேணி தொடர்கதையைத் தொடங்கும்போது,

> "உழவையும் தொழிலையும் நிந்தனை செய்வோம்
> உண்டு களித்திருப்போருக்கு வந்தனை செய்வோம்"[9]
>
> - பாரதியல்ல ; உண்மை

என்ற முதல் பகுதி தலைப்பிட்டும்,

"ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
ஓடியக் காண்பது நங்கையர் உள்ளம்"[10]

என்று இரண்டாவது பகுதியில் தலைப்பிட்டும் தொடர்கதையில் புதுமை செய்தார். 'ஓடியக் காண்பது நங்கையர் உள்ளம்' என்ற கருத்திற்கு ஏற்ப இத் தொடர்கதையில் கதைத்தலைவி வெள்ளச்சி துன்பக் கேணியில் அல்லல்படுவதைத் தலைப்பிலே உணர்த்திய விதம் தமிழுக்கு அன்றைய கால கட்டத்தில் புதுமையானது.

இரண்டாவது கதை மணிக்கொடியில் ஸ்ரீமதி ராஜு, பி.எம். கண்ணன், வி. அநந்தகிருஷ்ணன், பி.ஏ. போன்ற புதிய எழுத்தாளர்கள் அறிமுகப்படுத்தப் பட்டார்கள். பி.எம்.கண்ணன் பின்னால் நாவலாசிரியரானார்.

இரண்டாவது இதழ் வெளிவந்தவுடன்,

> நமது தமிழ்நாட்டில் இலக்கிய வளர்ச்சிக்காகப் பாடுபடும் பத்திரிகைகள் இரண்டே இரண்டுதான். இந்தச் சேவையில் மணிக்கொடி கலைமகளைவிட ஒருபடி முன்னால் நிற்கிறது என்று கூறினால் மிகையாகாது. வங்காளி, ஹிந்தி, தெலுங்கு, குஜராத்தி, மகாராஷ்டிரம், ஆங்கிலம் ஆகிய எல்லா மொழிகளிலும் சிறுகதைக் கென்றே தனிப்பட்ட பத்திரிகைகள் இருக்கின்றன"[11]

என்று தினமணி ஏட்டில் இளங்கோவன் என்பவர் பாராட்டி எழுதினார்.

மணிக்கொடியின் மூன்றாவது இதழ் வருவதற்கு முன்னால் ஆனந்த விகடன், "மே மாதத்திலிருந்து விகடனில் ஒரு மாதம் முழுவதும் வெளிவரும் கதைகளில் சிறந்த ஒன்றுக்கு வழக்கமான சன்மானத்தைத் தவிர, விசேஷ சன்மானமாக ஐம்பது ரூபாய் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறோம்" என்ற அறிவிப்பை வெளியிட்டது.[12]

இந்த அறிவிப்பு பற்றி அன்றைய எழுத்தாளர்கள் தீவிரமாக விவாதித்திருப்பதையும் "1935ஆம் ஆண்டில் தமிழில் ஒரு சிறுகதைக்கு ஐம்பது ரூபாய் என்பது மணிக்கொடி கதைப்பதிப்பின் விளைவுதான் என்று நாங்கள் எல்லோரும் கருதினோம். அது முற்றிலும் தவறல்ல என்பதை நான் பின்னால் சில ஆண்டுகளுக்கு முன்னால் அறிய நேர்ந்தது"[13] என்பதையும் பி.எஸ். இராமையா சுட்டிக்காட்டியுள்ளார்.

மேலும் கதைகளுக்கு ஓவியங்கள் தீட்டி வெளியிடுவதில் இன்றைய ஏடுகளைப் போன்ற வண்ணப்படங்கள் இல்லாவிட்டாலும் பி.எம். கிருஷ்ணசாமி அவர்கள் இந்தியிலிருந்து மொழிபெயர்த்த பிரபல இந்தி எழுத்தாளர் சதுரசேன சாஸ்திரி அவர்களின் 'அம்பாலிகா' என்ற சிறுகதைக்கு இரண்டுபக்க அளவில் ஓவியம் சிறப்பாக வரைந்து அச்சிடப்பட்டிருந்தது. மகதச் சக்கரவர்த்தியும், அம்பாலிகா என்ற தாசிப்பெண்ணும் பகவான் புத்தரைத் தம்தம் இல்லத்திற்குப் பிட்சை ஏற்க வரவேண்டுமென்று அழைத்தனர். புத்தர் அம்பாலிகாவின் அழைப்பை ஏற்கிறார். மகிழ்ச்சியோடு திரும்பிச் செல்லும் தாசியின் ரதம் சக்கரவர்த்தியின் ரதத்தை முந்திக் கடக்கும் காட்சிதான் ஓவியம். அந்த ஓவியம் ஐந்தாவது இதழுக்கு மிகச் சிறப்பைத் தந்த ஒன்றாகும். மணிக்கொடி இதழ் பெண்கள் எழுத்தாளர்கள் ஆக வேண்டும் என்ற முனைப்போடு ஆறாவது இதழை அவ்வளவும் சகோதரிகள் எழுதிய கதைகளாக இருக்கவேண்டும் என்று அறிவித்தது. அதன்படி வை.மு. கோதைநாயகி அம்மாள், எஸ். விசாலாட்சி, சேது அம்மாள், க. பத்மாவதி, ராஜு போன்றோர் தம் படைப்புக்கள் வெளியாயின. இவ்விதழை மாவட்ட விற்பனையாளர்களுக்கு அனுப்பும்போது 'அவ்வ்வ்வ்வ்வளவும் கதைகள்' என்று ஆறு 'வ்' போட்டு மணிக்கொடி பொறுப்பாளர்கள் அனுப்பி வைத்தனர்.

ஆறாவது இதழைப் படித்த வாசுகி என்ற வாசகர், "தமிழ்நாட்டில் இந்தத் தரத்தில் கதைகள் எழுதும் பெண்கள், இத்த்த்த்த்தனை பேர்கள் இருக்கிறார்களா?"[14] என்று ஆறு 'த்' போட்டு ஆசிரியருக்கு எழுதினார்.

இதுவன்றி மணிக்கொடியின் இதழ்களைப் படித்த பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள், "மணிக்கொடியின் புதிய இலட்சியத்தைப் பாராட்டுகிறேன். கற்பனை நிறைந்த சிறுகதைகளுக் கென்றே பத்திரிகையொன்று தமிழ்நாட்டில் இல்லாதிருந்தது ஒருகுறை. இக்குறையை மணிக்கொடி நிச்சயமாய் நிவர்த்தி செய்யும் என்று நினைக்கிறேன். இதைச் செய்வதற்குப் போதிய சக்தி மணிக்கொடியிடம் உண்டு என்பதற்குத் தாங்கள் அனுப்பியுள்ள இரண்டு இதழ்களும்'' என்று மணிக்கொடியை மிகுந்த உற்சாகப்படுத்தினார். தொடர்ந்து வந்த கதை மணிக்கொடி இதழில்

கு.ப.ரா.வின் காதலே சாதல், பி.எம். கண்ணனின் மறுஜன்மம், புதுமைப்பித்தனின் ஞானக்குகை, சிற்பியின் நகரம், பி.எஸ். இராமையாவின் எதிர்க்கட்சி, பிச்சமூர்த்தியின் தாய் போன்ற சிறுகதைகள் வெளிவந்தன. இந்தக் கதைகளை என்றும் நிலைத்திருக்கும் சிரஞ்சீவிக் கதைகள் என, முதல் அத்தியாயம் ஆசிரியர் பகுதியில் பி.எஸ். இராமையா பாராட்டி எழுதினார்.

> ஆசைகள் உந்த அழிவு அவனைக் கைவிட. . . . மூலகாரணங்களாலும் நியதிகளாலும், எற்றுண்டு, ஜடத்திற்கும் அதற்கு வேறான பொருளுக்கும் உண்டான இடைவெளியில் அவன் அலைந்து திரிந்தான்; ஆசை அவியவில்லையாதலால் ஆராய்ச்சி அல்லலில் முடிகிறது. செத்தால் போதும் என்று துடிக்கிறான் அவன். சூட்சம உருவத்தைப் பெற்றுவிட்டான். அவன் அன்று பூதவுடலை நீங்கி வெளிப்பட்டதும் இவ்வுலகத்தைப் பாதுகாக்கும் ஏழு சஞ்சிகள் போல், உள்ளிருக்கும் வஸ்துவின் விடுதலைக்கும் தடையாக ஏழு இருப்பதையும் உணர்ந்தான். வாழ்வுமற்றுச் சாவுமற்று உலகத்தைப் பதனமாகப் பாதுகாக்க . . . . லோகங்களிலே அலைந்து திரிந்தான். இறுதியில் பூலோகத்தில் குகையொன்றில் பலிபீடத்தில் வந்து விழுந்தான்! அவனே பிரம்மராக்ஷஸ்![16]

புதுமைப்பித்தனின் இக்கதை பற்றி மணிக்கொடி இதழில் முதல் அத்தியாயத்தில், "இன்று நம்மிடையே உள்ள எழுத்தாளர்களில் புதுமைப்பித்தன் ரொம்ப உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பவர் என்றால் வீண் புகழாகாது. அவருடைய பிரம்மராட்சஸ், பிராங்க் எயின்ஸ்டீன் என்ற ஆங்கிலக் கதையை விடச் சிறந்தது. அதன் கருத்தழகைப் பற்றி ஒரு தனி வியாக்யானம் எழுதவேண்டும்"[17] என்று மணிக்கொடி ஆசிரியர் பி.எஸ். இராமையா எழுதினார்.

தமிழில் சிறுகதை என்றால் உடனே நினைவுக்கு வருபவர் புதுமைப்பித்தன்தான். இவரை இனங்கண்டு இவருடைய ஆரம்பகால எழுத்துக்களை வெளியிட்டது (துன்பக்கேணி, ஞானக்குகை) கதை மணிக்கொடி என்பது சுட்டத்தக்கது.

இவர் மட்டுமின்றி 'தமிழ்ச் சிறுகதையின் திருமூலர்' என்ற புதுமைப்பித்தன் அவர்களாலே புகழப்பட்ட மௌனியின் முதல் சிறுகதையை வெளியிட்டு உற்சாகப்படுத்தியது மணிக்கொடி இதழே. சுப்பிரமணியன் என்ற இயற்பெயர் கொண்ட மணியின் 'ஏன்' என்ற சிறுகதையை 'மௌனி' என்ற புனைபெயரில் வெளியிட்டு, "இவர் முதல்முதலாக எழுதிய கதை. இவ்வளவு ரசனை நிறைந்த ஒருவர் இதுவரை ஏன் எழுதாமலிருந்தார்? என்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. சம்பாஷணைகள், மனோநிலை வர்ணனைகள் எதுவுமின்றி வெறும் வெளித்தோற்றங்களையே விவரித்திருக்கிறார். அதனூடே எவ்வளவு சாதுர்யமாகப் பாத்திரங்களின் உணர்ச்சிகளைப் படம் பிடித்துக்காட்டி விடுகிறார்"[18] என்று முதல் அத்தியாயப் பகுதியில் எழுதி மௌனியின் எழுத்தாற்றலைத் தமிழ் உலகிற்குக் காட்டியது மணிக்கொடிதான்.

இலக்கிய விமர்சகர் க.நா.சு.வின் 'ரங்கம்' என்ற முதல் கதையை வெளியிட்டதும் மணிக்கொடிதான். 'தேனீ' இதழ் ஆசிரியர் எம்.வி. வெங்கட்ராம் அவர்களின் 'சிட்டுக்குருவி' என்ற சிறுகதையும் மணிக்கொடியில் வெளியானது. "இந்தத் தேர்ந்த எழுத்தாளர்களின் முதல் சிறுகதையே உலகத் தரத்திற்கு ஒப்பிடக் கூடியதாக இருந்தது" என்று 'என் இலக்கிய நண்பர்கள்' என்ற நூலில் எம்.வி. வெங்கட்ராம் குறிப்பிட்டிருப்பதும் எண்ணத்தக்கது.

குபரா., கி.(இ) ராமச்சந்திரன், சி.சு. செல்லப்பா, பி.எஸ். சங்கரன், தி.ஜ.ர., பி.எம். கண்ணன், பெ.கோ. சுந்தரராஜன், ஏ.என். சிவராமன், எம்.என். சுப்பிரமணியன், ந. சிதம்பரசுப்ரமணியன், வெ. சந்தானம் போன்ற பல எழுத்தாளர்களின் கதைகளை வெளியிட்டும் 'சிறுகதை - என் அபிப்பிராயம்' என்ற தலைப்பில் சிறுகதை பற்றிய கட்டுரைகளை வெளியிட்டும் 'கதை மணிக்கொடி' பணியாற்றியது. மணிக்கொடியின் பத்தாவது இதழுக்கு ஒரு விமர்சனப் போட்டியை அறிவித்து வாசகர்களுடைய திறனாய்வுத் திறனை வளர்த்தது. கதை மணிக்கொடியைப் பொறுத்தவரை தமிழ்ச் சிறுகதையை வளர்த்தெடுத்து, தன் இலட்சியத்தைச் சிறப்பாக நிறைவேற்றியது. பொருளாதாரச் சிக்கல்களில் தவித்த போதும் எப்போதும் தன் இலட்சியத்தினின்று வழுவாமல் செயல்பட்டது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

## மொழிபெயர்ப்பும் தழுவலும்

மணிக்கொடி இரண்டாவது இதழ், முதல் அத்தியாயப் பகுதியில் ஆசிரியர் பி.எஸ். இராமையா, "தமிழில் நவீன கால இலக்கியம் இன்னும் பிறக்கவில்லை. அதன் ஆரம்பகால அறிகுறிகளையே இப்போது நாம் காணமுடிகிறது. இந்தப் பருவத்தில் இதர பாஷைகளிலிருந்து இலக்கியக் கிரந்தங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்படுவதும் ஒரு முக்கியமான அம்சம். அந்த வேலை இப்போது நடந்து வருகிறது"[19] என்று குறிப்பிட்டதைப் போலவே, ரிப்வான் விங்கிள், கால்ஸ்வொர்த்தியின் 'அந்திக்கரையில்' (கலாரசிகன்), ஜப்பானிய கவிஞர் சிக்குச்சி குவான் எழுதிய 'தந்தை திரும்புகிறார்', 'அற்புதம்' போன்ற பல மொழியெர்ப்புக் கதைகளும், வ.வே.சு. ஐயர் மொழிபெயர்த்த தாகூரின் 'காபூலிவாலா', முன்னாள் குடியரசுத் தலைவர் ஜாகீர் உசேன் எழுதிய 'அப்புகனின் ஆடு', வி.ச. காண்டேகரின் 'வாழ்க்கைக்கலை' கதைகளும் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன. பி.எம். கிருஷ்ணசாமி இந்திக் கதைகள் பலவற்றைத் தழுவிப் பல கதைகளைத் தொடர்ந்து எழுதிவந்தார். மேலும் கதை மணிக்கொடியில் 'யாத்ரா மார்க்கம்' என்ற பகுதியில் மொழிபெயர்ப்பும் தழுவலும் பற்றி ஒரு விவாதம் எழுந்தபோது க.நா. சுப்ரமணியம் அவர்கள், "மொழி பெயர்ப்பு என்றால் ஒரு அன்னிய நாட்டுக் கதையை, கட்டுரையை நம் தாய்மொழியில் சாரம் கெடாமல் எடுத்துத் தருதல்; தழுவல் என்றால் ஒரு கதையை நம் தாய்மொழி ஆசிரியன் தன் மனத்தில் வாங்கி, அதையே தன் கலை மூலம், தன் கற்பனை சக்தி மூலம், மறுபடியும் சிருஷ்டித்தல்; ஒருபுது சிருஷ்டி என்ற அழுத்தமான விளக்கத்தை தந்தார்.[19]

1.5.38 மணிக்கொடி இதழில் உருதுகவி இக்பால் பற்றிப் புகைப்படங்களோடு கூடிய ஒரு கட்டுரையும் அவர் எழுதிய 'விளக்கும் விட்டிலும்' என்ற கவிதை மொழிபெயர்ப்பை மணிக்கொடி வெளியிட்டது.

> "விளக்கே! விட்டில் ஏன் உன்னைக் காதலிக்கிறது ஓய்வில்லாத தன் வாழ்வை ஏன் அர்ப்பணம் செய்கிறது. உன்னுடைய மென்மை இயல்புகள், சூரியனைத் தொடர்ந்தோடும் கிரகம் போல் அதை நிலையற்று தாக்குகின்றது. நீ அதற்குப் புகட்டிய பிரேம மந்திரங்கள் யாவை? மரணத்தில் அது சாந்தியடைகிறது.

ஒளியில் அதற்கு என்ன நித்திய வாழ்விருக்கிறது உன் அடியில் வீழ வேண்டுமென்பதே அதன் பிரார்த்தனை அதன் சிறிய இதயத்திலும் காதலின் பொறிசுடர் விடுகின்றது"[20]

என்ற கவிதை வெளிவந்திருக்கிறது. இன்று வெளிவரும் 'மஞ்சரி' இதழுக்கு முன்னோடியாக, தமிழுக்குப் புதியனவற்றைத் தரவேண்டும் என்ற முயற்சியோடு அன்று மணிக்கொடி செயல்பட்டது என்பதில் ஐயமேதுமில்லை.

## ரகளைக் கவி

மணிக்கொடி ஏட்டில் கனம் நிறைந்த கதைகளாகவே இருப்பதால் சிந்தனையை அழுத்தாத 'பந்தய மைதானம்' என்ற பகுதி தொடங்கியது. அதில் 'ரகளைக்கவி' என்ற பொருள் முதல் பந்தயமாக வைக்கப்பட்டது. இப்பகுதியில் இலக்கியத்தரம் பெற்ற கவிகளைப் போலி செய்து அதே பாணியில் நையாண்டியாக எழுதப்படுவதுதான் 'ரகளைக்கவி' ஆங்கிலத்தில் 'பாரடி' என்னும் ரகத்தைச் சேர்ந்தது.

இப்பகுதிக்கு விசாகப்பட்டணத்திலிருந்து என். சுப்பிரமணியன் என்பவர் தாயுமானவரின் 'கந்துக மதக்கரியை' என்று தொடங்கும் பாடலைப் போலி செய்து அனுப்பி,

". . . . . . . . . . . . . . . . . .
ஏரியில் நீந்தலாம்; காரிலும் படுக்கலாம்
தன் நகரில் முனிசிபல் பிரதிநிதி யாகலாம்
கொண்டாடும் காப்பியை யோர் நாளை
தேடாமல் சும்மாவிருக்கின்ற திறமரிது"

என்ற இப்பாடலுக்காக முதல்பரிசு பெற்றார்.[21]

பலவான்குடி பழ. இராமசாமி பாரதியாரின் 'இரும்பைக் காய்ச்சி' என்ற பாடல் பாணியில்

"எறும்பைக் கையால் நசுக்கிடுவோம்
ஏணிப்படி தனில் ஏறிடுவோமே
கரும்பைக் கடித்துத் தின்றிடுவோமே
காகிதங்களைக் கிழித்திடுவோமே"[22]

என்று எழுதி இரண்டாம் பரிசு பெற்றார்.

மணிக்கொடியின் இப்புதிய முயற்சி மேலும் தொடர்ந்திருப்பின் இவ்வகையில் விளைச்சல் அதிகம் கிடைத்திருக்கும். கதை மணிக்கொடி இதழில் சிறுகதைகள் மட்டுமின்றி அவ்வப்போது அரசியல் கட்டுரைகள், புத்தக விமர்சனம் திரைப்பட விமர்சனங்களும் இடம்பெற்றன.

## அரசியல் கட்டுரைகள்

உலக நாடுகளின் அரசியல் மாற்றங்களையும், அம்மக்களின் விழிப்புணர்ச்சியையும் தமிழக மக்கள் தெரிந்து கொள்ளும் வகையில் பல உலக நடப்புக் கட்டுரைகள் மணிக்கொடியில் வெளியிடப்பட்டன.

1.5.1938 மணிக்கொடி இதழில் செக்கோஸ்லோவிகியா பற்றிய கட்டுரையும், ஏ.ஜி. வெங்கடாச்சாரி எழுதிய 'ஸ்பெயின் என்னவாகும்?' என்ற கட்டுரையும் வெளியாயின.

தெரிந்தும் தெரியாததும் இலக்கிய வினாவிடை பகுதியை நாடோடி இதழ்தோறும் தொகுத்துக் கொடுத்தார். நிழலும் அதன் கதையும் என்ற தலைப்பில் திரைப்பட விமர்சனங்கள் இடம்பெற்றன. 1.1.38 நாள் திரையில் மூன்று தமிழ்க் கவிஞர்கள் என்ற தலைப்பில் அப்போது வெளிவந்த சுந்தரமூர்த்தி நாயனார், அருணகிரிநாதர், அம்பிகாபதி என்ற மூன்று திரைப்பட விமர்சனங்களை ஜலந்தவன் என்பவர் செய்திருந்தார். திரைப்படக் காட்சிகள் இடம்பெற்ற பல புகைப்படங்கள் மணிக்கொடி இதழ்களில் இடம் பெற்றன. இப்படி கதை மணிக்கொடி வாசகர்களைப் பல்வேறு வகைகளில் கவர முயற்சி செய்தது.

மணிக்கொடி இதழில் 'யாத்ரா மார்க்கம்' என்ற பகுதி வெளிவந்து கொண்டிருந்தது. அதில் வெளிவந்துள்ள ஒரு செய்தி அனைவரையும் அதிர்ச்சிக்குள்ளாக்குகின்ற ஒன்றாகும். ஏப்ரல் 25, 1937 - மணிக்கொடி இதழில் 'பாதசாரி என்பவர் எழுதிய கட்டுரைப் பகுதியில், "சென்ற மாதத்தில் நடந்த பாரத ஸாஹித்ய பரிஷத்தில் ரொம்ப அதிகமாக அடிபட்ட வார்த்தை 'நாகரி ஸ்கிரிப்ட்' தமிழில் ஸ்மஸ்கிருத எழுத்து என்று சொல்லலாம். அதாவது நமது தேசத்திலுள்ள எல்லா பாஷைகளுக்கும் ஒரேமாதிரியாக ஸ்மஸ்கிருத எழுத்துக்களையே உபயோகப்படுத்த வேண்டுமென்பது இந்த யோசனை"[23] மகாத்மா காந்தியிடமிருந்து வந்தது. இதனை ஸ்ரீ காகாகலேஸ்கர் ஆதரித்துள்ளார்

என்ற கருத்தைத் தந்துவிட்டு இதைப் பற்றிய விவாதத்தில் தமிழ் இலக்கிய சபையின் அன்றைய தலைவி ஸ்ரீமதி லோகசுந்தரி ராமன்,

ஸமஸ்கிருத எழுத்துக்களையே மற்ற மாகாண பாஷைகளும் ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டுமென்று ஒரு முயற்சி நடந்து வருகிறது. அதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. ஸ்மஸ்கிருத கலப்புள்ள தென்னிந்திய பாஷைகள் சம்பந்தப்பட்ட வரையில் கூட இது சாத்தியமில்லாத வேலையாகும். அதுவும் தமிழ் விஷயத்தில் ரொம்ப சிரமமாகும். ஒரு ஜாதியின் பாஷைதான் ஆகவே நாகரிகம் எவ்வளவுக்கெவ்வளவு முன்னேறியிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு பாஷையும் வளர்ந்து விடுகிறது. அந்த வளர்ச்சியோடு அதற்கு ஒரு தனிமை, மற்ற பாஷைகளிடமிருந்து வேறுபட்ட ஒரு குண விசேஷமும் வளர்ந்து விடுகிறது. அந்தப் பாஷையின் தனி அழகு இசை நயம் ஓசை காண முடியாதது. இந்தத் தனி அழகும் ஓசை இனிமையுடன் ஒட்டியே இருக்கிறது, அந்த பாஷையின் எழுத்து உருவமும். ஆகவே இலக்கியச் செல்வத்திலே மற்றெந்தப் பாஷைக்கும் குறைச்சலில்லாத பூர்ணத்துவம் அடைந்து விட்ட ஒரு பாஷையின் எழுத்துருவத்தைத் திடீரென்று ஒருநாள் காலையில் மாற்றி விடுவதென்பது சுலபமாக நடக்கக்கூடிய காரியமில்லை.

தமிழைப் பற்றின வரையில்தான் நான் பேசுகிறேன். மற்றவைகளைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது. தமிழிலுள்ள பிரத்யேகமான சொல்நயங்களை மற்ற பாஷைகள் எதிலும் கொண்டுவந்துவிட முடியும் என்று நான் நினைக்கவில்லை. இவ்விலக்கியச் சபையில் ஸ்ரீராம கோடீஸ்வரராவ் கூறிய வார்த்தைகள் மட்டும் சொல்லிவிட்டு நிறுத்தி விடுகிறேன். ஒரு ஜாதியினருக்குத் தாய் பாஷை எப்படியோ அப்படியேதான் எழுத்தும். இரண்டையும் பிரிப்பது என்பது சாத்தியமாகாது.[24]

மணிக்கொடி சிறுகதை வளர்ச்சிக்கு மட்டுமல்ல தமிழ்மொழியை மிகப்பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றியுள்ளது

என்பது வியக்கத்தக்க உண்மையாகும். ஈண்டு சுட்டப்பட்டுள்ள ஸ்ரீமதி லோகசுந்தரி ராமனின் கருத்து யாராலும் மறுக்க முடியாத ஒன்றாகும். ஒருவேளை தமிழ் எழுத்துக்கள் மாற்றப் பெற்றிருப்பின் தமிழ்நிலை பற்றி மிகப் பெரிய அதிர்ச்சியைத் தரக்கூடியதாய் அமைந்திருக்கும். புரட்சிக் கவிஞன் பாரதிதாசன் பாடல்களை வெளியிட்ட மணிக்கொடி புரட்சிக்கவிஞன் வழிநின்று இப்படி வாதாடியது வியப்பிற்குரியதல்ல.

கதை மணிக்கொடி 1935 ஆண்டு முதல் 1938 வரை சிறுகதையின் வளர்ச்சிக்குத் தந்த பங்களிப்பு ஆசிரியர் பி.எஸ். இராமையா கூறியது போல "மணிக்கொடி ஒரு பத்திரிகை அல்ல, ஓர் இயக்கம். இந்த இயக்கம் மணிக்கொடி என்ற பெயரில் தொடங்கி சூறாவளி, சந்திரோதயம், கலாமோகினி, கிராம ஊழியன், தேனீ, சரஸ்வதி என்ற பல பெயர்களில் செயல்பட்டு, இன்று பற்பல சிறு ஏடுகளின் வாயிலாக இந்த இயக்கம் நீடிக்கிறது. இந்த இயக்கத்தின் வாழ்வோடுதான் தமிழ் மறுமலர்ச்சி இலக்கியம் இணைந்துள்ளது"[25] என்ற கருத்து ஈண்டு மனங்கொளத்தக்கது.

## முடிவுகள்

1. அன்னிய ஆட்சியில் ஆங்கிலமே ஓங்கி இருந்த காலத்தில் தமிழ்ச் சிறுகதையை முன்னெடுத்துச் சென்று, படைப்பாற்றல் மிக்க எழுத்தாளர்களை உருவாக்கியதில் மணிக்கொடியின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

2. நவீனத் தமிழ் இலக்கிய ஏடுகளுக்கு எடுத்துக்காட்டாய்த் திகழும் இதழாக மணிக்கொடி திகழ்ந்தது.

3. 'கனமான' கருத்தாழமிக்க கதைகளையும் மொழிபெயர்ப்பு, தழுவல் கதைகளையும் வெளியிட்டு, தரமிக்க வாசகர்களை உருவாக்க மணிக்கொடி மிகக் கவனத்துடன் செயல்பட்டது.

4. ஆங்கிலம், ஜப்பான், இந்தி, தெலுங்கு போன்ற பல மொழி எழுத்தாளர்களின் கதைகளை மொழிபெயர்த்தும், தழுவியும் எழுதுகின்ற எழுத்தாளர்களின் படைப்புக்களை இதழ் தவறாமல் வெளியிட்டு உற்சாகப்படுத்திய காரணத்தால் தமிழ் மட்டும் அறிந்த வாசகர்கள் பிற மொழி இலக்கியங்கள் பற்றி அறிய முடிந்தது. உலகத்தரமிக்க கதைகளைப் படைக்கவும் ஒப்பிடவும் தமிழ் உலகம் முயன்றது.

## குறிப்புகள்

1. இராமையா, பி.எஸ்., மணிக்கொடி காலம், ப. 8
2. மேலது, ப. 39
3. மேலது
4. சீனிவாசன், கே., மணிக்கொடி - முதல் இதழ், ப. 3
5. மேலது
6. மேலது
7. மேலது
8. இராமையா, பி.எஸ்., மணிக்கொடி காலம், ப. 188
9. மேலது, ப. 181
10. மேலது, ப. 188
11. மேலது
12. மேலது, ப. 194
13. மேலது, ப. 196
14. மேலது, ப. 220
15. மேலது
16. முருகரத்தினம், தி., புதுமைப்பித்தன் சிறுகதைக்கலை, ப. 16
17. இராமையா, பி.எஸ்., மணிக்கொடி காலம், ப. 264
18. மேலது, ப. 260
19. சீனிவாசன், கே., மணிக்கொடி இதழ், 1-5-1938, ப. 35
20. மேலது, ப. 40
21. இராமையா, பி.எஸ்., மணிக்கொடி காலம், ப. 262
22. மேலது
23. சீனிவாசன், மணிக்கொடி இதழ், 25-1-1937, ப. 35
24. மேலது, ப. 36
25. வெங்கட்ராம், எம்.பி., என் இலக்கிய நண்பர்கள், ப. 128

# இதழாளர் சுப்பிரமணிய சிவம்

பெ.சு. மணி

இந்திய தேசிய விடுதலைப் போராட்டத்தில் பாரதியார், வ.உ.சி., சுப்பிரமணிய சிவம் மூவரும் திரிசூலத்தின் கூரிய மும்முனைகளாகத் திகழ்ந்ததை வரலாறு விரித்துரைக்கும். சிவம் 41 ஆண்டுகளே வாழ்ந்தவர். அதில், பத்தொன்பது ஆண்டுகள் பொது வாழ்க்கைக்குரியன. இதில், ஒன்பதரை ஆண்டுகள் சிறைவாழ்க்கையில் கழிந்தன. எஞ்சிய ஒன்பதரை ஆண்டுகளில் சிறைவாசம் தந்த கொடிய தொழுநோயுடன் ஓயாத அரசியல் பிரசாரச் சொற்பொழிவுகள், கிளர்ச்சிகளின் ஊடே சுப்பிரமணிய சிவம் இதழியல் பணியையும் ஆற்றியுள்ளார்.

## இதழியல்துறை நுழைவு

'வீரமுரசாக' விடுதலைப் போரில் முழங்கிய சிவம், முதல் சிறைவாசம் (1908-1912) முடிந்த பிறகு, வெளியில் வந்ததும் இதழியல் துறையில் நுழைந்தார். இது குறித்து, சிவாவே, 'எனது பிரார்த்தனை' எனும் தமது பாடலில் பின்வருமாறு கூறியுள்ளார்.

வெளியில் வந்தேன் - விடுதலை யடைந்து
களியில் மனிதரைக் - கண்ணால் கண்டேன்

வறுமை, வியாதி, மரணம், பஞ்சம்
சிறுமை யாவற்றால் - சீர் அழிகின்ற

தமிழ் மக்களைத் தட்டி யெழுப்பி
அமிழ் தாம்ஞான - ஆனந்த மூட்டி

வீரம், ஆண்மை - வெற்றி பெருமை
தீரம் முதலாம் - தேசு புகுத்திச்

சிறந்தோ ரென்றே - சீரியர் செப்ப
அறந்தான் செய்ய - அன்புடன் முயன்று

பத்திரிகை புத்தகம் - பல வழியாக
உரிமை வேண்டி - உரிமை வேண்டி

இரவும் பகலும் - எழுதி யெழுதி
வரவும் என்கை - வலிக்குது ஐயோ!

அவர் கைவலிக்க இரவும் பகலும் எழுதியதில் இதழியல் துறைக்கான எழுத்துப் பணியும் ஒன்றாகும் என்பதை மேலேயுள்ள பாடல் வரிகளில் தெளிவாக அறிகின்றோம்.

தமது முதல் சிறைவாசத்தில் சுப்பிரமணிய சிவம் சிறை மீண்ட நாள் 12.11.1912 ஆகும். அடுத்த மூன்றாம் நாளிலேயே 15.11.1912 'ஞானபாநு' எனும் பெயரில் மாத இதழ் தொடங்கச் சென்னை மாநில ஆளுநருக்கு ஒரு விண்ணப்பத்தை அனுப்பினார்.

இதழ் தொடங்குவதற்கான அரசு நிபந்தனைகளில் ஒன்றான 'பொறுப்புத் தொகை'யைக் கட்ட முடியாத நிலையில் வறுமையின் பிடிப்பில் சிக்குண்டு இருந்த சிவம், விதிவிலக்கு வேண்டினார். ஆளுநரின் நிருவாக உறுப்பினர் ஒருவர் இவரின் விதிவிலக்கு வேண்டுகோளை ஏற்கலாம் எனப் பரிந்துரை செய்வதற்கான காரணங்களுள் ஒன்றாகப் பின்வரும் செய்தியைக் குறிப்பிட்டார்:

> நாம் அவருக்கு உதவ மறுத்தால், நீதித்துறை அவரைப் பொறுப்புத்தொகையைக் கட்டச் சொல்லும். இதனால் பாண்டிச்சேரியில் உள்ள குழுவினரோடு சேர்ந்து கொள்ள விரட்டப் படுவார். அங்குள்ள நமக்கு எதிரான பத்திரிகைகள், இவருடைய இலக்கிய ஈடுபாட்டைப் பயன்படுத்திக் கொள்ளும்.

மேலே குறிப்பிடப்பெற்ற 'பாண்டிச்சேரி குழு' சென்னையில் இருந்து பாண்டிச்சேரியில் புகலிடம் பெற்று இதழ்கள் வாயிலாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திற்கு எதிராகப் பிரசாரம் செய்து வந்த குழுவினர் ஆவார்கள். பாரதியார், வ.வே.சு. ஐயர், நீலகண்ட பிரம்மசாரி, மண்டையம் சீனிவாசாச்சாரியார், நாகசாமி முதலானோர் 'இந்தியா', 'சூரியதோயம்', 'கர்மயோகி', 'தர்மம்', 'விஜயா' முதலான இதழ்கள் வாயிலாக இந்திய தேசிய விடுதலைப் போராட்டப் பிரசாரத்தைப் பிரிட்டிஷ் இந்தியாவில் - தமிழ்நாட்டில் - பரப்பி வந்தனர். இந்தப் புரட்சிகரக் குழுவில் சிவாவும் பிரிட்டிஷ் அரசால் தள்ளப்பட்டு விடக்கூடாது என்று அந்த ஆளுநரின் நிருவாக உறுப்பினர் கருதினார்.

சிவாவின் விதிவிலக்குக் கோரிக்கையை ஆளுநர் ஏற்கவில்லை. இதைப் பற்றிய முடிவைச் சம்பந்தப்பட்ட மாஜிஸ்ட்ரேட்தான் எடுக்க வேண்டும்; அரசாங்கம் தலையிட விரும்பவில்லையென்பதும் சிவாவிடம் அறிவிக்கப்பட்டது. இந்தச் சூழலில் சிவம், 'ஞானபாநு' இதழைத் தொடங்கினார்.

## ஞானபாநு

ஞானபாநு என்ற பெயரில் இதழைச் சிவம் தொடங்கியதற்கு முன்பே இதே பெயரில் இரு இதழ்கள் வெளிவந்துள்ளன. முதல் இதழ் 1871இல் நாற்பத்தெட்டு பக்கங்களுடன், இந்து மதப்பிரசாரத்திற்காகப் பி. வெங்கட்ராவ் என்பவரை ஆசிரியராகக் கொண்டு மாத இதழாகச் சென்னையில் இருந்து வெளிவந்தது. இரண்டாவது இதழ் 1894இல் தமிழறிஞர் கா. ஆலாலசுந்தரம் பிள்ளை என்பவரை ஆசிரியராகக் கொண்டு பதினாறு பக்கங்களில் இந்து சமயப் பிரசார மாத இதழாகச் சென்னையில் இருந்து வெளிவந்தது.

சிவாவின் ஞானபாநு சென்னை மயிலாப்பூரில் இருந்து மாத இதழாக எப்ரல் 1913 முதல் வெளிவரத் தொடங்கியது. இதுவும் இந்து சமய ஆன்மிகப் பிரசாரத்திற்கு முதலிடம் அளித்து வந்தது. தீவிர அரசியல்வாதியான சிவாவின் மற்றொரு பக்கமான ஆன்மிகவாதியை அழுத்தமாக அடையாளங்காட்டியது, ஞானபாநு.

ஆன்மிகத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியலை ஏற்றுக் கொண்ட சிவம், 'நீசபாரதம்' போய் 'மகாபாரதம்' வர ஆன்மிகத்தை ஞானபாநுவில் வலியுறுத்தினார். அதைப் பின்வரும் வரிகளில் அறிகின்றோம்.

> ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளுடைய அற்புதமான வசனங்களும், ஸ்ரீபகவத் கீதா அனுபவமுமே பாரத பூமியைத் தற்காலத்தில் தாழ்ந்த நிலையிலிருந்து உத்கிருஷ்ட நிலைமைக்குக் கொண்டு வருவதற்கு உபயோகமானவை யென்று உறுதியாக நம்பி, அவற்றை நாம் நமது 'பாநு'வில் வற்புறுத்தி வருகின்றோம் (மார்ச்சு, 1914).

ஞானபாநுவின் நோக்கங்கள் குறித்துப் பின்வரும் கருத்துகள் அவ்விதழில் வெளியிடப்பட்டுள்ளன.

1. "ஸ்ருதி, ஸ்மிருதியாகிய இவ்விரண்டிலும் போதிக்கப் பட்டுள்ள விஷயங்களை இயன்ற மட்டும் எடுத்துக் கூறி, அவை எளியார், வலியார் எல்லோருக்கும் பயன்படும்படி செய்வது நமது பத்திரிகையின் வேலை" (ஏப்ரல் 1913).

2. "அவருடைய (சிவா) 'ஜீவ ஸேவையே, சிவ ஸேவை' என்னும் கொள்கையை எங்கும் பரப்புவதற்கு இப்பத்திரிகை அவருக்கு ஒரு உபகரணமாக ஆரம்பிக்கப்பட்டது" (மார்ச்சு, 1914).

3. "உறங்கிக் கிடக்கும் தமிழ் ஜாதியரை அறிவாகிய சாட்டையாலடித்து எழுப்பி அவர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் உண்டுபண்ணி அவர்களை முன்னிலையிற் கொண்டுவர வேண்டுவதே இப் பத்திரிகையின் நோக்கம்" (ஜூன், 1915).

ஞானபாநுவில் சிவம் ஆன்மிகம் தொடர்பான கட்டுரைகளுடன், 'நமது பலசரக்குக் கடை', 'நிகழ்காலக் குறிப்புகள்', 'பல விஷயக் குறிப்புகள்', 'பத்திரிகை வரவு', 'புத்தக வரவு', 'புத்தக விமர்சனம்', 'யுத்தக் குறிப்புகள்', சிறுகதைகள், 'மொழி - இலக்கிய விவாதங்கள்' முதலானவற்றிற்கும் இடமளித்தார்.

ஞானபாநுவின் அளவு 21x14 செ.மீ.; பக்கங்கள் 24; உள் நாட்டு ஆண்டு சந்தா ரூ1-12-0; வெளிநாடுகளுக்கு ஆண்டு சந்தா 2-4-0; "பினாங்கு, சிங்கப்பூர், தென்னாப்பிரிக்கா முதலிய அந்நிய நாடுகளிலும் ஏராளமாகச் சந்தாதாரர்கள் இருக்கிறார்கள்" எனும் ஒரு விளம்பரக் குறிப்பு இதழில் வெளியிடப்பட்டது.

அரசின் 'நேடிவ் நியூஸ் பேப்பர் ரிப்போர்ட்' எனும் அறிக்கையில் ஞானபாநு மாதந்தோறும் 350 படிகள் அச்சிடப் பெற்றது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. "மத்திய வகுப்பு ஜனங்களிற் பலரும் நமக்குச் சந்தாதாரர்களாயினர்" என்னும் குறிப்பு மார்ச்சு 1915 இதழில் இடம்பெற்றுள்ளது.

## 'பத்ராதிபர்கள் கடமை' - சிவாவின் கருத்து

இதழாசிரியர்கள் கடமைகளைப் பற்றிச் சிவம் எழுதியுள்ள பின்வரும் சில கருத்துகளிலும் அவருடைய இதழியல் நோக்கு வெளிப்பட்டது.

1. "உண்மையும் உள்ளன்பும் இல்லாது பணங்காத்த பூதங்களைப் போலிருக்கும் தனவந்தனர்களுடைய கடின ஹிருதயத்தை முகஸ்துதியினால் நெகிழ்வுறச் செய்து அவர்களிடத்திலிருந்து ஏதேனும் சொற்பப் பணம் சம்பாதித்து அற்ப சந்தோஷமடைவதினும், பொது ஜனங்களுடைய ஸ்வதந்திரம், தேசபக்தி, மானிடவர்க்கத்தின் லட்சியம் இவற்றையெல்லாம் எடுத்து விளக்கித் தர்ம ஸேவை செய்வதே பத்ராதிபர்களின் கடமையாகும்."

2. "பத்ராதிபர்களும் தாங்கள் பொதுஜனப் பிரதிநிதிகள் என்று திட நிச்சயம் கொண்டு வானமே இடிந்து விழுந்தாலும் அலட்சியம் செய்து நின்று, எளியோர், அநியாயங்களுக்குட்படுத்தப் பட்டோர், அறிவீனர், பலவீனர் ஆகிய இவர்களை ஆதரித்து, உலகின் நன்மையை நிலைநிறுத்தி, அரசர்களுக்கும் குடிமக்களுக்கும் அவரவர் களுடைய தர்மங்களை அடிக்கடி யெடுத்தோதி, தர்மத்தையும் சத்தியத்தையும் சாந்தத்தையும் சமாதானத்தையும் ஸ்தாபிக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்" (மார்ச்சு 1915).

ஞானபாநுவின் உரிமையாளராகவும் பதிப்பாசிரியராகவும் சிவாவிற்கு முதல் இரு ஆண்டுகளில் தமது பெயரை அச்சிடாமல், மனைவியின் பெயரை அச்சிட வேண்டியதாயிற்று. இதற்குரிய விளக்கத்தையும் சிவா, 'காலஞ்சென்ற ஸ்ரீமதி மீநாட்சியம்மாள்' என்ற தலைப்பில் 1915 ஜூன் மாத இதழில் பின்வருமாறு அளித்துள்ளார்:

> ஸ்ரீ சிவம் ராஜாங்கத்தாரால் சந்தேகிக்கப்பட்டவராதலால், பத்திரிகை நடத்துவதற்கு உத்திரவு கிடைப்பது சந்தேகம் என்று கருதி, ஸ்ரீமதி மீநாட்சியம்மாள் பேரால் பத்திரிகை நடத்துவதற்கு ராஜாங்கத்தாரிடமிருந்து அனுமதி பெறப்பட்டது. சென்ற இரண்டு வருஷ காலமாகப் பத்திரிகை இடையூறின்றி நடைபெற்று வந்தமைக்கு முக்கிய காரணம் இவ்வம்மையாரின் சூத்திரமும் தூண்டுதலுமேயாம்.

'ராஜாங்கத்தாரால் சந்தேகிக்கப்பட்டவராததால்' எனும் மேற்படி குறிப்பு, வ.உ.சி.க்கு இதழ் தொடங்க அனுமதி மறுக்கப்பட்டதை இங்கு நினைவு கூரச்செய்கின்றது.

வ.உ.சி. அவர்கள் சிறைவாசம் நீங்கி, சென்னை நகரத்தில் வாழத் தொடங்கிய பொழுது, 'பரோபகாரி' எனும் பெயரில் ஒரு

நாளிதழைத் தொடங்க அரசாங்கத்திடம் விண்ணப்பித்தார். ஆனால், "அரசியல் கிளர்ச்சியாளர், பழைய கைதி" என்று காரணங்காட்டி அவருக்கு இதழ் தொடங்க அனுமதி மறுக்கப்பட்டது.

மீநாட்சியம்மாள் மறைவிற்குப் பிறகு, ஞானபாநுவின் 'சொந்தக்காரரும் பதிப்பாசிரியரும்' சிவம் என்பதாக அறிவிக்கப்பட்டது.

ஞானபாநுவில் தமது அரசியல், இலக்கியத் தோழர்களான பாரதியார், வ.உ.சி., வ.வே.சு. ஐயர் ஆகியோர்களின் படைப்புகளை வெளியிட்டு, இதழின் இலக்கியத் தரத்தை மேலும் செழுமையுறச் செய்தார், சிவம்.

## ஞானபாநுவில் பாரதியார்

புதுச்சேரியில் பாரதியார் வாழ்ந்த காலத்தில் (1908-1918), அவருடைய கவிதைகள், கட்டுரைகள் ஞானபாநுவில் வெளிவந்தன. இவை பற்றிய விவரம் வருமாறு:

| தலைப்பு | மாதம் & ஆண்டு | பெயர் |
|---|---|---|
| ஈசாவாஸ்யோபநிஷத் | ஏப்ரல் - 1913 | ஸ்ரீமான் ஸி. சுப்பிரமணிய பாரதி |
| சின்ன சங்கரன் கதை | மே - 1913 | சாவித்திரி என்னும் நமது நிருபநேயர் |
| கேநோபநிஷத் | மே - 1913 | ஸ்ரீ.ஸி. சுப்பிரமணிய பாரதி |
| ஒளியும் இருளும் | மே - 1913 | பிரஹ்மஸ்ரீ ஸி. சுப்பிரமணிய பாரதி |
| மது | ஆகஸ்டு - 1913 | நித்திய தீரர் |
| கண்ணன் என் தாய் | அக். - 1913 | ஸ்ரீ. ஸி. சுப்பிரமணிய பாரதி |
| யோக சித்தி | அக். - 1913 | ஓர் உத்தமமான தேசாபிமானி |
| வேய்ங்குழல் | ஜனவரி - 1914 | ஸி. சுப்பிரமணிய பாரதி |
| தாயுமானவர் வாழ்த்து | பிப். - 1914 | ஸி. சுப்பிரமணிய பாரதி |
| பாப்பா பாட்டு | பிப். - 1915 | ஸி. சுப்பிரமணிய பாரதி |
| ஞானபாநு | ஏப்ரல் - 1915 | ஸி. சுப்பிரமணிய பாரதி |
| அக்திஸ்தோமம் | ஜூலை - 1915 | ஸி. சுப்பிரமணிய பாரதி |
| தமிழில் எழுத்துக்குறை | ஜூலை - 1915 | ஸி. சுப்பிரமணிய பாரதி |

'சக்தி தாஸன்' என்னும் புனைபெயரில் சுதேசமித்திரனில் எழுதி வந்த பாரதியார், ஞானபாநுவில் 'சாவித்திரி என்னும் நமது நிருபநேயர்', 'நித்தியதீரன்', ' ஓர் உத்தம தேசாபிமானி' எனும் புதிய புனைபெயர்களில் எழுதியது குறிப்பிடத்தக்கது.

பாரதி பாடல்களில் பாடபேத ஆய்விற்குப் பயன்படும் பாடல்களில் சில ஞானபாநுவில் வெளிவந்துள்ளன. பாரதி பாடல் பாடபேத ஆய்வில் ஒரு முன்னோடியாக விளங்கிய புதுமைப்பித்தன் தமது ஆய்விற்கு ஞானபாநுவில் வெளிவந்த பாரதி பாடல் வரிகள் சிலவற்றைச் சுட்டிக் காட்டியுள்ளார். பாரதி பிரசுராலயப் பதிப்பில் வந்த சில பாடல்களுக்கும், ஞானபாநுவில் வெளிவந்த சில பாடல்களுக்கும் இடையே உள்ள பாடபேதங்களை எடுத்துக்காட்டி, ஞானபாநுவில் வெளிவந்தது ஏற்கத்தக்கது என்பதைப் பின்வருமாறு குறிப்பிட்டார்:

> *நான் ஞானபாநுவில் பார்த்துக் குறிப்பிட்ட, பாடவேறுபாடுகள்தான் திருத்தப் பதிப்பு என்று நான் நினைக்க இரண்டு காரணங்கள், ஒன்று பா.பி. பிரசுரத்தில் உள்ள 13,14 செய்யுள்கள் (பூகோள சாஸ்திரம் கற்பிக்க முயலும் பகுதி அதில் கிடையாது, அதில்லாமல், ஞானபாநுவில் கண்ட மாறுபாடான பிரயோகங்கள், அர்த்த புஷ்டியுள்ளவை என்று நினைக்கிறேன் ('மணிக்கொடி' - அக்டோபர் 15, 1937).*

புதுமைப்பித்தனின் இந்தப் பாடபேத ஆய்வு விவரமாக, பெ.சு. மணியின், 'அறிஞர்கள் பார்வையில் பாரதி' (1982) எனும் நூலில் உள்ளது. இங்கு ஒரு சான்று மட்டும் வழங்கப்படுகின்றது.

சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா
செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம் - அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா

- பாரதி பிரசுராலயப் பதிப்பு

சொல்லில் இனிது தமிழ்ச் சொல்லே - அதைத்
தொழுது படித்திடடி பாப்பா

செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம் - அதைத்
தெய்வமென்று கொண்டாடு பாப்பா
- ஞானபாநு

ஞானபாநுவில் (அக். 1913) 'புத்தக வரவு' பகுதியில் பாரதியாரின் 'பாஞ்சாலி சபதம்' விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. இதில் ஒரு பகுதி வருமாறு :

> இது மிக அழகிய வர்ணனைகள் நிறைந்த ஒரு காவியம். பாரதியாரவர்களுடைய தமிழ் நடையைப் பற்றியும் செய்யுள் விவேகத்தைப் பற்றியும் தமிழ் நாட்டினரில் பெரும்பான்மையோரும் அறிவர் என நம்புகிறோம். . . பாஷாபிமானிகளும் தேசாபிமானிகளும் அவசியம் படிக்கவேண்டிய புஸ்தகம் இது.

'சின்ன சங்கரன் கதை' உட்பட அரிய பாரதியார் படைப்புகள் பலவற்றை வெளியிட்டு ஞானபாநு ஆற்றியுள்ள இலக்கியத் தொண்டு பாராட்டத்தக்கது.

### ஞானபாநுவில் வ.உ.சி.

வ.உ.சி - சிவமிடையே அரசியல் தோழமை நிலவியது போலவே இலக்கியத் தோழமையும் நிலவியது என்பதற்கு ஞானபாநு ஓர் எடுத்துக்காட்டாகும்.

ஞானபாநுவில் வெளிவந்த வ.உ.சி.யின் கட்டுரைகள் பின்வருவன.

1. மனிதனும் அறிவும் - ஏப்ரல் 1913
2. மனமும் உடம்பும் - மே 1913
3. வினையும் விதியும் - மே 1913
4. அகமும் வாழ்வும் -ஆகஸ்டு 1913
5. மனத்தின் தன்மையும் வன்மையும் - ஆகஸ்டு 1913
6. சுபாவத்தை ஏற்படுத்துதல் - அக். 1913
7. செய்தலும் அறிதலும் - அக். 1913

வ.உ.சி., தமது சிறைவாழ்க்கையில் படைத்த 'அகமே புறம்', 'மெய்யறம்' எனும் இரு நூல்களுக்கும் ஞானபாநுவில் சிவம் எழுதிய மதிப்புரைகள் சற்று விரிவானவை. செய்யுள் நடையில் இயற்றப்பட்ட 'மெய்யறம்' நூலின் 'அரசியல்' அதிகாரம் பற்றிய மதிப்புரையில் உள்ள பின்வரும் கருத்து குறிப்பிடத்தக்கது:

> அரசியல் ராஜாங்க விவகாரங்களில் மனத்தைச் செலுத்துகின்ற ஒவ்வொருவரும் பார்த்து மனனம் பண்ணத்தக்கது. நாம் பிள்ளையவர்களுடன் நெடுநாளாக நெருங்கிப் பழகியிருக்கின்றோமாயினும் அவருக்கு ராஜதருமத்தில் இவ்வளவு அறிவிருக்குமென்று நாம் நினைக்கவில்லை. 'அரசியல்' படிக்கப் படிக்க ஆனந்தத்தைத் தருகின்றது; அறிவைப் பெருக்குகின்றது. . . . 'மெய்யறம்' என்னும் ஓரடிச் சூத்திரச் செய்யுள் நூலால் அவர்களுடைய கவித்திறமை புலப்பட்டது.

ஜேம்ஸ் ஆலன் எனும் மேனாட்டறிஞரின் ஆங்கில நூலின் தமிழ் மொழியாக்க நூலான வ.உ.சியின் 'அகமே புறம்' எனும் நூலின் விமர்சனத்தில் சிவம் மொழிபெயர்ப்பின் சிறப்பைக் குறிப்பிட்டுள்ளார். "இந்நூலை இயற்றிய பிள்ளையவர்கள் உத்தம தேசாபிமானி யென்பதையும், தமிழ் பாஷையில் அதிகம் பாண்டித்ய முள்ளவரென்பதையும் இந்தியரில் அறியாதவர் எவரும் இலர்" என்றும் போற்றியுள்ளார்.

## பாரதியார் கருத்துக்கு வ.உ.சி. மறுப்பு

*1915* ஜூலை இதழில் 'தமிழில் எழுத்துக்குறை' எனும் பாரதியார் கடிதம் வெளியிடப்பட்டது. "தென்றலுடன் பிறந்த தமிழ்மொழி" என்றும், "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்" என்றெல்லாம் தமிழ் முழக்கம் செய்த பாரதியார், ஞானபாநுவில், "அந்நிய பாஷைகளிலுள்ள விசேஷ உச்சரிப்புகளுக்கு இணங்கும்படி" யான எழுத்துகள் தமிழில் இல்லை என்று கருதி "தமிழில் எழுத்துக் குறைகிறது" எனும் தமது கருத்தைத் 'தமிழில் எழுத்துக்குறை' என்ற கடிதத்தில் வெளியிட்டார். சமஸ்கிருதம் உட்பட்ட பிற இந்திய மொழிகளில் வர்க்க எழுத்துக்கள் உள்ளதுபோல் தமிழில் இல்லை எனும் கருத்தைக் குறிப்பிட்டாலும்,

"ஸம்ஸ்க்ருதச் சொற்களை ஸம்ஸ்க்ருத வழக்கப்படி நாம் உச்சரிக்க வேண்டிய அவசியம் இல்லையாதலால் நமக்கு அந்த எழுத்துக்கள் வேண்டுவதில்லையென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். சரி, நியாயமென்று வைத்துக் கொள்வோம். வெளிநாட்டு ஊர்களின் பெயர்களையும் மனிதர்களின் பெயர்களையும் நாம் சரியானபடி சொல்ல வேண்டாமா?" எனும் கேள்வியை எழுப்பினால், "இந்தக் குறையை நீக்கும் பொருட்டாக மிகவும் சுலபமாக ஐந்து நிமிஷங்களில் யாரும் கற்றுக் கொள்ளக் கூடிய சில குறிகள் தயார் செய்து வைத்திருக்கிறேன்'' என்றும் பாரதியார் அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டார். ஆனால் அந்தக் குறிகள் எவையென்பதைப் பிறகு தெரிவிப்பதாகவும் கூறினார்.

பாரதியார் தமது கடிதத்தில் கூறியதை வ.உ.சி. வன்மையாக மறுத்தது, ஞானபாநுவில் செப்டம்பரில் வெளிவந்தது. அதன் சில பகுதிகள் வருமாறு:

> தெய்வ பாஷையென்றும், பூரண பாஷையென்றும் பல பாஷைகளுக்கும் தாய் பாஷையென்றும் சொல்லப்படும் சம்ஸ்கிருத பாஷை எழுத்துக்களோடு, . . . ழ, ற, ன, என்னும் எழுத்துக்களையாவது அவற்றின் ஒலிகளைக் குறிக்கும் குறிகளையாவது சேர்ப்பதற்கு நண்பரவர்களும் அரவிந்தரவர்களும் முயற்சி செய்து வெற்றி பெறுவார்களாயின், அவர்கள் நமது தமிழ் மக்களுக்கு ஒப்பற்ற வழிகாட்டிகளாவார்கள். பின்னர் நமது தமிழ் மக்கள் அவர்களைப் பின்பற்றத் துணிவார்கள். . .
>
> இதுகாறும் தமிழ்ப் பாஷை எழுத்துக்களில் குறையுளது என்று கூறியவர்களில் எவரும் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பூரணமாகக் கற்றுணர்ந்தவராவது சம்ஸ்கிருதம் பந்தமில்லாதவராகாவது சம்ஸ்கிருத பாஷையில் மேற்சொல்லிய திருத்தங்களையோ வேறு திருத்தங்களையோ செய்ய வேண்டுமென்று கூறியவராகவாவது காணப்படவில்லை யென்றும் அவர்கள் நம் தமிழ்ப் பாஷையைத் திருத்த முயல்கிறார்களோ, வருத்த முற்படுகிறார்களோ என்றும் நம் தமிழ் மக்களில் சிலர் ஐயமுறுகின்றனர்.

மேற்காணும் மறுப்புரையில் வ.உ.சி., அரவிந்தர் பெயரையும் குறிப்பிட்டதற்குக் காரணமுண்டு. பாரதியார் தமது கடிதத்தில், அரவிந்தர் BIRENDRANATH DUTTA GUPTA எனும் சொல் தமிழில் சரியாக உச்சரிக்கப்படாததைச் "சொல்லிச் சொல்லிச் சிரித்தாராம்" என்று கூறியுள்ளார். இந்தச் சிரிப்புடன், பாரதியார் கருத்தும் வ.உ.சி.க்கு இயல்பாகவே சீற்றத்தைத் தூண்டிவிட்டது. சம்ஸ்கிருத மொழியிலும் எழுத்துக்குறை உண்டு; அக்குறையெல்லாம் போக்க முயற்சியெடுப்பார்களா? என்றும் 'குத்தலாக'க் கேட்டுள்ளார், வ.உ.சி.

வ.உ.சிக்குத் தமது கருத்தை விளக்க, அடுத்த மாத ஞானபாநு இதழிலேயே (அக். 1915) பாரதியார் வ.உ.சி. பெயரைக் குறிப்பிடாமல் பின்வருமாறு பதிலளித்தார்:

> ப்ரெஞ்ச், இங்கிலிஷ் முதலிய ஐரோப்பிய பாஷைகளிலும் ஹிந்தி முதலிய நமது நாட்டுப் பாஷைகளிலும் உயிருள்ள பாஷைகளிலே வளர்வனவெல்லாவற்றிலும் - உச்சரிப்புத் திருத்தத்தைக் கருதிப் பழைய எழுத்துக்களில் சில அடையாளங்கள் சேர்த்துச் சௌகர்யப்படுத்திக் கொள்ளுகிறார்கள். இதனால் எழுத்துவடிவத்தில் யாருக்கும் சந்தேகம் நேரிடாது. இந்த எளிய வழியை அனுசரித்து நமது தாய்மொழி விசாலமடைய வேண்டுமென்பதே என்னுடைய விருப்பம்.

சுதேசமித்திரனில் வ.உ.சி., 29-10-1915இல் எழுதிய கட்டுரையின் பின்வரும் வரிகள், 'தமிழில் எழுத்துக்குறை' தொடர்பாக எழுந்த விவாதத்தை முடிவிற்குக் கொண்டு வந்தன. அதன்பிறகு பாரதியார் அறிவித்த அடையாளக் குறிகளும் வெளிவரவில்லை.

> பல காரியங்களின் நிமித்தமாகப் பல பாஷையினரோடு பலவகைச் சம்பந்தங்களை வைத்துக் கொண்டிருக்கிற யானும், நமது நண்பர் ஸ்ரீ. சி. சுப்பிரமணிய பாரதி அந்நிய பாஷைச் சொற்களைத் தமிழில் எழுதுவதற்குக் கண்டுள்ள புதிய முறைகளின் வெளிவரவை எதிர்நோக்கியிருக்கிறேன்.

மிக முக்கியமான மேற்காணும் விவாதம் குறித்து ஞானபாநு ஆசிரியர் சிவம், கருத்து எதையும் எழுதவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இதழாசிரியர் என்ற முறையில் விவாதத்தை முடித்துவைக்கச்

சிவம் முற்பட்டிருந்தால் அவர் கருத்தும் ஆய்வாளர்களுக்குக் கிடைத்திருக்கும்.

## ஞானபாநுவில் வ.வே.சு. ஐயர்

புதுச்சேரியில் அரவிந்தர், பாரதியாரோடு வாழ்ந்த காலத்தில் வ.வே.சு. ஐயர் ஞானபாநுவில் 'அகஸ்தீன் எனும் மகாத்மாவின் விண்ணப்பம்' எனும் தலைப்பில் 1914 ஜனவரி இதழில் எழுதத்தொடங்கியது, 1914 அக்டோபர் இதழில் நிறைவெய்தியது. மொழிபெயர்ப்பு இலக்கியத்தில் ஞானபாநு வெளிப்படுத்திய ஆர்வத்திற்கு வ.வே.சு. ஐயர் கட்டுரை ஒரு சான்றாகும்.

புனித அகஸ்தீன் (கி.பி.354 - கி.பி.430) இத்தாலி நாட்டைச் சார்ந்த கிறித்துவ சமய ஞானியாவார். இவருடைய CONFESSION எனும் நூல் கிறித்துவ சமய ஞான மலராக மணம் வீசுவது.

இலத்தீன் மொழியில் எழுதப்பெற்ற இந்நூல் பதின்மூன்று புத்தகங்களைக் (Books) கொண்டது. முதல் புத்தகத்தின் ஒன்பது அத்தியாயங்களை மட்டும் ஆங்கில மொழிபெயர்ப்பில் இருந்து தமிழாக்கம் செய்தார் வ.வே.சு. ஐயர். மேனாட்டு இலக்கிய வகையில் CONFESSIONS என்பது புதிய இலக்கிய வடிவமாகத் தோன்றியது. CONFESSIONS என்பதைத் தமிழில் 'விண்ணப்பம்' என்று மொழிபெயர்த்தவர் வ.வே.சு. ஐயர். தொடர்கட்டுரையைத் தொடங்கியதற்கு முன்பு மேற்படி நூலின் சிறப்பைப் பற்றிப் பின்வருமாறு பாராட்டினார், வ.வே.சு.ஐயர்:

> ஈசுவர சந்நிதானத்தில் தன்னுடைய சரித்திரத்தைச் சொல்லுகிற பாவமாக இந்த விண்ணப்பம் எழுதப்பட்டுள்ளது. இது மிகவும் அற்புதமானபுத்தகம். பக்தி யோகம், ஞான யோகம் இரண்டிலும் கரைகாணாதவன் இதை எழுதியிருக்க முடியாது. இதன் பொருளும் நடையும் மகாகாவியங்களின் உன்னதஸ்தாயியைப் போய்த் தொடுகின்றன. எந்த மதத்தினரேனும்சரி எந்தக் கொள்கையரேனும் சரி, உண்மையான ஆத்தும ஞானத்தைப் பெற்றுளரேல், அவர்கள் பேசுவது ஒரே பாஷை; பாடுவது ஒரே கானம்; நிற்பது ஒரே நிலை. இந்த ஸத்தியத்தை இந்த மகானுடைய விண்ணப்பம் நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

இக்கட்டுரைத் தொடர், ஆங்கில மூலத்தின் சில எடுத்துக்காட்டுகளுடன், 'வ.வே.சு. ஐயர் - அரசியல் இலக்கியப் பணிகள்' என்ற நூலில் (1993) பெ.சு. மணியால் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## ஞானபாநுவின் தமிழ் முழக்கம்

1915 நவம்பர் இதழில் எல்.எஸ். சுப்பராய ஐயர் என்பவர் எழுதிய 'தமிழின் தற்கால நிலை' எனும் கட்டுரை வெளிவந்தது. இந்தக் கட்டுரை தமிழின்மீது பிறமொழி ஆதிக்கங்கள் தோன்றிய வரலாற்றுக் குறிப்புகளைப் பின்வருமாறு வேதனைக் குரலில் ஒலித்தது.

1. "ஆதியிலிருந்தே பூர்வீக ஆரியர்களுடைய சகவாசத்துக்கு வந்தது முதலே தமிழுக்கு, சம்ஸ்கிருதம் முதல் சத்ருவாயிற்று. அது 'வேதபாஷை', 'தெய்வ பாஷை' என்று பூஜிக்கப்பட்டதால், தமிழர்களால் ஆவலோடு ஏற்றுக்கொள்ளப்பட்டது."

2. "பிறகு, 'நவாபு தர்பா'ரில் இராஜபக்திக்காகவும் பயத்துக்காகவும் இந்துஸ்தானியும் தடையிலாது ஏற்று வழங்கப்பட்டது."

3. "தற்காலம் இராஜாங்க பாஷையாகிய ஆங்கிலமோ ஏக சக்ராதிபத்யம் பூண்டு மற்ற எல்லாப் பாஷைகளையும் ஆளுங்கால், அதன் சொந்தக்காரரைக் கப்பம் செலுத்திக் கைகட்டித் தூரநின்று மரியாதை செய்ய ஏவி, எங்கும் செல்லுகிறது."

4. "இவ்விதம் மீதியுள்ள அந்நிய சத்துருக்களால் தாக்கப்பட்டும் போதாமல், உட்கலகக்காரர்களாகிய தெலுங்கு, கன்னடம் முதலியவைகளால் பாதிக்கப்பட்டும் குல ஸ்திரியான தமிழ் மாது பொறுமையோடு அடங்கி நிற்கிறாள்".

5. "ஆனால் இந்தப் பொறுமை துராகிருதமாக நுழைந்த சத்துருக்களுக்கு இடமேயன்றி, அனுபவ பாத்யதையும் கொடுத்துத் தான் ஏமாந்து நிற்கவும் இடம் உண்டாக்குகிறது! அந்தோ! காலத்தின் போக்கும் குணத்துக்குச் சம்மானமும் என்னே!"

6. "அந்தோ! கோடிக்கணக்கான பிள்ளைகளைப் பெற்ற தமிழ் மாது தன் பிள்ளைகளால் தானறியப்படாமற் போனதன்றி, பிற சொற்களைப் பார்த்துத் தன் பெயராலே அழைக்கும் மதியற்ற

குழந்தைகளைப் பெற்ற காலத்தின் விபரீதம் என்னே! இக் கொடுமையை மாந்தர் சகிப்பரோ?"

தமிழகத்தில் பிற மொழி ஆதிக்க எதிர்ப்புணர்வுகளைத் தொகுத்துக் கூறும் வரலாற்றாய்வின் ஆவணங்களுள் ஒன்றாக விளங்கும் மேற்காணும் கட்டுரையை ஞானபாநு வழங்கியுள்ளது.

சங்கம் வைத்துத் தமிழ் வளர்க்கப் பெற்ற பண்டைச் சிறப்பையும் ஞானபாநு எடுத்து வைத்து, தமது காலத்தில் 'தத்தளித்த' தமிழின் அவலத்தைச் சுட்டிக் காட்டியுள்ளார் சிவம். இதில் ஒரு பகுதி, பின்வருமாறு:

> தமிழ்ப் பாஷையானது தன்னைத் தாங்குவோர் இன்றித் தத்தளிக்கிறது. முற்காலங்களில் தென்னாட்டு மன்னர்களில் சிறந்தோராகிய பாண்டியர்கள் முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என முச்சங்கங்களை வளர்த்து, தமிழ்ப் பாஷையை ஆதரித்து அதனையோர் தனிப் பாஷையாகச் சிறப்பித்து ஸ்தாபித்தனர்.

முற்காலத் தமிழ்ச் சங்கங்களின் தமிழ்த் தொண்டைப் பாராட்டிய சிவம், தமது காலத்திய மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் கூட்டம் ஒன்று ஆங்கில மொழியில் நடைபெற்றதைக் கண்டித்துள்ளார்.

மதுரைத் தமிழ் சங்கத்தை நிறுவிய பாண்டித்துரைத் தேவர், "தமது வாழ்நாட்களைத் தமிழ்ப் பாஷையின் உத்தாரணத்தின் பொருட்டுத் தத்தம் செய்தார்" என்று போற்றிப் புகழ்ந்த சிவம், அவர் மறைவிற்குப் பிறகு, "ஊக்கம் வரவரக் குறைந்து விட்டதென்றே பலரும் சொல்லுகின்றனர்" என்பதையும் குறிப்பிட்டார். இதற்கு ஒரு சான்றாக, பின்வரும் செய்தியையும் இதழில் 'சமாசாரக்குறிப்'பில் வெளியிட்டார் சிவம்.

> தமிழ்ச் சங்கம் ஆங்கிலப் பாஷையில் நடைபெறுகின்றது! ஆ! இத்தகைய பாஷாபிமானிகளுக்குத் தக்க பரிசு கொடுப்பார் நம் நாட்டில் இல்லையென்று நாம் மிகவும் விசனப்படுகிறோம்.

இவ்வாறே, சைவ சித்தாந்த மகா சமாஜம் நடத்திய கூட்டத்தில் ஆங்கிலத்தில் சிலர் சொற்பொழிவாற்றியதையும்

கண்டித்துள்ளார் சிவம். இவற்றையெல்லாம் 'சகோதரப் பத்திரிகைகள்' கவனிக்க வேண்டும் என்றும் எழுதியுள்ளார்.

## ஆங்கிலச் சொற்களைத் தவிர்க்க வேண்டுகோள்

தேசிய உணர்வும், தமிழ் உணர்வும் மிக்க 'பரம்பரை வித்துவான்' முரா. கந்தசாமிக் கவிராயர் 'வித்தியாபாநு' எனும் இதழைத் தொடங்கினார். இவர் இதற்கு முன் மதுரையில் விவேகபாநுவின் ஆசிரியராகவிருந்தார். வ.உ.சி., பாரதியாரின் நண்பர். இவருடைய 'வித்தியா பாநு' மாத இதழாக வெளிவந்ததிலிருந்து வாரமிருமுறையாக மாறியதை வரவேற்றுப் பாராட்டி, இதழில் ஆங்கிலச் சொற்கள் அளவிற்கு மீறி ஆளப்பட்டதையும் பின்வருமாறு சுட்டிக் காட்டினார், சிவம்.

> கவிராயரவர்களுடைய தமிழ் பாஷா பாண்டித்தியம் தமிழுலகினர் அறிந்ததே; ஆதலால் பத்திரிகை தெளிவான நடையில் நடைபெறும் என்பது நாம் கூறாமலேயே எல்லோருக்கும் விளங்கும். பல அரிய பெரிய விஷயங்கள் இப்பத்திரிகையில் வெளியாகின்றன. ஆனால் ஆங்கிலச் சொற்கள் மிதமிஞ்சி வழக்கச் சொற்கள் போல எங்கும் உபயோகிக்கப்படுகின்றன என்று நாம் சொல்லாமல் இருக்க முடியவில்லை. 'ஸோல்ஜர்', 'க்ரூஸர்', 'ஸ்கீம்', 'ஈரங்கி', 'கூர்க்காஸ்,' 'டெஸ்ட்ராயர்ஸ்', 'டிரெட்நாட்', 'டார்ப்பிடோ போட்' முதலான பல வார்த்தைகளும் வெகு தாரளமாக உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

'நீதி' எனும் வார இதழை விமர்சனம் செய்தவிடத்திலும்,

> சட்டப் புத்தகங்களில் காணப்படும் சொற்களுக்குச் சரியாகப் பொருள்படும்படியான தமிழ்ச் சொற்களை உண்டுபண்ணிக் கொள்ளுதல் அவசியமாகுமே தவிர ஆங்கிலப் பதங்களை அப்படியப்படியே தமிழ் எழுத்துக்களில் எழுதிவிடுவது ஸ்வய பாஷையைக் கொலை செய்தது போலாகும்

என்று சிவம் சாற்றியுள்ளார்.

## திருக்குறள் வழிபாடு

சிவம், திருக்குறள்மீது கொண்டிருந்த ஆழ்ந்த பற்றை 1908இல் அவர் நீதிமன்றத்தில் கொடுத்த வாக்குமூலம் எடுத்துக்காட்டியது. பின்வரும் இரு குறட்பாக்களை வாக்குமூலத்தில் சிவம் குறிப்பிட்டார்.

1. கொலைமேற்கொண் டாரின் கொடிதே அலைமேற்கொண்டு
   அல்லவை செய்தொழுகும் வேந்து
2. வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
   கோலொடு நின்றான் இரவு

ஞானபாநு 1914 மே இதழில் திருக்குறளை, இந்து மதத்தின் 'பிரஸ்தானத்ரயம்' (மூன்று ஆதாரங்கள்) என்று கூறப்படுவனவற்றில் ஒன்றான பிரம்ம சூத்திரத்தைக் காட்டிலும் பயன்மிக்கது என்று துணிவுடன் எழுதியுள்ளார். இதற்கான தமது விளக்கத்தையும் பின்வருமாறு கூறியுள்ளார்.

> சர்வ சங்க பரித்தியாகிகளே பாராயணம் பண்ணி ஆராயத்தக்கது பிரஹ்மஸூத்திரம்; பிரபஞ்சத்திலும் பெரும்பான்மையோருக்கும் பிரயோஜனமுள்ளதன்று. ஆனால் திருக்குறளோ, முழுமூடன் முதல் முழுதும் உணர்ந்த முக்தர் வரையில் சகலருக்கும் இன்றியமையாத இனிமைமிக்க விஷயங்கள் நிறைந்துள்ளது. ஆகையால் திருக்குறளைப் போன்றதோர் நூல் இவ்வுலகமெங்கும் தேடித்திரிந்து பார்த்தாலும் கிடைக்காது என்று நாம் துணிந்து கூறுகிறோம்.

திருவள்ளுவரை, 'வீண்பாஷா ஞானிமாத்திரம் அன்று; ஆத்ம ஞான தீரர்' என்றும் வழிபட்டுள்ளார் சிவம்.

## சுதேசமித்திரன் தமிழ்நடை - ஞானபாநுவின் கண்டனம்

தமிழில் அரசியல் இதழியல் வரலாற்றை 1882இல் தொடங்கி வைத்த சுதேசமித்திரனின் தமிழ் நடை 1902இல் விவாதத்திற்குரியதாயிற்று. அப்பொழுது சுதேசமித்திரன் ஆசிரியர்குழுவில் இருந்த தமிழறிஞர் குருமலை சுந்தரம் பிள்ளை பின்வருமாறு விளக்கமளித்தார்:

சுதேசமித்திரன் பத்திராதிபர் எழுதும் தமிழ் நடை அவ்வளவு செவ்வையாக இல்லை என்று சிலர் குறை கூறுகின்றனர். சுதேசமித்திரன் தமிழ் நடை அழகாய் இல்லை என்பது சிறிது உண்மையேயாயினும் அக்குறையைப் பத்திராதிபர்மீது ஏற்றுவதிலும் நமது பாஷையின் மீதே ஏற்றுவதே பெரிதும் நியாயமாகும். ஏனெனில் நமது தமிழ்ப் பாஷையானது முக்கியமாய் மத சம்பந்தமான விஷயங்களுக்கும் பாடல்களுக்கும்தான் இயைந்ததாயிருக்கின்றதேயன்றி ராஜாங்க சம்பந்தமான விஷயங்களைத் தெளிவாய் வெளியிடற்கேற்ற சொல்வளமும், விசாலமும், இளக்கமும் அதனிடம் இல்லை. -- நமது தமிழ் நாட்டில் பிறர்க்கு உதவி செய்யாமல் அறிந்தவற்றையெல்லாம் மனதில் அடக்கிக் கொண்டு குடத்துள் விளக்கெனவும், உட்கொண்டதை வெளியே கக்காத குடுக்கைகள் போலவும் வாழும் தமிழ்ப் பண்டிதர்களிடம் வீணே கிடக்கும் தமிழறிவும் தேர்ச்சியும் நமது தேசபக்தர்க்கு (சுதேசமித்திரன் ஆசிரியர், ஸ்ரீ. சுப்பிரமணிய ஐயர்) வாய்த்திருக்குமானால் இவர் இதுவரையும் தமிழ்ப் பாஷையையே ஒரு புதிய வழியில் திருப்பியிருப்பார்.

சுதேசமித்திரன் தமிழ் நடை மீண்டும் 1915இல் ஞானபாநுவில் சுப்பிரமணிய சிவாவால் விவாதத்திற்கு ஆட்பட்டது. சுதேசமித்திரன் மீது சிவம் தொடுத்த கண்டனவுரைகளின் ஒரு பகுதி, பின்வருமாறு:

தமிழ் ஜனங்களுக்குச் சுதேசமித்திரன் அறிவைப் பரப்புகின்றதா? அல்லது ஆங்கிலேய பாஷையைப் பரப்புகின்றதா?. ஸ்வய பாஷையை ஆதரியாத பத்திரிகைகள் ஸ்வதேசத்தை எங்ஙனம் முன்னேற்றத்திற்குக் கொண்டு வரப்போகின்றனவோ தெரியவில்லை. . . . இப்பொழுது ஜன சமூகம் விழித்துக் கொண்டுவிட்டது. தேசாபிமானமும் பாஷாபிமானமும் எங்கும் பெருகிவருகின்றன. நமது தேசம், நமது பாஷை என்ற எண்ணம் எங்கும் உண்டாயிருக்கிறது. ஆதலால் சுதேசமித்திரனுடைய நடையும் தன்மையும் இப்பொழுது

> நல்வழியில் சீர்திருத்தப்படவேண்டும். அப்படிச் செய்யாமல் 'முயலுக்கு மூன்றேகால்' என்ற பழமொழிப்படி ஒரு பிடிவாதமாக, சுதேசமித்திரன் தன்னுடைய பிடி பாஷா நடையையும் தன்மையையும் அனுசரித்து வருமானால், அது செய்யவேண்டிய வேலை செய்து முடித்தாகிவிட்டதென்றும் இனிமேல் அதற்கு நமது தமிழ் நாட்டில் வேலையில்லையென்றும் நாம் விசனத்துடன் வெளியிட வேண்டியிருக்கின்றது.

ஞானபாநுவிற்குப் பதிலளித்து, 'பாரத புத்ரன்' என்பவர் எழுதியன சுதேசமித்திரனில் 1915 அக்டோபர் 1, 6, 15 தேதிகளில் வெளிவந்தன. இதற்குப் பதிலளித்து, சிவம் ஞானபாநுவில் எழுதியதில், "ஆங்கிலச் சொற்கள் கலவாத தமிழ் எழுதவேண்டுமென்று எப்பொழுதும் நாம் கூறிவருகின்றோமேயொழிய சமஸ்கிருதச் சொற்களும் கலவாத தனித்தமிழ் எழுதவேண்டுமென்று நாம் ஒரு பொழுதும் கூறினதில்லை" என்று குறிப்பிட்டார்.

மேற்காணும் விளக்கத்தில் சிவம் 'தனித்தமிழ்' என்றால் ஆங்கிலம் கலவாதது என்று கருதினார். இறுதியாகச் சிவம் பின்வரும் வேண்டுகோளை ஞானபாநுவில் வெளியிட்டார்.

> தமிழ்ப் பண்டிதர்களே! தமிழ் மகாஜனங்களே! ஜாக்கிரதை! ஜாக்கிரதை! உங்களுடைய பாஷையைக் காப்பாற்றுங்கள். ஒரு ஜன சமூகத்திற்கு உயிர் அதன் பாஷைதான். தமிழ்ப் பாஷை அழிந்துவிட்டால் தமிழர்களின் சிறப்பும் சீரும் அழிந்துவிடும். தமிழ்ப் பாஷையர், தேவையான பதங்கள் இல்லையென்று வாய்கூசாமல் கூறுகின்ற பாரத புத்ரர்களுக்கு அப்பதங்களை ஆராய்ந்து கண்டுபிடித்துக் கற்றுக்கொடுங்கள். சரியான பதங்கள் இல்லையென்றால், தமிழ்வாணியின் கிருபைகொண்டு இன்னும் அநேக காரணப் பெயர்களையாக்கிக் கொடுங்கள். உங்கள் நா தமிழே பேசுக; நீங்கள் கையிலேந்தும் இறகு தமிழே எழுதுக; உங்களுடைய ஹிருதயம் தமிழையே நாடுக.

## ஞானபாநுவிற்கு வ.உ.சி. ஆதரவு

சுதேசமித்திரனில், ஞானபாநுவிற்குப் பதிலளித்துப் பாரத புத்ரன் எழுதியதற்கு, "மறுமொழி கொடுப்பதற்கு ஸ்ரீமான் பிள்ளையவர்கள் தகுந்தவர்" என்று சிவம் ஞானபாநுவில் குறிப்பிட்டார். வ.உ.சி., சுதேசமித்திரனில் (29.10.1915) பாரத புத்ரனின் வாதங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் குறிப்பிட்டு விளக்கமாகப் பதிலளித்தார் (விவரமறிய பார்க்கவும் : 'வீரமுரசு சுப்பிரமணிய சிவா', 1984, பெ.சு. மணி). பாரத புத்ரன் வாதங்களில் ஒன்றை வ.உ.சி. பின்வருமாறு மறுத்து எழுதினார்:

> பாரத புத்ரன் எழுதிய நிருபத்தின் எட்டாம் உறுப்பில் நம் தமிழ்ப்புலவர்கள் சம்ஸ்கிருதச் சொற்களை உபயோகித்ததும் பற்றிக் கூறுகிறார். சம்ஸ்கிருதச் சொற்களும் தமிழ்ச் சொற்களும் ஒரு பாஷைச் சொற்களேயென்று சம்ஸ்கிருதத்தாரும் கூறுகின்றமையால் அச்சொற்களை அப்பண்டிதர்கள் உபயோகித்தலைப் பற்றிக் குறைகூறுதல் தகுதியன்று. அவ்விரு பாஷைகளும் வெவ்வேறு பாஷைகளென்று கருதுகிறவர்கள் முதலில் தமிழ்ப் பாஷையில் ஆங்கிலச் சொற்கள் முதலியவற்றைக் கலந்து எழுதுவதை நம்மவர்கள் நிறுத்துமாறு செய்தபின்னர் (தற்காலத்தில் என் போன்றோர் ஆங்கிலச் சொற்களை உபயோகிக்க வேண்டிய இடங்களில் அவற்றின் பக்கங்களில் அவற்றிற்குரிய ஆங்கிலச் சொற்களையும் உபயோகித்து வருதல் போல) சம்ஸ்கிருதச் சொற்களை உபயோகிக்க நேரும் இடங்களில் அவற்றின் தமிழ் மொழிபெயர்ப்புச் சொற்களை அவற்றின் பக்கங்களில் அவற்றிற்குரிய சம்ஸ்கிருதச் சொற்களையும் உபயோகித்து, தற்காலம் நம் தமிழ் நாட்டில் வழங்கி வரும் சம்ஸ்கிருதச் சொற்களுக்கெல்லாம் சரியான தமிழ்ச் சொற்களை நம் தமிழ் மக்களுக்குக் கற்பித்து நாளடைவில் சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழிலிருந்து வேரோடு களைந்துவிடக் கருதியுள்ளார்கள்.

ஞானபாநுவில் சம்ஸ்கிருதச் சொற்கள் ஆளப்பட்டு வந்ததைக் குறைகூறிய பாரத புத்ரன் வாதத்திற்கும் பதிலளித்து வ.உ.சி. எழுதியதாவது:

> ஞானபாநு சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழ்ப் பத்திரிகைகள் உபயோகித்தல் கூடாதென்று இன்னும் கூறத் தொடங்கவில்லை. அவ்வாறு அது கூறுமாயின் பின்னர் சம்ஸ்கிருத மொழிகளை உபயோகிக்காதென்றே யான் நம்புகிறேன்.

மொழித் தூய்மையாக்கம் என்பது ஆங்கில மொழிச் சொற்களை மட்டுமல்லாமல் சம்ஸ்கிருதச் சொற்களையும் விலக்குவ தாகும் எனும் கருத்தை வ.உ.சி.யின் முற்கூறிய பதிலில் அறிகின்றோம்.

ஞானபாநு - சுதேசமித்திரன் இடையே நிகழ்ந்த கருத்துப் போரில் ஞானபாநு வெற்றியடைந்ததாக 2.12.1915இல் கந்தசாமி குப்தா எனும் தமது நண்பருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார் சிவம்.

> பாநுவுக்கும், மித்திரனுக்கும் நடந்து வந்த யுத்தம் முடிந்து ஒருவாறு சமாதானம் உண்டாய்விட்டது. அதில், பாநுவே ஜயித்தது என்ற சங்கதி தங்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்குமென்பதில் சந்தேகமில்லை.

## ஞானபாநுவின் சமூகச் சீர்திருத்த நோக்கு

அரசியல் தீவிரவாதக் கொள்கையை ஏற்றவர்களில் சிலர் சமூகச் சீர்திருத்தத்தில் மிதவாதக் கொள்கையை, சமூகச் சீர்திருத்த எதிர்ப்புக் கொள்கையைக் கொண்டிருந்தார்கள். இவர்களுள் சுப்பிரமணிய சிவமும் ஒருவர் என்பதை ஞானபாநு வழியே அறிய முடிகின்றது.

சமூகச் சீர்திருத்தக் கண்ணோட்டத்தில் ஞானபாநு முற்போக்காக இல்லை. 'நமது ஸ்திரீகளின் நிலைமை', 'ருதுமதி விவாக சட்ட மசோதா', 'ஜாதி தர்மம்' என்னும் கட்டுரைகளும் வ.உ.சி.யின் 'மெய்யறம்' பற்றிய விமர்சனம், 'கோயில் திருத்தம்' எனும் நூலைப் பற்றிய விமர்சனம் ஆகியனவற்றில் ஞானபாநுவின் சமூகச் சீர்திருத்த எதிர்ப்புணர்வுகளை இனங்காண முடிகின்றது.

'நமது ஸ்தீரீகளின் நிலைமை' எனும் கட்டுரையில் (நவ. 1914) பெண் கல்விக்கு அவசியமில்லையெனும் கருத்து கூறப்பட்டுள்ளது. அத்துடன் சமூகச் சீர்திருத்தவாதிகள் மீதான கண்டனமும் பின்வருமாறு தொடுக்கப்பட்டுள்ளது:

> இந்திய தேசத்தில் இப்பொழுது சில ஆசாரச் சீர்திருத்தக்காரர்கள் தோன்றி நமது ஜன ஸமூகத்தைத் தலைகீழாக்க ஆரம்பித்திருக்கிறார்கள். இவர்கள் ஆசாரங்களைச் சீர்திருத்தப் புகுந்து அநாசாரங்களைப் புகுத்தி ஆரிய ஜன சமூகத்தை அநியாயமாக அதோகதிக்கு இட்டுச்செல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

சென்னை சட்டமன்றத்தில் 1914 நவம்பரில் பெண் வயதுக்கு வந்தபிறகு திருமணம் செய்து கொண்டால் அது சட்ட சம்மதமாக்கப்படவேண்டும் எனும் மசோதாவை மிதவாத காங்கிரஸ் பிரமுகரான வி.எஸ். சீனுவாச சாஸ்திரியார் கொண்டுவந்தார். இந்த மசோதா, அக்காலத்தில் 'ருதுமதி விவாஹ மசோதா' (THE POST PUBRITY MARRIAGE BILL) என்று அழைக்கப்பட்டது. இந்த மசோதாவைப் பாரதியார் வரவேற்று, சுதேசமித்திரனில் எழுதினார். ஆனால், சிவம் கீழ்வருமாறு கடுமையாகக் கண்டித்தார்:

> அசாஸ்திரியமாயும் ஆர்யாசார நுஷ்டானங்கட்கு விரோதமாகவும் உள்ள இந்த மசோதாவை அரசாங்கத்தார், சட்டமாக்குவார்களாயின், சாதுக்களாயுள்ள பல்லாயிரம் பிராஹ்மணர்களின் ஹ்ருதய உணர்ச்சியை அவமதித்தவர்களாவர்கள். அரைகுறையாக ஆங்கிலம் படித்து ஸ்வய பாஷையை மறந்துவிட்டு இந்திய ஜன சமூகத்தைத் தாங்களே தாங்கிக்கொண்டிருப்பவர்கள் எனப் பல்லோர் முன்னிலையிலும் நடித்துக் கொண்டு திரியும் ஒரு சில நவீன நாகரிகர்கள் இந்திய ஜன சமூகமாகார்கள்.

'கோயில் திருத்தம்' எனும் சிறு பிரசுரத்தை விமர்சனம் செய்தபொழுதும் சிவம், சமூகச் சீர்திருத்தவாதிகளைப் பின்வருமாறு கண்டித்துள்ளார்:

மேல் நாட்டினரது வார்த்தைகளைப் பின்பற்றும் மேதாவியர்களது சீர்திருத்தங்களினால் தேசம் நாசம் எய்துமே யொழிய நன்மையை அடையவே அடையாது.

சமூகச் சீர்திருத்தத்தில் "அடையும் முயற்சிக்கும் விதங்களிலும் வழிகளிலும் நாம் வித்தியாசப் படுகிறோம்" என்றும் ஞானபாநு குரல் கொடுத்துள்ளது.

வ.உ.சி.யின் 'மெய்யறம்' நூலில் 'இல்வாழ்க்கையில் உயிர்த் துணைகொள்ளல்' எனும் அதிகாரத்தில் "துணையிழந்தாரை மணப்பது புண்ணியம்" என்று கூறப்பட்டுள்ளதைச் சிவம் ஏற்க மறுத்துப் பின்வருமாறு மதிப்புரையில் எழுதினார்:

விவாகம் செய்யலாம் என்று மாத்திரம் அன்று; புண்ணிய மென்றும் கூறியிருக்கின்றனர். ஆதலால் நமது தேச நன்மைக்கு விதவா விவாகம் அவசியம் என்று இவர் கருத்துப் போலும்! நாம் இவ்வபிப்பிராயத்திற்கு முற்றிலும் மாறுபடுகின்றோம்.

அந்நிய ஆட்சியில், மேனாட்டு வழிமுறையைப் பின்பற்றிச் சமூகச் சீர்திருத்தம் காண்பதா? எனும் சிந்தனையில் சிவம் சிக்கிவிட்டார். ராஜாராம் மோகன்ராய் (1772 - 1883) காலத்தில் இருந்தே வேத, உபநிடத, சாத்திர விளக்கங்கள் வழிகளிலும் சமூகச் சீர்திருத்த முயற்சிகள் தோன்றியதை வரலாறு கூறுகின்றது.

## பிரபஞ்சமித்திரனில் சிவம்

சிவம், கொடிய தொழு நோயின் காரணமாகவும் மற்றும் பற்பல அசெளகரியங்களாலும் நான்காண்டு காலம் வெளிவந்த ஞானபாநு வின் அனைத்து உரிமைகளையும் 1916 அக்டோபரில் தமது நண்பர் மங்கலம் சண்முக முதலியாரிடம் ஒப்படைத்தார். புதிய நிருவாகத்தின் கீழ் ஞானபாநு 1917 ஏப்ரல் வரையில் வந்தது. பிறகு நின்று விட்டது. மங்கலம் சண்முக முதலியார் அப்பொழுது 'பிரபஞ்சமித்திரன்' எனும் வார இதழை நடத்திக் கொண்டிருந்தார். சுப்பிரமணிய சிவம் 23.6.1916 முதல் வெளிவந்த பிரபஞ்சமித்திரனின் 'கார்யஸ்தராக' நியமிக்கப்பட்டார். பிரபஞ்சமித்திரனின் அளவு 44x28

செ.மீ.; பக்கங்கள் எட்டு; ஒவ்வொரு பக்கமும் மூன்று பத்திகளாகப் பகுக்கப் பட்டது. இந்தியாவிற்கு ஆண்டு சந்தா ரூ.2-12-0; ஆறுமாத சந்தா ரூ.1-8-0; மூன்று மாத சந்தா ரூ.0-14-0.

'சில குறிப்புகள்' எனும் தலைப்பில் 'நாரதர்' எனும் புனை பெயரில் சிவம் சுவைபட எழுதி வந்தார். திலகரைப் பற்றிச் சிவம் எழுதிய 'நாரதர் குறிப்பொன்று, பின்வருவது:

> ஸ்ரீமான் பாலகங்காதர திலகர் என்றால் ஏன் சில அதிகாரிகளுக்குப் புத்தி நடுக்கம் உண்டாகின்றதோ, தெரியவில்லை. அரசாங்க அதிகாரிகள் இந்த உத்தம தேசாபிமானியை இரண்டு முறை யடித்து வீழ்த்தினார்கள். ஆயினும் அவர்களுக்குத்தான் கை நொந்ததே யொழிய ஸ்ரீ திலகருக்கு எவ்வித வீழ்ச்சியையும் உண்டாக்கவில்லை. ஸ்ரீ திலகருக்கு இவ்வரசாங்க அதிகாரிகளால் பெயரும் பெருமையும் பெருகிற்று. அவர் இப்பொழுது தேசாபிமானமே அவதாரமாய் உருக்கொண்டு வந்த உத்தம புருஷர் என்று இந்தியர்களால் கொண்டாடப் பெறுகிறார். (பிரபஞ்சமித்திரன்: 1-12-1916; ப. 3).

நாரதர் குறிப்புகள் அரசாங்கத்தின் பார்வைக்காக ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்று 'நேடிவ் நியூஸ் பேப்பர் ரிப்போர்ட்' எனும் அரசு அறிக்கையில் சேர்க்கப்பட்டன. 1-1-1917இல் வெளிவந்த நாரதர் குறிப்பில் தமிழ் வடிவம் கிடைக்கவில்லை. ஆனால் அதன் ஆங்கில மொழியாக்கம் 'நேடிவ் நியூஸ் பேப்பர் ரிப்போர்ட்'டில் உள்ளது. 'ஸ்வராஜ்யமும் இந்தியாவும்' எனும் தலைப்பில் எழுதப்பெற்ற நாரதர் குறிப்பில், அந்நிய நாடுகளின் உதவியைப் பெற்று, பிரிட்டிஷாரை விரட்ட நினைப்பது புத்திசாலித்தனமாகாது எனும் கருத்தைச் சிவம் வெளியிட்டுள்ளார். ஞானபாநுவில் காணமுடியாத அரசியல் குறிப்புகளைப் பிரபஞ்சமித்திரனில் சிவம் எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது.

1917இல் பிரபஞ்சமித்திரன், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு விற்கு உரிமையாயிற்று. பிரபஞ்சமித்திரனின் சில இதழ்களே

கிடைத்துள்ளதால் பிரபஞ்சமித்திரனில் சிவம் எழுதியதையெல்லாம் அறியமுடியவில்லை.

## இந்திய தேசாந்திரியில் சிவம்

சென்னை மயிலாப்பூரில் இருந்து டி.கே. சாமிநாதைய்யர் என்பவர் 'இந்தியன் எமிகிரெண்ட்' எனும் பெயரில் ஓர் ஆங்கில இதழை 1919 முதல் நடத்தி வந்தார். 'இந்திய தேசாந்திரி' எனும் தமிழ்ப் பெயர் கொண்ட இந்தியன் எமிகிரெண்ட் இதழில் சிவம் துணையாசிரியராகப் பணியாற்றியுள்ளார். நாரதர் எனும் புனைபெயரில் சிவம் இந்த இதழிலும் எழுதிவந்தார். சிவம் எழுத்துக்கள் இந்த இதழிற்கு ஆட்சியாளரின் சீற்றத்தைப் பெற்றுத் தந்தன என்பதைப் பின்வரும் செய்தியால் அறிகின்றோம்.

"இந்தியன் எமிகிரெண்ட்டில் ஜூலை 18, 1919ஆம் இதழில் சிவா துணையாசிரியர் பதவியில் இருந்து நீக்கப்பட்டதாகவும் பத்திரிகையில் வெளிவந்த ஆட்சேபகரமான கட்டுரைக்காக மன்னிப்பைத் தெரிவித்துக்கொள்வதாகவும் ஓர் அறிவிப்பு வெளிவந்தது" (நேடிவ் நியூஸ் பேப்பர் ரிப்போர்ட் - 1919 - தமிழாக்கம்).

மேடைத் தமிழின் கூர்முனையால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் தாக்கிய சுப்பிரமணிய சிவம், பத்திரிகைத் தமிழைக் கொண்டு தாக்கமுடியாமற் போனாலும் இதழாசிரியர் எனும் புதிய பரிமாணத்திற்குரியவராகிவிட்டார்.

# இதழியல் சட்டங்கள்

பா. கந்தசாமி

மக்களாட்சியில் இதழ்கள் மிக முக்கிய பங்கை வகிக்கின்றன. சுதந்திரமான சமுதாயத்தில் இதழ்கள் நான்காவது தூணாகப் போற்றப்படுகின்றன. மக்களாட்சியில் இதழ்கள் தமது கடமையை ஆற்றுவதற்கு, எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் சுதந்திரமாகச் செயல்படும் சூழ்நிலை ஏற்பட வேண்டும். மக்களாட்சியின் சிறப்பே கருத்துகளை வெளியிடும் சுதந்திரம், பேச்சு சுதந்திரம் ஆகியன. இவை இரண்டின் தொடர்ச்சிதான் பத்திரிகைச் சுதந்திரம் எனலாம். மக்கள் தங்கள் கருத்துகளை உருவாக்குவதற்கும் சுதந்திரமான முடிவுகளை எடுப்பதற்கும் நாட்டு நடப்புகளை உண்மையாகவும் முழுமையாகவும் அறிகின்ற தடையில்லாத அரசியல் சூழ்நிலை நிலவ வேண்டும்.

பத்திரிகைச் சுதந்திரம் மூன்று முக்கிய கூறுகளை உள்ளடக்கியதாகும்.

1. அனைத்துச் செய்திகளையும் பெறுவதற்கான சுதந்திரம்
2. அவற்றை அச்சேற்றும் சுதந்திரம்
3. அவற்றை மக்களிடையே பரப்புவதற்கான சுதந்திரம்

எனவே, பத்திரிகைச் சுதந்திரம் என்பது அரசின் நெருக்குதல், கட்டுப்பாடு, மற்றும் குறுக்கீடு இன்றிக் கருத்துக்களை அச்சில் ஏற்றும் உரிமையும் அதை வெளியீடு செய்யும் செயலும் ஆகும்.

அதிகாரம், மக்கள் கருத்துக்களால் கட்டுப்படுத்தப்பட வேண்டுமே தவிர, மக்களின் எண்ணத்தை அதிகாரம் கட்டுப்படுத்துதல் கூடாது. மக்களின் கருத்தைப் பெற முடியாமல் அல்லது பெறுவதற்கான கருவிகள் இல்லாமல் அமையும் மக்களாட்சி என்பது கேலிக்கூத்தான ஒன்றாகும்.

சுதந்திரமான பத்திரிகை உலகம் நிலவுவதைப் பொறுத்துத் தான் பாராளுமன்ற ஜனநாயகத்தின் வெற்றி அமைகின்றது.

மேலை நாட்டுக் கல்வியைப் பெற்ற முதல் தலைமுறை இந்தியர்கள் ஸ்பென்சர், மில், ஆடம் ஸ்மித் போன்றோர்களின் கருத்துக்களாலும் எழுத்துக்களாலும் கவரப்பட்டார்கள். இவர்கள், விடுதலைப் போராட்டக் காலத்தில் மக்களுக்கு அரசியல் கல்வியைப் புகட்டுவதற்கு, பத்திரிகைகளை மிகச் சிறந்த கருவியாகப் பயன்படுத்தினார்கள்.

பத்திரிகைகளின் சுதந்திரம் என்பது இந்தியர்களுக்கு அன்னியமான அனுபவம் ஆகும். இங்கிலாந்தில் இருந்துதான் பத்திரிகைச் சுதந்திரம் என்ற கரு உருவாகியது. அதே இங்கிலாந்தில் இருந்துதான், பத்திரிகைச் சுதந்திரத்தை நசுக்குவதற்கான சட்டங்களும் உருவாயின. 15ஆம் நூற்றாண்டிலேயே அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கப்பட்ட போதிலும் 17ஆம் நூற்றாண்டில் செய்தித் தாள்கள் தோன்றிய பின்புதான் 'பத்திரிகைகளின் சக்தி'யை உலகம் உணர்ந்தது. எனவே, பத்திரிகைகளின் சக்தியினால் அச்சமுற்ற அரசுகளும் மத குருமார்களும் பத்திரிகைச் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்த சட்டங்கள் இயற்றத் தொடங்கினார்கள்.

இந்தியாவில், பத்திரிகை பற்றியும் அதன் சுதந்திரத்தைப் பற்றியும் ஆங்கிலேயர்களின் வருகைக்குப் பின்புதான் மக்கள் உணரத் தொடங்கினார்கள். இந்தியாவின் பத்திரிகைச் சட்ட வரலாறு அதன் அரசியல் வரலாற்றோடு பின்னிப்பிணைந்த ஒன்றாகும். கிழக்கு இந்திய வணிகக்குழுமத்தின் ஆட்சிக்காலத்தில் இருந்து, இங்கிலாந்து பேரரசின் நேரடி நிர்வாகத்தில் இந்தியா இருந்த காலம் வரை அவ்வப்போது நிலவிய அரசியல் சூழ்நிலையைப் பொறுத்துப் பல்வேறு இதழியல் சட்டங்கள் இயற்றப்பட்டன. அவற்றைப் பின்வரும் பகுப்பில் அடக்கலாம்.

1. ஆங்கிலக் கிழக்கு இந்திய வணிகக் குழுமத்தின் ஆட்சியில் இயற்றப்பட்ட பத்திரிகைச் சட்டங்கள்

2. இங்கிலாந்து பேரரசின் நிருவாகத்தின்கீழ் இருந்தபோது ஆங்கில இந்திய அரசு இயற்றிய சட்டங்கள்

ஆங்கில வணிகக்குழுவினர் இந்தியாவின் பெருநகரங்களான கல்கத்தா, சென்னை, பம்பாய் போன்ற இடங்களில் தங்களின் வசிப்பிடங்களை ஏற்படுத்திக் கொண்டனர். தொடக்கத்தில் தங்களது

ஐரோப்பிய நாடுகளின் நடப்புகளைத் தெரிந்து கொள்வதற்கு அங்கிருந்து இறக்குமதி செய்யப்பட்ட செய்தித்தாள்களைப் படித்து வந்தனர். பின்னர் வணிகக் குழுவில் பணியாற்றிய மற்றும் ஓய்வு பெற்ற ஐரோப்பிய ஊழியர்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதற்காக இந்தியாவிலேயே பத்திரிகையைத் தொடங்கினர். குறிப்பாகக் கல்கத்தா, சென்னை போன்ற பெரும் நகரங்களில் வசித்த ஆங்கிலேயர்களின் எண்ணிக்கை அதிகமான காரணத்தால், வணிகக் குழுவின் நடவடிக்கை பற்றியும் அரசியல் சூழ்நிலைகளை உணரவும் இதழ்களைத் தொடங்க வேண்டும் என்றே விரும்பினர். மக்களுக்குச் செய்திகள் அளிக்க வேண்டும் என்ற எண்ணத்தைக் காட்டிலும் கிழக்கிந்திய வணிகக் குழும அதிகாரிகளின் ஊழல்களை மற்றும் வணிகம் பற்றிய செய்திகளை விளம்பரப்படுத்தவும் பத்திரிகை தேவை என உணர்ந்தனர்.

கி.பி. 1768இல் வில்லியம் போல்ட் என்ற ஐரோப்பியர் மக்கள் நலனுக்குப் பத்திரிகை தேவை என்ற கருத்தை முதன் முதலில் வெளியிட்டார். மேலும் பத்திரிகைகளின் அவசியத்தையும் அச்சுக் கூடத்தின் முக்கியத்துவத்தையும் பொதுமக்களுக்கு உணர்த்தும் கன்னி முயற்சியை மேற்கொண்டு, அதைப் பற்றிய தம் கருத்தைக் கல்கத்தாவில் கிழக்கு இந்திய வணிகக் குழும ஆலோசனை மண்டபக் கதவில் ஒட்டினார். வணிகக் குழுவினர் போல்டின் இத் துணிச்சலான நடவடிக்கையைக் கண்டித்ததோடு அல்லாமல், அடுத்த கப்பலிலேயே இங்கிலாந்துக்கு அவரைத் திருப்பி அனுப்பினார்கள். பத்திரிகை சுதந்திரத்திற்கு ஏற்பட்ட முதல் அடியே, வில்லியம் போல்டின் நாடு கடத்தல்தான்.

இருப்பினும், 12 ஆண்டுகளுக்குப்பின் ஜேம்ஸ் அகஸ்டஸ் இக்கி என்பவர் ஒரு ஆங்கிலப் பத்திரிகையை இந்தியாவில் கொண்டு வந்தார். வங்காள கெசட் அல்லது கல்கத்தா ஜெனரல் அட்வர்டைசர் என்று பெயரிடப்பட்ட இக்கியின் கெசட் ரூ.2000/- முதலீட்டோடு தொடங்கப்பட்டது. வங்காள கெசட்டின் முதல் இதழ் ஜனவரி 29ஆம் நாள் 1780ஆம் ஆண்டு அச்சில் ஏறியது. இந்நிகழ்ச்சி இங்கிலாந்தில் முதல் தினசரி பத்திரிகை வெளியான 9 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவில் நிகழ்ந்தது. இக்கியின் கெசட் வணிகக் குழுவின் ஆளுநர்கள் பற்றியும் அவர்களின் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றியும் விமர்சனம் செய்தது. பத்திரிகை வாசகர்கள் இக்கியின் விமர்சனத்தை ஆர்வத்துடன் படித்தனர். ஒரு முறை வாரன்

யேஸ்டிங்ஸின் துணைவியைப் பற்றித் தனிப்பட்ட முறையில் விமர்சனம் செய்தார் இக்கி. இதனால், தலைமை ஆளுநராக இருந்த வாரன்யேஸ்டிங்ஸ் அப்பத்திரிகையை ஒடுக்கும் நடவடிக்கையில் இறங்கினார். அப்பத்திரிகை, பொது அஞ்சல் சேவை மூலம் மக்களிடம் சேராமல் தடுப்பதற்காக 1780ஆம் ஆண்டு நவம்பர் 14ஆம் நாள் தடை விதித்தார். இது அதிகார வர்க்கத்திற்கும் பத்திரிகை உலகிற்கும் ஏற்பட்ட முதல் கருத்து மோதல் ஆகும். இதன் விளைவாக நீதிமன்றத்தில் இக்கிமீது வழக்கு தொடரப்பட்டு, கைது செய்யப் பட்டார். இருப்பினும் இக்கி மனம் தளரவில்லை. சிறையில் இருந்து கொண்டே தனது பத்திரிகைச் செய்திகளைத் தம் தொனியில் எவ்வித மாற்றமும் இல்லாமல் தொகுத்து அனுப்பினார். எனினும், அரசின் ஒடுக்குமுறையாலும் முதலீடு பற்றாக்குறையாலும் கி.பி. 1782இல் இக்கியின் பத்திரிகை நின்றுவிட்டது.

இக்கியைத் தொடர்ந்து சென்னையில் ‘மெட்ராஸ் கூரியர்’ என்ற பத்திரிகை கி.பி. 1785 அக்டோபர் 15இல் ரிச்சர்ட் ஜான்சன் என்பவரால் தொடங்கப்பட்டது. இது வார இதழாக வெளிவந்தது. இப்பத்திரிகை இராணுவச் செய்திகளையும் அரசாங்க விளம்பரங்களையும் உள்ளடக்கியே வெளிவந்தது.

மெட்ராஸ் கூரியரைத் தொடர்ந்து ‘மெட்ராஸ் கெசட்’ என்னும் பத்திரிகை வெளிவரத் தொடங்கியது. சர் டேவிஸ் என்பவர் இப்பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார்.

தொடக்க காலத்தில் பத்திரிகையைக் கட்டுப்படுத்த வரையறுக்கப்பட்ட சட்டங்கள் இல்லாத காரணத்தால், ஒவ்வொரு மாநில ஆளுநராலும் அவர்தம் விருப்பத்திற்கேற்ப தணிக்கை செய்யப்பட்டன. இதுவரை வெளியான வெளியீடுகள் அனைத்துமே ஆங்கிலேயர் அல்லது ஐரோப்பியர்களின் வெளியீடுகளே. இருப்பினும், வணிகக் குழுவினரின் நிருவாகம் பற்றியும் ஆளுநர்கள் பற்றியும் அவர்கள் குடும்பங்கள் பற்றியுமான விமர்சனங்களைத் தாங்கி வந்ததால், வணிகக் குழுவினர் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்தத் தயங்கவில்லை. குறிப்பாக, கி.பி. 1806இல் வேலூரில் நடந்த சிப்பாய் புரட்சிக்குப் பிறகு, அச்சிடப்பட்ட மற்றும் கையால் எழுதப்பட்ட ஏடுகள் அனைத்தும் ஆங்கில ஆளுநர்களால் சந்தேகக் கண்ணோடு பார்க்கப்பட்டன.

அன்றைய தலைமை ஆளுநரான வெல்லஸ்லியால் கி.பி.1799 இல் தணிக்கைமுறைச் சட்டம் அமல்படுத்தப்பட்டது. இதன்மூலம் அவர், ஆங்கில அரசாங்கத்தின் ஆதிக்கத்தைப் பலவீனப்படுத்த நினைத்த பத்திரிகைகளின் முயற்சியைத் தடுக்க முனைந்தார். 1799ஆம் ஆண்டுச் சட்டம், பத்திரிகைகள் அச்சிடுபவர், வெளியிடுப்பவர் மற்றும் ஆசிரியர் பெயர்களை வெளியிட வேண்டும் என்றும் அரசாங்கச் செயலருக்கு, அப்பத்திரிகை வெளியிடும் செய்திகளை முன்தணிக்கை முறைக்கு அனுப்ப வேண்டுமென்றும் ஆணையிட்டது. இச்சட்டத்தை மீறுபவர்கள் நாடுகடத்தல் போன்ற தண்டனைக்கு உட்படுத்தப்படுவர் என்றும் எச்சரித்தது.

வெல்லஸ்லியைத் தொடர்ந்து வந்த மின்டோவும் எல்லா அச்சகங்களும் தாங்கள் அச்சிடும் பத்திரிகைகளில் வெளியிடுபவரின் பெயர்களையும் வெளியிடும் அச்சகத்தின் பெயர்களையும் வெளியிட வேண்டுமென்ற சட்டத்தை விதித்தார். ஆனால் இந்த இரண்டு சட்டங்களும் யேஸ்டிங்ஸ் தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்றவுடன் கைவிடப்பட்டன. யேஸ்டிங்ஸின் இந்த முடிவை இந்திய மக்கள் வரவேற்றனர்.

1816ஆம் ஆண்டில் கங்காதர பட்டாச்சாரியர் என்ற இந்தியர் 'வங்காள கெசட்' என்ற பத்திரிகையை வெளிக்கொணர்ந்தார். இராசா ராம்மோகன்ராயின் தாராளக் கருத்துக்களால் கவரப்பட்டவர்களில் இவரும் ஒருவர். ஜேம்ஸ் சில்க் பக்கிங்காம் என்ற முற்போக்கான ஆங்கிலேயர், 'கல்கத்தா ஜர்னல்' என்ற இதழை வெளியிட்டார். இது மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றது. யேஸ்டிங்ஸின் காலத்தில் பத்திரிகைகள் சுதந்திரமாகச் செயல்பட்டன. ஆனால் அவருக்குப் பிறகு ஜான் ஆடம் தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்றவுடன், பக்கிங்காம் கடுமையான எதிர்ப்பை எதிர்நோக்க வேண்டியிருந்தது. பக்கிங்காம் தமது இதழில் வணிகக் குழும அரசின் தோல்விகளையும் தவறுகளையும் மிகக் கடுமையாக விமர்சனம் செய்தார். எனவே 1823ஆம் ஆண்டு அவர் நாடு கடத்தப்பட்டார். மறு ஆண்டே கல்கத்தா ஜர்னல் நின்றுவிட்டது. இந்தியாவில் பத்திரிகைகளில் பொது விவாதங்களைத் தொடங்கிவைத்து, தரமான விமர்சனங்களை வெளிக்கொணர்ந்த பெருமை பக்கிங்காமையே சேரும்.

இராசா ராம்மோகன் ராய், நாடுகடத்தப்பட்ட பக்கிங்காமுக்குத் தமது முழு ஆதரவை அளித்தார். கிழக்கிந்திய குழுமத்தின் ஆட்சிக்

காலத்தில் பத்திரிகைச் சுதந்திரத்திற்காகக் குரல் கொடுத்த முதல் இந்தியர் இராசா ராம்மோகன் ராய் ஆவார். சமூகச் சீர்திருத்தக் கருத்துகளையும் பல புதிய சிந்தனைகளையும் துணிச்சலாக மக்களிடையே பரப்பியவர் இவர். இந்தியர்கள் தம் உரிமைகளைப் பெறுவதற்காகவும் சீர்திருத்தங்களைச் சட்டமாக்குவதற்காகவும் தம் வாழ்நாள் முழுவதும் போராடியவர். 'புதிய இந்தியாவின் விடிவெள்ளி' என்றும் புகழப்படுபவர். இவர் 1821இல் 'சம்பத கௌமுதி' என்னும் வங்க இதழை, மக்கள் கவனத்தைக் கவரத்தக்க வகையில் வெளிக்கொணர்ந்தார். சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்புவதற்காக இவ்விதழை அவர் பயன்படுத்திக் கொண்டார். 1822இல் 'மிரட் உல் அக்பர்' என்ற பாரசீக மொழி இதழையும் 'வங்க தூதன்' என்ற இந்தி இதழையும் தொடங்கினார். இதே காலத்தில் செராம்பூர் என்ற இடத்தில், கிறித்தவ இயக்கத்தினர் ஆங்கில மற்றும் வங்காள மொழிகளில் இதழ்கள் தொடங்கி இந்து மதத்தைக் குறைகூறி கருத்துகளை வெளியிட்டனர். இராம்மோகன் ராய் இதழ்களுக்கும் செராம்பூர் கிறித்தவ இதழ்களுக்கும் கடுமையான மோதல்கள் ஏற்பட்டன. 'பிராமணிக்கல் மேகசின்' என்ற ஆங்கில இதழை இராம்மோகன் ராய் கிறித்தவ இயக்கங்களுக்கு மறுப்பு தெரிவிப்பதற்காக வெளிக்கொணர்ந்தார்.

### யேஸ்டிங்சின் தாராள பத்திரிகைக் கொள்கை

மின்டோவுக்குப் பிறகு யேஸ்டிங்ஸ் தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்றார். இவருடைய தாராள சிந்தனை நோக்கினால் வெல்லெஸ்லி கொண்டு வந்த பத்திரிகைச்சட்டங்கள் 1818இல் விலக்கிக் கொள்ளப்பட்டன. தணிக்கை முறை ஒழிக்கப்பட்டது. யேஸ்டிங்சின் இந்த முடிவை இந்தியர்கள் வெகுவாகப் பாராட்டி வரவேற்றனர். ஆனால் வணிகக் குழும இயக்குநர்கள் யேஸ்டிங்சின் கொள்கைக்குத் தங்களுடைய மறுப்பைத் தெரிவித்தனர். பத்திரிகைச் சுதந்திரத்திற்குப் பச்சைக் கொடி காட்டிய முதல் ஆங்கில ஆளுநர் யேஸ்டிங்ஸ் தான். ஜேம்ஸ் சில்க் பக்கிங்காமும் இராம்மோகன் ராயும் பத்திரிகைச் சுதந்திரம் நிலைபெறுவதற்குத் தொடர்ந்து போராடிய போது அவர்களுக்கு ஆதரவு அளித்தவர் யேஸ்டிங்ஸ். வணிகக் குழுவினரின் நாடு கடத்தல் நடவடிக்கை பக்கிங்காமைப் பலமுறை அச்சுறுத்தியபோதிலும் யேஸ்டிங்சின் கருணையால் அவர்

காப்பாற்றப்பட்டார். அரசின் செயல்பாடுகள் பற்றிய சுதந்திரமான பத்திரிகை விவாதங்கள், ஆங்கில நிருவாகத்தை வலுப்படுத்த முடியும் என்று யேஸ்டிங்ஸ் நம்பினார்.

## ஜான் ஆடம்சின் 1823ஆம் ஆண்டு அவசரச் சட்டம் (ORDINANCE OF 1823)

யேஸ்டிங்ஸ் பத்திரிகைச் சுதந்திரத்தின்மீது கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கை, தற்காலிகத் தலைமை ஆளுநராக வந்த ஜான் ஆடம்சுக்கு இல்லை. அவர், பத்திரிகைகள் அரசின் செயல்பாடுகள் பற்றி நீதிபதிகள் நிலையில் நின்று கருத்துகள் தெரிவிப்பதையும் பொதுமக்கள் கருத்துக்கள் என்ற தலைப்பில் அரசு அதிகாரிகளின் நடவடிக்கைகளை விமர்சிப்பதையும் விரும்பவில்லை.

எனவே, பத்திரிகைகளின் செயல்பாடுகள் பற்றி 1822ஆம் ஆண்டில் மீண்டும் மறுபரிசீலனை செய்யப்பட்டது. இந்தியாவில் பத்திரிகைகளின் செயல்பாட்டைப் பற்றி ஆய்ந்து அறிக்கை அளிப்பதற்காக, சர் தாமஸ் மன்றோவை இந்திய அரசாங்கம் பணித்தது. அவர் தம்முடைய அறிக்கையில், "சுதந்திரமான இதழ்களும் அந்நியர் ஆட்சியும் ஒரு நாளும் ஒத்துப் போக முடியாது. இவை இரண்டும் ஒரே நேரத்தில் இணைந்திருக்கவும் முடியாது. இதற்குப் பொருத்தமான காரணமும் உண்டு. அந்நியர் ஆட்சியிலிருந்து நாட்டை விடுவிப்பதுவும் அந்த ஒரு குறிக்கோளுக்காக எவ்வித தியாகத்தையும் செய்யப் பத்திரிகை தயாராக இருப்பதுவும் ஆகும். இந்தியப் பத்திரிகைகளும் ஐரோப்பியர்களின் பத்திரிகைகளும் சுதந்திரமாக உலவிட நாம் அனுமதிப்போம் எனில், இத்தகைய விளைவுகள்தான் ஏற்படும். அறநெறியையும் சமயத்தைப் பற்றியும் போதிப்பதுதான் இந்தியப் பத்திரிகைகளின் நோக்கமாக இருக்கவேண்டுமே ஒழிய, வேறு எந்த முயற்சிகளிலும் அவை ஈடுபடக்கூடாது என நம்புகிறோம். அப்பத்திரிகைகளும் ஒரு குறிப்பிட்ட காலம்வரை இம்முறையில் இயங்கி வருதலில் மனநிறைவு அடையலாம். ஆனால், விரைவிலேயே அவர்கள், அரசியல் குறிக்கோள்களை அடைவதற்குப் பத்திரிகைகளைப் பயன்படுத்த அறிந்து கொள்வார்கள். தங்கள் நாட்டின் நிலையை இங்கிலாந்து நாட்டுடன் ஒப்பிட்டுப்பார்த்து நம்முடைய ஆதிக்கத்தைக் கவிழ்ப்பதற்கு முயல்வார்கள்."

"இந்தியாவில் இன்றைய நிலையில் சுதந்திரமான பத்திரிகைகளினால் ஏற்படக்கூடிய நன்மைகள் மிகவும் சொற்பம். அவையும் நிச்சயம் இல்லை. ஆனால் ஏற்படக்கூடிய கெடுதியோ அளவிட முடியாதது. பத்திரிகைத் துறை மிக சக்தி வாய்ந்த துறை. இதனை அரசு முழுக்கட்டுப்பாட்டின்கீழ் கவனத்துடன் வைத்திராவிடில் இந்நாட்டில் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்கு மிகப்பெரிய அபாயமாக உருவெடுத்துவிடும்" என ஆங்கில வணிகக் குழுவை எச்சரித்தார். தாமஸ் மன்றோவின் அறிக்கையை முழுமையாக ஏற்றுக்கொண்ட ஆங்கில அரசாங்கம், பத்திரிகைக்கான புதிய கட்டுப்பாடுகளைக் கொண்டு வந்தது. இச்சட்டம் ஜான் ஆடம்சின் 1823ஆம் ஆண்டு அவசரச்சட்டம் என அழைக்கப்படுகிறது. இச்சட்டத்தின்படி அரசின் உரிமம் பெறாமல் எந்த ஒரு அச்சகத்தையும் நிறுவக்கூடாது எனவும் அரசின் முன் அனுமதியின்றி எந்த ஒரு பத்திரிகையையும் நூலையும் வெளியிடக்கூடாது எனவும் ஆணை பிறந்தது. மேலும், அவ்வாறு உரிமம் பெறாத பத்திரிகைகளைத் தண்டிப்பதற்கு மாவட்ட நடுவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

## இராம்மோகன் ராய் எதிர்ப்பு

இச்சட்டம் பத்திரிகைச் சுதந்திரத்திற்கு எதிரானது என்று இராம்மோகன் ராய் எதிர்த்தார். இச்சட்டத்தை விலக்கிக் கொள்ள வேண்டும் என இரு விண்ணப்பங்களை அரசாங்கத்திடம் சமர்ப்பித்தார். இவை இரண்டும் 1823இல் அச்சிடப்பெற்று சிறு வெளியீடுகளாக வெளிவந்தன. இவரது இரு விண்ணப்பங்களும் உச்சநீதிமன்ற ஆலோசனைக் குழுவினால் மறுக்கப்பட்டன. இருப்பினும், இராம்மோகன் ராய் மனம் தளராமல் தமது வேண்டுகோளை இங்கிலாந்து அரசின் ஆலோசனைக் குழுவிற்கு அனுப்பினார். இச்சட்டத்தினால் இந்தியர்களின் கல்வி வளர்ச்சியும் மேலை நாட்டின் இலக்கிய அறிவும் தடைபடும் எனவும் வாதித்தார். மேலும் பத்திரிகை உரிமம் பெறுவதில் உள்ள சிக்கல்களையும் பெறப்பட்ட உரிமம் எந்த நேரமும் அரசாங்கத்தால் ரத்து செய்யப்படலாம் என்ற அச்சமும் இந்தியப் பத்திரிகை வளர்ச்சிக்கு ஒரு போதும் துணை செய்யாது என்றும் வாதிட்டார். ஆனால் இந்தப் பிரச்சினைகள் எதுவும் ஐரோப்பிய பத்திரிகைகளுக்கு இல்லை என்ற ஆங்கில அரசாங்கத்தின் ஒருதலைப்பட்சமான நிலையை அம்பலப்படுத்தினார்.

இவருக்கு ஆதரவாகப் பக்கிங்காமும் லண்டன் பிரிவி கவுன்சிலில் வழக்குத் தொடர்ந்தார். அவருடைய மனுவும் நிராகரிக்கப்பட்டது. பாரசீகம், வங்கமொழி மற்றும் பல இந்திய மொழிகளில் எழுதப்படுபவை இந்திய மக்களிடையே சுதந்திரமான கருத்தை உருவாக்கும் என இங்கிலாந்து பிரிவி கவுன்சில் கருதியது. பத்திரிகை உரிமக் கட்டுப்பாடு மிகவும் அவசியமென்ற முடிவை வெளியிட்டது. இராம்மோகன் ராய் முயற்சிகளும் அவர் காலத்தில் வெற்றியளிக்கவில்லை. ஆங்கில அரசின் கண்களுக்கு அவரின் நியாயம் புலப்படவில்லை.

இதற்கிடையில் 1826ஆம் ஆண்டு ஆங்கில வணிகக் குழுவின் இயக்குநர்கள் தமது வணிகக் குழுவில் பணியாற்றும் ஊழியர்கள் எந்த ஒரு பத்திரிகையுடனும் தொடர்பு வைத்துக் கொள்வதோ அல்லது எந்த ஒரு பத்திரிகைக்கும் ஆசிரியராகவோ அல்லது பத்திரிகைத் தொழிலில் பங்கு கொள்வதோ கூடாது என மேலும் தடைவிதித்தது.

## மெட்காப்சின் 1835ஆம் ஆண்டுச் சட்டம் (METCALFE'S ACT OF 1835)

வில்லியம் பெண்டிங்கும் அவருக்குப்பின் வந்த சர் சார்லஸ் மெட்காப்சும் பத்திரிகைகளின்மீது கனிவுடன் தாராளமான அணுகுமுறையைப் பின்பற்றினர். மெட்காப் இந்தியப் பத்திரிகைகளைச் சட்டங்களின் பிடியில் இருந்து விடுவித்தவர் எனப் புகழப்படுகின்றார். இவர் பத்திரிகைகளுக்கு உரிமம் வழங்கும் முறையை விரும்பவில்லை. இவர், ஆலோசனைக் குழுவில் சட்ட உறுப்பினராக இருந்த மெக்காலேவை ஒரு புதிய பத்திரிகை முன்வரைவைத் தயாரிக்கச் சொன்னார். மெக்காலே, தற்போது இருக்கும் சட்டங்கள் பாதுகாப்பு அற்றவையாகும். அரசு எடுத்த ஒடுக்குமுறைச் சட்டங்களும் அரசாங்கத்திற்குப் பாதுகாப்பைத் தரவில்லை. எனவே, புதிய சட்டவழிகளைக் கையாள வேண்டுமென விரும்பினார். இந்தியா முழுவதிலும் பத்திரிகைச் சட்டங்கள் ஒரே சீராக, செம்மையாக இருக்கவேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார். இவரது கருத்தை ஆளுநர் குழுவின் மற்ற உறுப்பினர்களான எம்.டி. பிரிஸ்பி, கர்னல் மோரிசன் போன்ற உறுப்பினர்கள் எதிர்த்தார்கள். இவர்கள் இந்திய பத்திரிகைகளின்மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் தொடர

வேண்டுமென வாதித்தார்கள். ஆனால், மெட்காப் இந்தியப் பத்திரிகைகளை ஆங்கிலேயப் பத்திரிகைகள் எனவும் இந்தியப் பத்திரிகைகள் எனவும் பாகுபடுத்த வேண்டாமென வேண்டினார். நாம் இயற்றும் பத்திரிகைச் சட்டம், இந்திய மக்களுக்குக் கருணை காட்டுவதாகவும் நம்பிக்கை தருவதாகவும் ஒற்றுமைக்கு வழி வகுப்பதாகவும் அமைய வேண்டுமென வேண்டினார். இதற்கு மாறாக நாம் நடந்தால் நீதி தவறியவர்கள் ஆவோம் என்றார். இந்தியர்களின் கருத்துக்களை அடக்கி வைத்து, ஆங்கில அரசாட்சியை நீடிக்க வைக்க வேண்டுமென்று நாம் விரும்பினால், குழப்பம்தான் மிஞ்சும் - நமது முயற்சிகள் தோல்வியைத்தான் சந்திக்கும் என எச்சரித்தார்.

மெட்காப்சின் பொருள் பொதிந்த கருத்துரைகள் குழுவின் உறுப்பினர்களை அமைதி அடையச் செய்தது. 1835ஆம் ஆண்டு பத்திரிகைச் சட்டம் நிறைவேறியது. இச்சட்டத்தின் மூலம் இந்தியா முழுவதிலும் பத்திரிகை உரிமம் பெறும் முறை ஒழிக்கப்பட்டது. பத்திரிகைகளின் தணிக்கைமுறையும் நீக்கப்பட்டது. இங்கிலாந்தில் உள்ளது போலவே இந்தியாவிலும் பத்திரிகைகளைப் பதிவு செய்தால் மட்டும் போதும் எனப் பத்திரிகைச் சட்டம் எளிதாக்கப்பட்டது.

இச்சட்டம் இந்தியர்களால் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டது. என்றாலும், வணிகக்குழுவின் இயக்குநர்கள் அதிருப்தி அடைந்தார்கள். விளைவு, மெட்காப்பை இங்கிலாந்திற்குத் திருப்பி அழைத்துக் கொண்டார்கள். ஆனால், அவர் இயற்றிய சட்டம் இந்திய வரலாற்றில் பத்திரிகைகளுக்கு முழு விடுதலை வழங்கிய சட்டம் என நிலைத்துவிட்டது. இந்தியப் பத்திரிகைச் சுதந்திரத்தின் தந்தையென மெட்காப் பாராட்டப்பட்டார். அவருக்கு நன்றி செலுத்தும் வகையில் கல்கத்தாவில் பொதுமக்கள் மெட்காப் பெயரில் மண்டபம் ஒன்றை நிறுவி அதில் நூலகம் ஒன்றை அமைத்தார்கள்.

இவருக்குப் பின் தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்ற ஆக்லந்து வணிகக் குழுவின் ஊழியர்கள் பத்திரிகைத் துறையில் தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது என்று இருந்த தடையையும் திரும்பப் பெற விரும்பினார். அதற்கென வணிகக் குழுவின் இயக்குநர்களோடு பேசி அவர்களின் ஒப்புதலைப் பெறுவதில் வெற்றியும் கண்டார்.

இவ்வாறு, இந்தியர்களும் ஆங்கில வணிகக்குழுவின் ஊழியர்களும் பத்திரிகை உரிமை பெற்றனர். ஆனால், 1857 ஆம் ஆண்டு இந்தியாவில் வெடித்த சிப்பாய்ப் புரட்சி இந்தியத் துணைக் கண்டத்தை உலுக்கியது. இந்த எதிர்பாராத அரசியல் சூழ்நிலை, மெட்காப்சின் பத்திரிகைச் சட்டம் நீண்டு நிலைத்திடத் தடையை உருவாக்கியது.

கிழக்கிந்திய வணிகக்குழு சிப்பாய்ப் புரட்சியை அடக்க முடியாமல் தம் ஆட்சி நீடிக்குமா என்ற நிலைக்குத் தள்ளப்பட்டது. தாய் அரசாங்கமான இங்கிலாந்தில் இருந்து புரட்சியை அடக்குவதற்கு அனைத்து உதவிகளும் கோரப்பட்டன. இங்கிலாந்து மகாராணியார் இந்தியாவிற்குத் தமது படைகளையும் தளவாடங்களையும் புரட்சியை ஒடுக்க அனுப்பினார்.

தலைமை ஆளுநராக இருந்த கானிங் பிரபு இந்தியாவில் வணிகக்குழுவின் இறையாண்மையைக் காப்பதற்காக 1857 ஆம் ஆண்டு உரிமச் சட்டத்தைப் பிரகடனப்படுத்தினார். இச்சட்டத்தின்படி பத்திரிகை உரிம முறை மீண்டும் அமல் படுத்தப்பட்டது. அச்சகம் வைத்துக் கொள்வதற்குத் தலைமை ஆளுநருக்கு உரிமம் கோர விண்ணப்பம் அனுப்புதல் வேண்டும். உரிமங்களை வழங்கவோ மறுக்கவோ தலைமை ஆளுநருக்கு அதிகாரம் உண்டு. அவர்தம் முடிவுக்கு எந்தவிதக் காரணமும் கூறத் தேவைஇல்லை. இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஆங்கில அரசாங்கத்தின் நடவடிக்கைகளுக்கு உள்நோக்கம் கற்பிக்கும் செய்திகளையோ அல்லது இழுக்குநேரும் வகையிலோ செய்திகள் எழுதக்கூடாது எனத் தடை விதிக்கப்பட்டது. அவ்வித நடவடிக்கைகளில் ஈடுபடும் பத்திரிகைமீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படும். இம்முறை, ஐரோப்பிய பத்திரிகைகளுக்கும் இந்தியப் பத்திரிகைகளுக்கும் சமமாகச் செயல்படுத்தப்படும் என அறிவிக்கப்பட்டது. ஆனால் இச்சட்டம் அடுத்த ஆண்டிலேயே கைவிடப்பட்டது.

## இந்தியக் குற்றவியல் நடைமுறைச் சட்டம் (INDIAN PENAL CODE 1869)

1860ஆம் ஆண்டு ஆங்கில அரசாங்கம் அவதூறு செய்திகள் வெளியிடுபவரைத் தண்டிப்பதற்கும், ஆபாசமான குற்றங்கள் புரிவோரைத் தண்டிப்பதற்கும் இயற்றப்பட்ட குற்றப்பிரிவுகள் பத்திரிகைகளுக்கும் பொருந்தும் என அறிவித்தது. அதன்படி

127ஆவது A பிரிவு, 1870ஆம் ஆண்டு குற்றவியல் சட்டத்தில் இணைக்கப்பட்டு அவதூறு செய்திகளைத் தண்டிப்பதற்கு அதிகாரம் தந்தது. இக்குற்றம் புரிபவர்களுக்கு அபராதம் விதிப்பதோடு, ஆயுள் தண்டனையோ (அல்லது) குறைந்த கால தண்டனையோ விதிக்கப்படும்; அல்லது மூன்று ஆண்டுகள் சிறைத்தண்டனையும் அபராதமும் விதிக்கப்படும். பல்வேறு மக்களிடையே பகையை ஏற்படுத்துதல், சமய வெறியைத் தூண்டுதல், நாட்டு ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவித்தல் போன்ற குற்றம் புரிவோரைத் தண்டிப்பதற்கு 153A, 153B, 295A போன்ற பிரிவுகள் இச்சட்டத்தில் சேர்க்கப்பட்டன.

## புத்தகப் பதிவுச் சட்டம் 1867
## (REGISTRATION OF BOOKS ACT 1867)

இச்சட்டம் பத்திரிகை மற்றும் புத்தகப்பதிவுச் சட்டம் என்று அழைக்கப்படுகிறது. இது இன்றுவரை நடைமுறையில் உள்ளது. இதன் நோக்கம் பத்திரிகைச் சுதந்திரத்தின்மீது அரசின்பிடி தொடர்ந்து இருக்கவேண்டும் என்பது அன்று. அச்சுக்கூடங்களையும் செய்தித் தாள்களையும் ஒழுங்கு படுத்துவதற்கும் புத்தக வெளியீடுகளைப் பாதுகாப்பதற்கும் எடுக்கப்பட்ட நடவடிக்கை ஆகும். இதன் முக்கிய நோக்கம் ஊர்பேர் தெரியாத பத்திரிகையும் புத்தகமும் வெளிவருவதைத் தடுப்பது ஆகும்.

## சுதேசமொழிச் சட்டம் 1878
## (THE VERNACULAR PRESS ACT 1878)

நார்த்புரூக் பிரபு தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்ற போது சர் ஜார்ஜ் கேம்பெல் வங்காள ஆளுநராகப் பணிபுரிந்தார். இந்தியமொழிப் பத்திரிகை வளர்ச்சியும் போக்கும் ஆங்கில அரசாங்கம் நிலைபெறுவதைத் தகர்க்கும் முறையில் உருவாகத் தொடங்கின. பொதுவாக வங்காளத்தில், குறிப்பாக அமிர்தபஜார் பத்திரிகை, தலைமை ஆளுநர் பற்றியும் மாநில ஆளுநர் பற்றியும் வணிகக் குழுவின் செயல்பாடுகள் பற்றியும் கடுமையான முறையில் எழுதி வந்தது. ஆகவே இவற்றைத் தடுப்பதற்குத் தற்போது இயற்றப்பட்ட 124ஆவது Aபிரிவு குற்றவியல் சட்டம் போதுமானதாக இல்லை என நார்த்புரூக் பிரபு கருதினார். ஆனால், அவர் இருக்கும் வரையில் எந்த நடவடிக்கையும் எடுக்க முடியவில்லை.

அவருக்குப்பின் தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்ற லிட்டன் பிரபு இந்திய மொழிப் பத்திரிகைகளை ஒடுக்குவதற்காகச் சீற்றத்துடன் பாய்ந்தார். ஆங்கிலப் பத்திரிகைக்கும் இந்தியப் பத்திரிகைக்கும் வேறுபாடு ஏதும் இல்லை என்ற கானிங்பிரபுவின் கருத்தை இவர் ஏற்க மறுத்தார். இந்திய மொழிப் பத்திரிகைகள் ஆங்கில மொழிப் பத்திரிகைகளை விடவும் கடுமையாக அரசின்மீது வெறுப்புணர்ச்சியைத் தூண்டிவிடுகின்றன. எனவே, இந்திய மொழிப் பத்திரிகைகளின் சட்டவிரோதப் போக்கைக் கட்டுப்படுத்துவதற்கு இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 124ஆவது Aபிரிவு போதுமானதாக இல்லை என லிட்டன் பிரபு எண்ணினார். எனவே, 1878ஆம் ஆண்டில் மார்ச்சு 14ஆம் நாள் இந்திய சுதேச மொழிப் பத்திரிகைச் சட்டத்தை இயற்றினார். 1813ஆம் ஆண்டுச் சட்டத்தின் கூறுகள் மீண்டும் உயிர் பெற்று வந்தன. இச்சட்டத்தின் மூலம் பத்திரிகையை அச்சிடுவோரும் வெளியிடுவோரும் பொறுப்புத்தொகை கட்ட வேண்டும் எனவும் அரசு விரோதச் செய்திகளையும் பல்வேறு இனங்களுக்கிடையே பகை உணர்வுகளைத் தூண்டக்கூடிய செய்திகளையும் அச்சிடவோ, வெளியிடவோ செய்வதில்லை எனவும் பத்திரிகை வெளியீட்டாளரிடமும் அச்சிடுவோரிடமும் உறுதிமொழிப் பத்திரம் எழுதி வாங்க மாவட்ட நடுவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

இவ்விதிகளுக்கு மாறாகப் பத்திரிகைகள் செய்த வெளியீட்டில், அரசாங்கம் அப்பத்திரிகை செலுத்தியுள்ள பொறுப்புத் தொகையைப் பறிமுதல் செய்யலாம். அச்சு இயந்திரத்தைக் கைப்பற்றலாம். குற்றங்களை, நீதிமன்ற வழிமுறைகளைப் பின்பற்றாமல், மாவட்ட நடுவர்கள் ஒரே அமர்வில் தன்னிச்சையாக விசாரணை செய்து தண்டனை வழங்க இச்சட்டம் அதிகாரம் அளிக்கிறது.

அதே நேரத்தில் இச்சட்டத்தின் பிடியில் இருந்து தப்புவதற்குப் பத்திரிகைகளுக்கு ஓர் அறிவுரையும் தரப்பட்டது. செய்தித்தாளின் நகலை அச்சிடுவதற்கு முன்னர் அரசாங்கத் தணிக்கையாளரிடம் காட்டி, அவர் நிராகரிக்கும் செய்திகளை நீக்கிவிட்டு, மற்றவைகளை வெளியிடலாம் என அறிவுறுத்தப்பட்டது. அச்சட்டத்தின்படி, அவர்களின் தீர்ப்புக்கு எதிராக நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்வதற்கு இடம் அளிக்கவில்லை.

மேலும் இச்சட்டம் ஆங்கில மொழியில் வெளிவரும் பத்திரிகைகளுக்குப் பொருந்தாது எனவும் சென்னை மாகாணத்தைத் தவிர இந்தியாவின் மற்ற மாநிலங்களில் செயல்படுத்தப்படும் எனவும் அறிவிக்கப்பட்டது.

இச்சட்டம், தனி மனிதனின் அடிப்படைச் சுதந்திரத்தைப் பட்டப் பகலில் பறித்தது. நாடெங்கும் கடும் எதிர்ப்பு அலை வீசியது. படித்த இந்தியர்கள் இச்சட்டத்தைக் கடுமையாகக் கண்டித்தார்கள். வங்காளத்தில் மட்டும் இச்சட்டம் தீவிரமாகச் செயல் படுத்தப்பட்டது. எனவே, வங்காளத்தில் மக்கள் பெரும் கிளர்ச்சியில் இறங்கினார்கள்.

இச்சட்டத்தின் கடுமை தாங்க முடியாமல் பல சுதேசி மொழி இதழ்கள், ஆங்கில இதழ்களாக மாறின. குறிப்பாக, 1868இல் இருந்து வெளிவந்து கொண்டிருந்த அமிர்தபஜார் என்ற வங்க மொழி இதழ் ஆங்கிலப் பத்திரிகையாக மாறியது.

சென்னை மாநிலத்தில் இச்சட்டம் அமலாக்கப்படவில்லை. எனினும், இச்சட்டத்தைச் சென்னைப் பத்திரிகைகள் கடுமையாக எதிர்த்தன. சுதேசாபிமானி என்ற இதழ் 1.4.1878ஆம் தேதி இதனைக் கடுமையாகச் சாடியது. சுதேச மொழிப் பத்திரிகைகளுக்கு இச்சட்டம் சாவுமணியாகும் என எழுதியது. இதே ஆண்டு செப்டம்பர் மாதத்தில் தான் இந்து ஆங்கில நாளிதழாக வெளிவரத்தொடங்கியது. இந்தியாவின் பல பகுதிகளிலும் படித்த இந்தியர்கள் ஆங்கில மொழிப் பத்திரிகைகளைத் தொடங்கினர். இது லிட்டன் பிரபுவின் சட்டத்தினால் ஏற்பட்ட எதிர்விளைவு ஆகும். இச்சட்டம் நான்கு ஆண்டுகளே நீடித்தது.

## சுதேசமொழிச் சட்டம் ரத்து 1882
## (REPEAL OF VERNACULAR PRESS ACT 1882)

ரிப்பன் பிரபு தலைமை ஆளுநராகப் பொறுப்பேற்றபின், 1882ஆம் ஆண்டு ஜனவரி 10ஆம் நாள் இந்திய சுதேச மொழிச்சட்டம் ரத்து செய்யப்பட்டது. இங்கிலாந்தில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. கிளாஸ்டோன் புதிய பிரதமராகப் பொறுப்பேற்றார். கிளாஸ்டோன் - ரிப்பன் பிரபுவின் கூட்டுமுயற்சியால், லிட்டன் பிரபுவின் 1878ஆம் ஆண்டுக் கறுப்புச்சட்டம் நீக்கப்பட்டது. அவர்கள், 1870ஆம் ஆண்டு குற்றவியல் சட்டத்தில் சேர்க்கப்பட்ட 124A பிரிவில் உள்ள கட்டுப்பாடுகளே போதும் எனக் கருதினர். இந்நிலை 1908ஆம் ஆண்டு வரை நீடித்தது.

## 1898ஆம் ஆண்டு குற்றவியல் நடைமுறைச் சட்டம் (CRIMINAL PROCEDURE CODE 1898)

இச்சட்டம் குற்றங்களைத் தண்டிப்பதற்குத் தொகுக்கப்பட்ட பொதுவான சட்டம் ஆகும். ஆனால், இச்சட்டத்தில் சில பிரிவுகள் பத்திரிகைத் தொடர்பான குற்ற நடைமுறைக்கும் பொருந்தும் வகையில் இணைக்கப்பட்டது. 124A, 153A, 295A ஆகிய குற்றப்பிரிவுகளைப் பத்திரிகைகள்மீது செயல்படுத்துவதற்கும், அவற்றின் அடிப்படையில் பத்திரிகைகள் அல்லது வெளியீடுகளைத் தேடுதல் வேட்டை நடத்துவதற்கும் கைப்பற்றுவதற்கும் உரிய வழிமுறைகள் இச்சட்டத்தில் இணைக்கப்பட்டன.

## 1908ஆம் ஆண்டு பத்திரிகைக் குற்றத்தூண்டல் தடுப்புச் சட்டம் (NEWS PAPERS (INCITEMENT TO OFFENCES) ACT 1908)

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் இந்திய தேசிய காங்கிரசின் தோற்றம் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. பத்திரிகைகள் அரசியல், சமூகப் பொருளாதாரக் கருத்துக்களை முன்வைத்து எழுச்சி நடை போட்டன. இந்தியர்களின் அடிமைத் தளையை உடைத்தெறியவும் ஒன்றுபட்ட இந்தியா உருவாகவும் பல்வேறு அரசியல் இயக்கங்கள் மக்கள் மொழியில் பேசத் தொடங்கின. எல்லா இந்தியச் சுதேசிய மொழிகளிலும் பத்திரிகைகள் வெளிவரத் தொடங்கின. இந்தியத் துணைக் கண்டத்தின் எல்லாப் பகுதிகளிலும் பத்திரிகைகள் மக்களுக்கு அரசியல் கல்வியைப் போதித்தன. காங்கிரஸ் கட்சியின் பல முன்னணித் தலைவர்களும் தங்கள், தங்கள் மொழிகளில் பத்திரிகைகளைத் தொடங்கி ஆசிரியர்களாகவும் இருந்தனர். தொடக்க காலத்தில் காங்கிரஸ் இயக்கத்திற்கும் ஆங்கில அரசாங்கத்திற்கும் அதிக கருத்து வேறுபாடு இல்லாமல் இருந்தது. ரிப்பன் பிரபு அரசப் பிரதிநிதியாக இருந்த காலத்தில், இந்திய தேசிய காங்கிரசின் இரண்டாவது மாநாட்டில் கலந்து கொண்டவர்களுக்கு விருந்தளித்தார். அரசாங்க ஆங்கில அதிகாரிகளும் இந்திய மக்களின் பொதுக்கருத்தைத் தெரிந்து கொள்வதற்குக் காங்கிரஸ் இயக்கத்தைப் பயன்படுத்தலாம் என்ற கருத்தைத் தெரிவித்தனர்.

ஆனால் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கர்சன் பிரபு அரசப் பிரதிநிதியாக இருந்த காலத்தில், இந்திய மக்களைத்

தாராளமான கண்ணோட்டத்தோடு அணுகவில்லை. அவர் எடுத்த நிருவாக நடவடிக்கைகள் தேசிய உணர்வையும் பத்திரிகை வளர்ச்சியையும் ஒடுக்குவதற்குப் பதிலாக வேகப்படுத்தின. இந்திய தேசிய காங்கிரஸ் தீவிரவாதிகளின் பேச்சாலும் எழுத்தாலும் அவர்களின் ஆதிக்கத்தாலும் வளரத் தொடங்கியது. அதன் பின்பு தீவிரமான தேசிய உணர்வு நாடெங்கும் பரவியது. கர்சனின் வங்கப்பிரிவினை இந்தியா முழுவதும் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. பிரிவினையை எதிர்த்து அரசியல் இயக்கங்கள் கிளர்ச்சி செய்தன. இந்தியப் பத்திரிகைகள் ஆங்கில அரசைக் கடுமையாகச் சாடின. அரசாங்கத்தின் வன்முறையை எதிர்ப்பதற்குத் தீவிரமான சில இளைஞர்கள் வன்முறை நடவடிக்கைகளில் ஈடுபடுவது தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது. இந்நிலையில் ஆங்கில அரசு, பத்திரிகைகள் மூலம் தேசிய உணர்ச்சி பரவாமல் இருக்க, அடக்குமுறை நடவடிக்கைகளில் ஒன்றாகப் பத்திரிகைக் குற்றத்தூண்டல் தடுப்புச்சட்டத்தை அமல் படுத்தியது. இச்சட்டத்தின் மூலம் குற்றங்கள் புரியத் தூண்டும் வகையில் எழுதும் பத்திரிகைகளின் பொறுப்பாளர்களைத் தண்டிக்கவும் கடுமையான குற்றங்கள் புரிந்தவர்களை விரைந்து விசாரித்துத் தண்டிக்கவும் மாவட்ட நடுவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மாவட்ட நடுவர்கள் அம்மாதிரியான பத்திரிகைகளைக் கைப்பற்றி வன்முறையைத் தூண்டும் அல்லது கொலைக் குற்றத்தைத் தூண்டச் செய்யும் செய்திகளை வெளியிட்டு இருக்கிறது என்று அவர் திருப்தி அடைந்தாலே, அப்பத்திரிகைகளின் பொறுப்பாளர்களைத் தண்டிக்க அதிகாரம் வழங்கியது இச்சட்டம்.

இச்சட்டத்தின்படி எல்லாப் பத்திரிகைகளும் அரசாங்கத்திடம் பிணைத்தொகை ரூ.500/- முதல் ரூ.2000/- வரை கட்டவேண்டும் எனவும் சட்டத்தை மீறி அப்பத்திரிகைகள் செய்தி வெளியிட்டால் அப்பிணைத் தொகையை இழக்க நேரிடும் எனவும் அறிவிக்கப் பட்டது. அவ்வாறு பிணைத்தொகையை இழந்து பத்திரிகைகள் மீண்டும் பதிப்பிக்கப்படவேண்டுமானால், பிணைத்தொகையாக ரூ.1000/- முதல் ரூ.10000/- வரை அரசு நிர்ணயிக்கும் தொகையைக் கட்ட வேண்டி வரும். ஒரு பத்திரிகை மீண்டும் அக்குற்றத்தைச் செய்தால், அப்பிணைத் தொகையுடன் அச்சகத்தையும் பறிமுதல் செய்ய இச்சட்டம் அதிகாரம் வழங்கியது. அரசாங்கத்தின் தீர்ப்பை

எதிர்த்து 15 நாட்களுக்குள் உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்து கொள்ள இச்சட்டம் பத்திரிகைகளுக்கு உரிமை அளித்தது.

இதன் விளைவாகத் தேசிய இயக்கத்தைத் தீவிரமாக ஆதரித்த பல பத்திரிகைகள் பிணைத்தொகையை இழந்தன. அவற்றில் 'இந்தியா' என்ற தமிழ்ப் பத்திரிகையும் 'நியூ இந்தியா' என்ற ஆங்கிலப் பத்திரிகையும் குறிப்பிடத்தக்கவை. இந்தியா என்ற தமிழ்ப் பத்திரிகையில் 1908ஆம் ஆண்டு மே 2, மே 23, ஜூன் 27 ஆகிய இதழ்களில் தேசிய உணர்ச்சியைத் தூண்டும் கட்டுரையை வெளியிட்ட காரணத்தால் அப்பத்திரிகையின் ஆசிரியரான எம். சீனிவாச ஐயங்காருக்கு ஐந்து ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை அளிக்கப்பட்டது. யுகாந்தர், சந்தியா, வந்தே மாதரம் போன்ற பத்திரிகைகள் வெளிவராமல் நின்றுவிட்டன.

## இந்தியப் பத்திரிகைச் சட்டம் 1910 (THE INDIAN PRESS ACT 1910)

இச்சட்டம், வன்முறை மற்றும் அரசு நிந்தனை செயல்களைத் தடுப்பதற்காக விரிவான பல பிரிவுகளை உள்ளடக்கி 1910ஆம் ஆண்டு அமல்படுத்தப்பட்டது. 1908ஆம் ஆண்டு மற்றும் 1910ஆம் ஆண்டு வெளியான இரண்டு சட்டங்கள், புரட்சிகரமான நடவடிக்கைகளைத் தடுப்பதற்காக இயற்றப்பட்டவை ஆகும். இச்சட்டங்களின்படி பத்திரிகை அல்லது அச்சக உரிமையாளர்களிடமிருந்து பிணைத் தொகையைப் பெறவும், குற்றச் செயலில் ஈடுபட்டால் பிணைத் தொகையைப் பறிமுதல் செய்யவும் வழிவகை செய்யப்பட்டது. இச்சட்டத்துடன் இதனைத் தொடர்ந்து 1913ஆம் ஆண்டு குற்ற சட்டத்திருத்தமும் இந்தியப் பாதுகாப்பு ஒழுங்கு முறைச் சட்டங்களும் முதல் உலகப்போருக்கு முன்பு பிரகடனப்படுத்தப்பட்டன. சுங்க அதிகாரிகளும் அஞ்சலக அதிகாரிகளும் சந்தேகத்துக்குரிய பொருள்களையும் ஆட்சேபகரமான செய்திகள் அடங்கிய கட்டுகளையும் கைப்பற்றி மாநில அரசாங்கத்திடம் ஒப்படைக்க இச்சட்டங்கள் அதிகாரம் வழங்கின. இச்சட்டம் முதல் உலகப்போரின் போது கடுமையாக அமல்படுத்தப்பட்டது. பல பத்திரிகைகள்மீதும் அச்சுக்கூடங்கள்மீதும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு அவர்களின் பிணைத்தொகைகள் பறிமுதல் செய்யப்பட்டன.

## 1922ஆம் ஆண்டு பத்திரிகைச் சட்ட ரத்து மற்றும் திருத்தச் சட்டம்
## (THE PRESS LAW REPEAL AND AMENDMENT ACT 1922)

ஆங்கில அரசு, முதல் உலகப்போருக்குப் பின்பு 1921ஆம் ஆண்டு இந்தியச் சட்ட உறுப்பினர் சர் தேஜ் பகதூர் சப்ரு தலைமையில் அமைக்கப்பட்ட குழுவை, 1908ஆம் ஆண்டு மற்றும் 1910ஆம் ஆண்டு பத்திரிகைச் சட்டங்களை மறு ஆய்வு செய்யுமாறு பணித்தது. இக்குழுவின் பரிந்துரைப்படி, புரட்சிகரமான இயக்கங்களும் பேச்சுகளும் தற்போது காணப்படாத நிலையில் அவற்றைக் கட்டுப்படுத்த இயற்றப்பட்ட சட்டங்கள் (1908, 1910) இனித் தேவை இல்லை என அரசு கருதியது. எனவே, அவ்விரு சட்டங்களும் ரத்து செய்யப்பட்டன. ஒருசில திருத்தங்களுடன் 1922ஆம் ஆண்டு புதிய சட்டம் அமல்படுத்தப்பட்டது. இதன்படி பத்திரிகைகளைப் பறிமுதல் செய்வதற்கும் அரசு நிந்தனை வெளியீடுகளைக் கைப்பற்றுவதற்கும் புத்தகப் பதிவுச் சட்டத்திலும் கடல் சுங்கவரிச் சட்டத்திலும் அஞ்சல் அலுவலகச் சட்டத்திலும் தேவையான திருத்தங்கள் சேர்க்கப்பட்டன. இச்சட்டம் 1922ஆம் ஆண்டு பத்திரிகைச் சட்ட ரத்து மற்றும் திருத்தச் சட்டம் என அழைக்கப்பட்டது.

## 1923ஆம் ஆண்டு அலுவல் இரகசியச் சட்டம்
## (THE OFFICIAL SCERETS ACT 1923)

நாட்டின் பாதுகாப்பைக் கருதி, நாட்டின் பாதுகாப்புக்கு எதிராக இரகசியச் செய்திகளைப் பரப்புவதையும் வெளியிடுவதையும் பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிப்பதையும் தடுப்பதற்கு இச்சட்டம் கொண்டுவரப்பட்டது.

## 1930ஆம் ஆண்டு பத்திரிகை அவசரச் சட்டம்
## (THE PRESS ORDINANCE ACT 1930)

1927ஆம் ஆண்டில் இருந்து 1930 வரை இந்திய அரசியலில் பல நிகழ்ச்சிகள் நடந்தன. மோதிலால் நேரு தலைமையில் இந்தியர்களுக்கு என உருவாக்கப்பட்ட தன்னாட்சி அரசியல் அமைப்புச் சட்டம் பல அடிப்படை உரிமைகளை அரசின் முன் வைத்தது. 1929ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பூரண சுயாட்சித் தீர்மானம், மகாத்மா காந்தியின் சட்ட மறுப்பு இயக்கம் மற்றும் தேசிய

பத்திரிகைகளின் நடவடிக்கைகள் போன்றவை ஆங்கில அரசாங்கத்தைப் பெரிதும் அச்சத்திற்கு உள்ளாக்கின. எனவே, ஆங்கில அரசு விடுதலைப்போராட்ட சூழ்நிலையில் அரசாங்கத்தின் இறையாண்மையைக் காப்பாற்றுவதற்காக, ரத்து செய்யப்பட்ட 1910ஆம் ஆண்டின் பத்திரிகைச் சட்டத்தின் கடுமையான பிரிவுகளை உள்ளடக்கி 1930ஆம் ஆண்டு புதியதொரு அவசரச்சட்டத்தைப் பிரகடனப்படுத்தியது. இதனால், மீண்டும் அடக்குமுறைச் சட்டங்கள் கடுமையாக்கப்பட்டு இந்தியப் பத்திரிகைகள்மீது ஏவப்பட்டன.

## 1931ஆம் ஆண்டு இந்தியப் பத்திரிகை (அவசரகால அதிகாரங்கள்) சட்டம் (THE INDIAN PRESS (EMERGENCY POWERS) ACT 1931)

பயங்கரவாத நடவடிக்கைகளைத் தடுப்பதற்காக இச்சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி மாகாண அரசுகள் பிணைத்தொகையைக் கட்டும்படி பத்திரிகைகளை ஆணையிடலாம். அப்பத்திரிகைகள் இச்சட்டத்தின் நான்காவது விதிப்படி அரசாங்கத்திற்கு எதிராக வெறுப்பு ஏற்படும் வகையில், அல்லது அரசை நிந்தனை செய்யும் வகையில், அல்லது ஒரு பிரிவினர் இடையில் பகையைத் தூண்டும் வகையில், அரசு ஊழியர்கள் தங்கள் கடமையிலிருந்து விலகவோ கடமையைச் செய்யாமல் தவறவோ தூண்டும் வகையில் செய்திகளை வெளியிடுமானால் அப்பத்திரிகைகளின் பிணைத்தொகையைக் கைப்பற்ற அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. மேலும், இச்சட்டம் மாநில அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட காவல் அதிகாரிக்கு உறுதிமொழி அளிக்காத அச்சுக்கூடங்களையும் அதிகாரப்பூர்வமற்ற பத்திரிகைகளையும் பறிமுதல் செய்வதற்கு அதிகாரம் வழங்குகின்றது. அம்மாதிரியான பத்திரிகைகளுக்கு அபராதம் விதிக்கவும் ஆறு மாதங்கள் வரை சிறைத்தண்டனை விதிக்கவும் இச்சட்டம் வழி வகுக்கின்றது. அவர்கள் அரசாங்கத்தின் தண்டனையை எதிர்த்து நீதிமன்றத்தில் விண்ணப்பிக்கவும் இடமளிக்கின்றது. இச்சட்டத்தின் மூலம் மாநில அரசாங்கங்கள், சட்ட மறுப்பு இயக்கத்தில் பங்கெடுக்கும் தலைவர்களின் பெயர்கள் மற்றும் படங்களையும் வெளியிடுவதற்குத் தடை விதித்தது. காங்கிரஸ் கட்சியின் பிரச்சாரங்களில் ஈடுபட்டுக் கைதானவர்களின் பெயர்களையும் சிறையில் இருந்து அவர்கள் தரும் செய்திகளையும் ஒரு சார்பாக அரசுக்கு

எதிராகப் பெரிதுபடுத்தப்பட்ட செய்திகளையும் ஊர்வலங்கள், கூட்டங்கள் பற்றிய விளம்பரங்களையும் சட்டமறுப்பு இயக்கத்தை ஆதரிக்கும் வகையில் செய்திகள் வெளியிடுவதையும் தடைசெய்தன.

இச்சட்டத்தின் மூலம் ஆங்கில அரசாங்கம் பல பத்திரிகைகள்மீது நடவடிக்கை எடுத்தது. இச்சட்டத்தின்கீழ், பாம்பே கிரோனிக்கல், ஆனந்த பஜார், ப்ரீ பிரஸ் ஜெர்னல், சுதேசமித்திரன், தமிழ்நாடு, சுதந்திரச்சங்கு, ஊழியன், இராஜகுலதீபிகை, நவசக்தி போன்ற பத்திரிகைகளின்மீது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

## 1932ஆம் ஆண்டு அயல்உறவுச் சட்டம்
## (THE FOREIGN RELATIONS ACT 1932)

இச்சட்டத்தின் நோக்கம் ஆங்கில அரசாங்கத்திற்கும் அதன் நேச நாடுகளுக்கும் இடையே நிலவிவரும் நல்லுறவைக் கெடுக்கும் வகையில் செயல்படும் பத்திரிகைகளைத் தண்டிப்பதாகும். செய்திப் பத்திரிகையிலோ அல்லது புத்தகத்திலோ அல்லது வேறு எந்த ஆவணத்திலோ அரசாங்கத்தின் அயலுறவுகளைப் பற்றி அவதூறு செய்யும் வகையில் எழுதினால் அல்லது வெளியிட்டால் நீதிமன்ற விசாரணைக்கு உட்படுத்தப்பட்டுத் தண்டிக்கப்படுவர் என இச்சட்டம் அறிவித்தது.

## 1934ஆம் ஆண்டு இந்திய மாநிலங்கள் பாதுகாப்புச் சட்டம்
## (THE INDIAN STATES (PROTECTION) ACT 1934)

இச்சட்டத்தின் நோக்கம், ஆங்கில இந்தியாவில் இருந்து வெளிவரும் பத்திரிகைகளில் இந்திய சுதேச மாநிலங்களின் நிருவாகத்தைப் பற்றிய காரணமற்ற தாக்குதல்களைத் தடுப்பதுதான். இதன்மூலம் இந்திய மாநிலங்களில் குழப்பம் விளைவிப்பதையும் வெறுப்பைத் தூண்டுவதையும் தடுப்பதற்கு அரசுக்கு அதிகாரம் தரப்பட்டது.

## 1939ஆம் ஆண்டு இந்தியப் பாதுகாப்புச் சட்டம்
## (THE DEFENCE OF INDIA ACT 1939)

இரண்டாம் உலகப்போரின்போது எழுந்த அரசியல் சூழலை எதிர்கொள்வதற்காக இச்சட்டம் ஆங்கில அரசாங்கத்தால் இயற்றப்பட்டது. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி இந்திய பத்திரிகைகளைக்

கட்டுப்படுத்த ஆறு ஆண்டு காலத்திற்கு இச்சட்டம் வழி அமைத்தது. இதன்படி பாதுகாப்பு விதிகளை மீறிய பத்திரிகைகள்மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது. இச்சட்டமும் விதியும் இரண்டாவது உலகப்போர் முடிந்தவுடனேயே முடிவுக்குக் கொண்டு வரப்பட்டன.

இவ்வாறாகக் கிழக்கிந்திய வணிகக்குழு நிருவாகத்திலும் பின்னர் இங்கிலாந்து அரசாங்கத்தின் நேரடி ஆட்சியிலும் பல்வேறு பத்திரிகைக் கட்டுப்பாடுகள், சட்டங்கள் இயற்றப்பட்டன. தொடக்கத்தில் பத்திரிகைகள் வணிகக் குழு, ஆங்கில அரசாங்கம் ஆகியவற்றின் அத்துமீறிய செயல்களைச் செய்திகளாக வெளியிட்டன. பொதுமக்களின் கருத்தையும் மறுப்பையும் உடன் தெரிவித்தன. காலப்போக்கில் பத்திரிகைகள் புரட்சிகரமான கருத்துகளையும் அரசியல் விழிப்புணர்வையும் ஒலிக்கத் தொடங்கின. எனவே, அவை ஆங்கில நிருவாகத்திடமிருந்து பல்வேறு சட்டங்களையும் தண்டனைகளையும் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. பத்திரிகைகள் நிலைத்து இருப்பதற்காகவும் அவற்றின் பங்களிப்பைச் சமுதாயத்திற்கு வழங்குவதற்காகவும் ஒரு நெடிய போராட்டத்தை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. தேசிய பத்திரிகைகளும் சுதேச மொழிப் பத்திரிகைகளும் அந்நிய ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெறுவதற்காக மக்களுக்கு அரசியல் கல்வியைப் புகட்டி விழிப்புணர்வை ஏற்படுத்தின. வணிகக்குழுவின் தலைமை ஆளுநர்கள் மற்றும் இங்கிலாந்து அரசின் அரசப் பிரதிநிதிகள் அனைவரும் எல்லா நேரங்களிலும் பத்திரிகைகள்மீது வெறுப்பு கொண்டிருக்க வில்லை. பல ஆளுநர்கள் அரசியல் சூழ்நிலையால் ஒடுக்குமுறைச் சட்டங்களை இயற்றினாலும் சில தாராளநோக்கு கொண்ட ஆங்கிலேயர்கள் இந்தியப் பத்திரிகைகள்மீது விதிக்கப்பட்ட தடைகளை உடைத்தெறிந்து பத்திரிகைச் சுதந்திரத்திற்கு அயராது பாடுபட்டனர். அதற்காகப் பல இழப்புகளையும் துணிவோடு தாங்கிக்கொண்டனர்.

இந்திய தேசிய காங்கிரஸ் இயக்கம் தோன்றிய பிறகு சுதேச மொழி பத்திரிகைகள்மீது எத்தனையோ கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டாலும் அவைகள் அடுத்தடுத்து வெளிவந்து கொண்டு தான் இருந்தன. இந்தியத் தேசத் தலைவர்களும் பத்திரிகை மூலம் ஆங்கில அரசாங்கத்திற்கு எதிராக அச்சமின்றி மக்களைத் திரட்டினர். அதற்குப் பரிசாகக் கடுமையான தண்டனைகளை ஏற்க வேண்டிய

சூழ்நிலை அடிக்கடி ஏற்பட்டது. நாடு கடத்தல், சிறைத்தண்டனை, நீதிமன்ற விசாரணை, பத்திரிகை பறிமுதல், பிணைத்தொகை இழப்பு, சொத்துக்கள் பறிமுதல், சோக வெள்ளத்தில் குடும்பமே மூழ்கும் சூழ்நிலை போன்ற சொல்லொணா இன்னல்களைத் துணிச்சலோடு சந்தித்தனர்.

இந்தியா சுதந்திரம் அடைந்த பின்னர் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தில் தனிமனிதக் கருத்துச் சுதந்திரமும் கருத்துகளை வெளியிடும் சுதந்திரமும் உறுதி செய்யப்பட்டு அவற்றின்வழி, பத்திரிகைச் சுதந்திரம் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

## பார்வை நூல்கள்

### தமிழ்

1. கந்தசாமி, பா., தமிழ் இதழ்கள் - ஒரு வரலாற்றுப் பார்வை (கட்டுரை), வரலாற்றுத் துறை மற்றும் அரிய கையெழுத்துச் சுவடித் துறை கருத்தரங்கம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1995
2. சதாசிவன், D., சென்னை மாகாணத்தில் பொதுமக்கள் கருத்து வளர்ச்சி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1983
3. சாமி, அ.மா., தமிழ் இதழ்கள் - தோற்றம் வளர்ச்சி, நவமணிப் பதிப்பகம், சென்னை, 1987
4. சாமி, அ.மா., 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள், நவமணிப் பதிப்பகம், சென்னை, 1992

### ஆங்கிலம்

1. Aurobindo Mazumdar, Indian Press and Freedom Struggle (1937 - 1942), Orient Longman Limited, Calcutta, 1993
2. Chalapathi Rau, M., The Press, National Book Trust, New Delhi, 1974
3. Ganesan, A., The Press in Tamilnadu and the Struggle for Freedom (1917-1932), Mittal Publications, Delhi, 1988
4. Nair, A.A., Peeps at the Press in South India, Madras, 1966
5. Natarajan, J., History of Indian Journalism, Publications Division, New Delhi, 1955

6. Natarajan, S., History of the press in India, Asia publising House, Bombay, 1962

7. Nirmal, C.J., The Lajpatrai Centenary Lectures, 1970-71, Journal of the Madras University, Vol.XLII, Nos.1&2 Jan-July, 1970 (Reprint)

8. Sita Bhatia, Freedom of Press: Politico - Legal Aspects of Press Legislations in India, Rawat Publications, Jaipur and NewDelhi, 1977

9. Sunit Ghosh, Modern History of Indian Press, Cosmo Publications, New Delhi, 1998

10. Fortnightly Reports, Govt. of Madras, Tamilnadu Archives, Chennai

11. Native News Paper Reports, Govt. of Madras, Tamilnadu Archives, Chennai

## அகில இந்திய வானொலி நிலையம் - சென்னை
## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
## டாக்டர் மா. இராசமாணிக்கனார்
## இதழியல் ஆய்வு மையம்

இணைந்து நடத்தும்

# இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்
# நான்காம் கருத்தரங்கம்

## *அழைப்பிதழ்*

(இதழியல் கருத்தரங்கம் - 5)

அன்புடையீர்,

வணக்கம்.

'இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்' என்னும் பொருள் பற்றிய நான்காம் கருத்தரங்கு, சென்னை வானொலி நிலையம் பல்தட ஒலிப்பதிவு அரங்கில் (காமராசர் சாலை, சென்னை-4) 29-07-1998, புதன்கிழமையன்று - விடுதலைப் பொன்விழா - சென்னை வானொலி நிலைய மணிவிழா - சிறப்புக் கருத்தரங்க நிகழ்ச்சியாக நிகழவுள்ளது.

அனைவரும் வருகைதந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

**இயக்குநர்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

**நிலைய இயக்குநர்**
சென்னை வானொலி நிலையம்
சென்னை

**இயக்குநர்**
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
இதழியல் ஆய்வு மையம், சென்னை

அகில இந்திய வானொலி நிலையம் - சென்னை

நிலைய இயக்குநர்

திருமிகு *பா.ரா. குமார்* அவர்கள்

தலைமையில்

29-07-1998 அன்று முற்பகல் 10.00 மணியளவில்

திருமிகு *டி.என். இராமச்சந்திரன்* அவர்கள்

கருத்தரங்கத்தைத் தொடங்கி வைத்து

## இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள்

(தொகுதி - 2)

என்னும் நூலினை வெளியிடுவார்கள்



சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறைத் தலைவர்

பேராசிரியர் முனைவர் *பொற்கோ* அவர்கள்

தலைமையில்

29-07-1998 அன்று மாலை 5.00 மணியளவில்

பேராசிரியர் முனைவர் *இந்திரா பார்த்தசாரதி* அவர்கள்

கருத்தரங்க நிறைவுரை நிகழ்த்துவார்கள்

## முதல் அமர்வு

**29-07-1998** **முற்பகல் 11.00 - 1.00**

**தலைமை :**
**முனைவர் இரா. இளவரசு**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| முனைவர் இராம. குருநாதன் | கலாநிலையம் |
| முனைவர் பழ. அதியமான் | கலைமகள் (புதுவை) |
| திரு. மா.ரா. அரசு | தமிழ் இதழியல் வரலாற்றில் கருத்துப்படங்கள் |
| முனைவர் இரா. இரகுபதி | மணிக்கொடி |
| முனைவர் பா. கந்தசாமி | இதழியல் சட்டங்கள் |

## இரண்டாம் அமர்வு

**29-07-1998** **பிற்பகல் 2.00 - 5.00**

**தலைமை :**
**முனைவர் இ. சுந்தரமூர்த்தி**

| கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|
| திரு. பெ.சு. மணி | இதழாளர் சுப்பிரமணிய சிவம் |
| முனைவர் ந. கடிகாசலம் | வைசியமித்திரன் |
| திரு. இராம. வேணுகோபால் | பிரசண்ட விகடன் |
| திருமதி அ. திரிபுரசுந்தரி | விவேகபோதினி |
| முனைவர் மு. செல்லன் | கலைமகள் (சென்னை) |

## கருத்துரையாளர்கள்

திரு. விஜய திருவேங்கடம்

முனைவர் தி. தயானந்தன் பிரான்சிஸ்

திரு. புஷ்பா தங்கதுரை

திரு. மாலன்

திரு. லேனா தமிழ்வாணன்

திருமதி மஞ்சுளா ரமேஷ்

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் 3 தொகுதிகள் | 260.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்கப்பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் - நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |

---

**519 இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் ரூ 45.00**

**தொகுதி - 4**